உ

ஓம்.

வேத புருஷாய நம:

(Krishna-Yajur-Veda.)

# The Taittiriya Samhita.

(in Tamil.)

## 1st Kanda.

By

*Brahmasri R. Ramachandra Sastriar. B.A.L.T.*

*Headmaster, Board High School, Lalgudi.*

(கிருஷ்ண யஜுர்வேதம்)

# தைத்திரீய ஸம்ஹிதை.

முதற்காண்டம்.

இது

ஸாயண பாஷ்யத்துக்கு இணங்க

லாலுகுடி, போர்ட் ஹை ஸ்கூல், தலைமை உபாத்தியாயர்,

பிரஹ்மஸ்ரீ

ஆர். ராமச்சந்திர சாஸ்திரியாரவர்கள், B. A. L. T.,

மொழிபெயர்த்தியற்றியது.

Published by

The Vedic Bureau, Anandasrama, Coonoor, R. S., Nilgiris.

PRINTED AT

THE FRASER PRESS, COONOOR.

1920



---

புத்தகம் வேண்டுவோர், மானேஜர், வேதபீரோ, ஆநந்தாச்ரமம், குன்னூர் ஆர் எஸ். என்று எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

# NOTICE.

---

**The Rig-Veda-Samhita in Tamil Verse Ashtakas I & II, with an elaborate and useful Commentary, can be had in Calico marble Binding for Rs. 10 each Those that purchase both the volumes will get a Commission of 10 Per cent. As Vol. 1 is almost exhausted, those that order must be prepared to take vol II alone in case copies of the first volume cannot be had.**

Please apply to:—

**The Manager, The Vedic Bureau,**
**Anandasrama, Coonoor, R. S. Nilgiris.**

ரிக்வேதம் (தமிழ்ச்செய்யுள்) மூலமும் "நவநீதம்" என்னும் உரையும், கிருஷ்ண யஜுர்வேத தைத்திரீய ஸம்ஹிதையும் சேர்ந்து மாத ஸஞ்சிகையாக வெளிவருவது. வருஷ சந்தா ரூபாய் 6. ரிக்வேதம் முதலஷ்டகம் பைண்ட் செய்த புத்தகங்களை யிருப்பதால் சந்தாதாரர்களுக்கு 8 ரூபாய்க்குக் கொடுக்கப்படும். இனிவரும் சந்தாதாரர்கள் அப்படியே சேரவேண்டும்.

ரிக்வேதம்

முதலஷ்டகம் காலிகோ மார்பில் பைண்டிங் விலை ரூ 10
2வது அஷ்டகம் „ „ „ 10

இரண்டுஞ் சேர்த்து வாங்குவோர்க்கு நூற்றுக்குப் பத்து கமிஷன் கொடுக்கப்படும். முதலஷ்டக மில்லாவிட்டில் இரண்டாவது அஷ்டகம் மாத்திரம்தான் அனுப்பப்பெறும்,

மேல்விலாசம்:—மானேஜர்,
வேதபீரோ, ஆநந்தாச்ரமம்,
குன்னூர் R. S, நீலகிரி.

# முன்னுரை.

அன்பும் கனமும் வாய்ந்த ஐயன்மீர்,

குருநாதனது கிருபையினால் வேதத்தை மொழிபெயர்ப்பதெனத் தொடங்கும்போது ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வமெனக்கூறும் தகுதிபற்றி ரிக்வேதத்தை முதலிற் றொடங்கின்றோமாயினும், ஸாயணர் தமது ரிக்வேத உபோற்காதத்தில், "அர்த்தக்ஞானஸ்யது யக்ஞாநுஷ்டாநார்த்தத்வாத் தத்ர து யஜுர் வேதஸ்ய ஏவ ப்ராதாநத்வாத் தத்வ்யாக்யாநமேவ ஆதௌ யுக்தம்" என்று தாம் யஜுர் வேதத்தின் பாஷ்யத்தை முதலிற் கூறியதன் காரணத்தைச் சொல்லியுள்ளதைக் கண்ட நான் முதற்கொண்டு தைத்திரீய ஸம்ஹிதையைமுதலிற்றொடங்காது விட்டோமே யென்ற விசன மேற்பட்டுகொண்டேயிருந்தது. அவ்விசனத்தை மாற்றவும்,நம தமிழ் நாட்டிலுள்ள அந்தணர் பலரும் கிருஷ்ண யஜுர் வேதிகளே யாதலின் அவர்களுக்கு ஓர் நற்றுணை புரியவும், கடவுளது அநுக்கிரக மேற்பட்டதென்னும்படி பிரஹ்ம ஸ்ரீ R. ராமச்சந்திர சாஸ்திரியாரவர்கள் B. A. L. T. வெளிவந்து தைத்திரீய ஸம்ஹிதையை மொழிபெயர்த்துத் தருவதற்காக நம் தமிழுலகம் பெரிதும் கடப்பாடுடையதாகும். நமது நண்பர்களைப் பிரார்த்திப்பது இனிப் பொருட் கொடையன்று. இவ்வேத பத்திரிகை பல விடங்களிலும் பரவுமாறும், வேதபீரோவின் வேலை இடையூறின்றி நடைபெறுமாறும் வேண்டிய சந்தாதாரர்களைச்சேர்த்துக் கொடுத்தருள்வது மாத்திரமே. பல்லாயிர வருஷங்களாகத் தமிழ்க்கண் வராது நின்ற இவ்வேதம் இப்பொழுது தமிழில் பயிலத் தலைப்படும்போது அதனைத் தமிழர் ஆதரிக்கத் தவறுவார்களானால் அதனது குழவிப் பருவத்திலேயே இடர்ப் படுதலும் கூடும். ஆனதுபற்றி இத்தமிழ்வேதக் குழவியின் றளர்நடையைக் கண்டு மனங்கனிந்து, அதனைக் பாராட்டிப் போற்றி, வேண்டுவன ஊட்டி, அதன் வளர்ச்சியை நோக்குவதே கண்ணுங் கருத்துமாக நின்று, தக்க உதவிபுரிவார்களாகவெனப் பிரார்த்திக்கிறோம்.

இவ்வேதமோ அழியாமொழி. அதனைப் பண்டிதபாமரர் யாவரும் இலகுவில் படித்து அறிந்து உய்திபெறுவான் யாம் செய்யும் தொழிலோ ஒழியாத்தொழில். இத்தொழிற்கு இப்பொழுது இடையூறு நேரின் இனியொருவரும் இதனை மேற்கொள்ளவே மாட்டார்களென்பது நிச்சயம். இத்தகையவேலைகளெல்லாம் மன்னர்களாலும் தனவந்தர்களாலும் நடைபெற்று வருபவை. தற்காலம் எமது பத்திரிகையின் வருஷ சந்தாதாரர்களே எமது பீரோப் போஷகர்களும் தனவந்தர்களும் ஜமீன்தார்களும் மன்னர்களுமானதுபற்றி எவ்வளவுக்கு அதிகமாக அவர்கள் பெறும் பத்திரிகைகளைப் பரவச் செய்து பின்னும் அதிகமாகச் சந்தா தாரர்களைச் சேர்த்துத் தருவார்களோ அவ்வளவுக்கு அதிகமாக இவ்வேதத் திருப்பணி விரிவாகவும் விரைவாகவும் நடைபெறும். ஐஹிக ஆமுஷ்மிக பலன்களைக் கற்பதருபோல நின்றளிக்கும் வேதங்களும் பலருடைய இல்லங்களையும் நல்லிய மாக்குவதுடன் தனதானிய புத்திராபிவிருத்தியையுந் தந்து அவ்வில்லத்தார்களுக்கு க்ஷேமத்தையும் கொடுத்தருளும். அதனால் இவ்வேதத்தை வாங்கித் தமது கிரஹங்களிற் பூஜார்ஹமாக வைப்பதற்காக உபயோகிக்கும் வருஷசந்தா ரூபாய் ஆறையும் ஒரு செலவாகவே கவனிக்காதிருப்பார்களாக.

மானேஜர், வேதபீரோ,
ஆநந்தாச்ரமம், குன்னூர் R. S., நீலகிரி.

## ஸாயணர் செய்த

# யஜுர்வேத பாஷ்யத்தின் உபோத்காதம்.

வேதம் என்பது என்ன? அதன் லக்ஷணம் யாது? அதன் விஷயம், ஸம்பந்தம், பிரயோஜனம், (இவை யாவை)?(அதனை அத்யயனம் செய்ய) அதிகாரிகள் (யாவர்)? அது (உண்மை என்பதற்கு) பிரமாணம் என்ன? இவை யனைத்தும் இல்லாவிடில் இவ்வேதத்திற்கு வியாக்யானம் எழுத வேண்டியதில்லை யல்லவா? "இஷ்டப்ராப்திக்கும், அநிஷ்ட நிவர்த்திக்கும் (மார்க்கத்தைக் காட்டுகிற) அலௌகிகமான (உலக அறிவிற்கு எட்டாத) உபாயத்தை எந்த நூல் அறிவிக்கிறதோ அதுவே வேதம்" என்று (முன்னோரால்) கூறப்படுகிறது. பிரத்யக்ஷம், அநுமானம் (நேரில் பார்ப்பது, ஊகிப்பது)என்ற உலக அறிவை ஊட்டக்கூடிய(தர்க்க ஸம்பந்தமான) ப்ரமாணங்களை விலக்க வேண்டுமென்றே "அலௌகிகம்" என்றார். (சுகமாக) அநுபவிக்கப்படுகிற புஷ்பம், சந்தனம், பெண்பாலார் முதலியவைகளால் இஷ்டப்ராப்தியும், நோய்களைத் தீர்த்துக்கொள்வதற்கு மருந்தை உட்கொள்ளுதலால் அநிஷ்ட நிவர்த்தியும் ப்ரத்யக்ஷமாக விளங்கும். (இவ்வாறாகவே) தான் இனி அனுபவிக்கப்போகிற விஷயமும் அநுமானத்தால் விளங்கும். ஜன்மாந்தரங்களில் ஏற்படக்கூடிய இன்ப துன்பங்களை இவ்வநுமானத்தினாலேயே அறியக் கூடுமோ எனில், பொதுவாய்ச் (சிறிது அநுபவங்கள்) தெரியக்கூடினும் அதன் விசேஷங்கள் அறிய வியலாவாம். ஜ்யோதிஷ்டோமாதி யாகங்கள் இஷ்டப்ராப்திக்குக் காரணமென்றும், கஞ்சா தின்பதை யொழித்தல் அநிஷ்ட பரிகாரத்திற்குக் காரணமென்றும் இவ்வாறான விஷயங்களை வேதத்திலில்லாத ஆயிரக்கணக்கான அனுமானங்களாலும், தர்க்கத்தில் வல்லவர்களால் சாதிக்க வியலாது. ஆகையால், "வேதம்" அலௌகிகம்" என (மேலே குறித்த) லக்ஷணத்திற்கு அதிவ்யாப்தி இல்லை. ப்ரத்யக்ஷத்தாலாவது அநுமானத்தாலாவது அறியக்கூடாத விஷயத்தை வேதத்தினால் அறியக்கூடுமாதலால் வேதம் வேதமாகிறது.

இவ்வுபாயமே வேதத்தின் விஷயமாகும். இதை அறிவதுதான் ப்ரயோஜனம். இவ்வறிவை வேண்டுபவனே அதிகாரியாவான். இவனுக்கும் வேதத்திற்குமுள்ள ஸம்பந்தம், உபகாரம் செய்பவனுக்கும் பெறுகிறவனுக்கும் உள்ளசம்பந்தம் போன்றது. இவ்வாறாயின், ஸ்த்ரீகள் சூத்ரர்கள் முதலிய யாவரும் அதிகாரிகளாகமாட்டார்களா? "இஷ்டம் நிறைவேற வேண்டும், அநிஷ்டம் விலகவேண்டும்" என்ற ஆசை எல்லோருக்கும் பொதுவல்லவா? எனச்சொன்னால், ஸ்த்ரீ சூத்ரர்கள், விஷயம் தெரிந்துகொள்ள வேண்டியவர்களாயினும் வேறு காரணத்தால் இவர்களுக்கு வேதாதிகாரம் மறுக்கப்பட்டிருக்கிறது. உபநீதனுக்கு(காயத்திரி யுபதேசம் பெற்ற த்விஜனுக்கு) மாத்திரம் வேதாதிகாரம் சொல்லப்பட்டிருத்தலால் உபநீதரல்லாத அவ்விருவர் விஷயத்தில் இந்த வேதாத்யயனம் அநிஷ்டத்திற்குக் காரணமாகுமெனத் தெரிவிக்கின்றார். அப்படியாயின், அவர்கள் அவ்வுபாயங்களை அறிவது எவ்வாறோவெனில், புராணம் முதலியவைகளால் தானென நாம் சொல்லுகிறோம். வேதத்தை ஸ்த்ரீ சூத்ரர்கள் கேட்கக்கூடாதாதலின் வ்யாஸ முனிவரால் மகா பாரதம், கருணையோடுசெய்யப்பட்டிருக்கிறது. ஆகையால், உபநயனம் செய்யப்பெற்ற பிராஹ்ம க்ஷத்திரிய வைசியர்களுக்கு மாத்திரம் வேத ஸம்பந்தம் உண்டு.

# தைத்திரீய ஸம்ஹிதை.

வேதத்தின் ப்ரமாண விஷயத்தில் (மேலே சொன்னபடி லௌகிகப்ரமாணங்களான ப்ரத்யக்ஷாநுமானங்களுக்கு எட்டாத) விஷயங்களை அவ்வேதமே தெரிவித்தலால், அதற்கு அதுவே போதுமான ஆதாரமாகிறது. மனிதனது வாக்யம் விஷயத்தை அறிவித்தாலும், ஸத் புருஷர்களுக்குக்கூட (சிலவேளை) மயக்கம் ஏற்படும் காரணத்தால், அவர்களுடைய மொழி பிழையற்றது என நிச்சயிக்க மூலகாரணத்தை நாடுகிறோம். வேதம் என்றைக்கும் உள்ளது. (மனுஷ்ய வாக்குப்போலச், சொல்லுகிறவனது தவறு ஏற்படுமோ என்ற ஸம்சயம் (வேத விஷயத்தில்) உதயமாகாததால், (மூலப்ரமாணத்தைத் தேடுகிற விஷயம்) வேதத்துக்குப் பொருந்தாது. இதே விஷயத்தை,

"பாதராயணருடைய ஆவசிகம் இல்லாததால் அதே ப்ரமாணம்"

என, ஜைமினி என்பவர், தமது, (1-1-4-5) சூத்திரத்தில் சொல்லியிருக்கிறார்.

இஃதிருக்கக், காளிதாஸன் முதலிய கவிகளின் வாக்யங்கள் போலவே வேதமும்,

"ரிக்குக்கள், ஸாமங்கள் உண்டாயின. சந்தஸ்கள் பிறந்தன. அதனிடமிருந்தே யஜுர் வேதமும் பிறந்தது."

என, பிரஹ்மத்தின் காரியத்தைத் தெரிவித்தலால் இவ்வேதமும் என் புருஷ வாக்யமாகாது? ஆகையால்தான், பாதராயணர்,

"சாஸ்திரம் பிறந்த இடம்" (1-1-3.)

என்றசூத்திரத்தில் பிரஹ்மமே வேதத்திற்குக் காரணம் என்று சொன்னார். சுருதி ஸ்ம்ருதிகளினால் அவை நித்யமென நாம் அறிதலால் அவ்வாறு சொல்லவும் இயலவில்லை.

"விசேஷமான ரூபத்தோடு நித்யமான வாக்கால்————"

என வேதம் சொல்லுகிறது.

"ஆதி அந்தமில்லாமல் எந்நாளும் உள்ள வாக்கு. ஸ்வயம்புவால் (தானாகஉண்டானவனால்) வெளியிடப்பட்டது."

என ஸ்ம்ருதி சொல்கிறது. பாதராயணரும், தேவதாதிகாரத்தில் (தேவதைகளைப்பற்றிப்பேசும்போது)

"அதனால்தான் நித்யத்தன்மை."

என, (1-3-29) சூத்திரத்தில் சொன்னார். (இவ்விஷயம்) ஒன்றாக்கொன்று பொருந்ாதேயெனில், நித்யத்தன்மைக்கு வ்யவஹாரம் ஏற்படுங்காரணத்தால் பொருந்துமென்றே சொல்லவேண்டும்.

ஸ்ருஷ்டிக்குப் பின்னும் ப்ரளயத்துக்கு முன்னும் வ்யவஹாரகாலம். அப்போது உற்பத்தி விநாசங்கள் ஸம்பவிக்கும். காலம் ஆகாசம் முதலியன எப்படி நித்யமோ அப்படியே வேதமும், காளிதாஸன் முதலியவர்கள் வாக்

யங்கள்போல் புருஷ வாக்யமல்லாததால், வ்யவஹார காலத்தில் நித்தியமே யாம். ஆதி சிருஷ்டியிலேயே, காலம், ஆகாசம் முதலியனபோலப் பிரமனி டமிருந்து வேதம் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆகையால், முன் சொன் னவாறு பரஸ்பர விரோத தோஷம் ஏற்படாது.

பிருஹ்மத்துக்கு ஒருவிதமான தோஷமுமில்லை யாதலால் வேதத்துக் கும் கர்த்ரு (செய்தவன்) தோஷம் ஏற்படாது. ஆகையால், ஸ்வதஸ்ஸித்த மான ப்ராமாண்யம் வேதத்தினிடமே இருக்கிறது.

ஆனதால், லக்ஷணம், ப்ராமாண்யம் இவை இருப்பதாலும், விஷயம் ப்ர யோஜனம் இவைகளின் ஸம்பந்தத்தாலும், அதிகாரி இருப்பதாலும், வேதம் ப்ரமாணமென்று திடமாக இருந்தாலும், வேதத்திற்கு வ்யாக்யானம் செய் வது நியாயம் என்றே ஏற்படுகிறது. மேற்சொன்னவாறு விஷய ஸம்பந்தா திகாரங்கள் உண்டென்ற அபிப்ராயத்தை அனுஸரித்து,

"வேதத்தை அத்யயனம் செய்யவேண்டும்."

என்று, அத்யயனம் விதிக்கப்பட்டிருக்கிறது.

"அத்யயனம்" என்ற பதத்திற்கு தண்டாகாரமான வாசிப்பு என்று அர்த்தம் இருப்பதாலும், அர்த்தம் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற விதி இல்லாததாலும், வேதத்திற்கு வ்யாக்யானம் வேண்டியதில்லை யெனச் சொல்லக்கூடும். அந்த விதிக்கு அர்த்தம் தெரிந்துகொள்ளும் வரையில். வேதபாடம் செய்யவேண்டியதுதான் என்பது கருத்து. பட்டர் மதத்தை அநுஸரிக்கிறவர்கள் இதே விஷயத்தை அநேகவிதமாக விஸ்தரிக்கிறார்கள்.

"அக்நி ஸம்பந்தமில்லாத காய்ந்த விறகு எவ்வாறு (ஒளியோடு) விளங் காதோ, அவ்வாறே அர்த்தம் தெரிந்துகொள்ளாமல் வேதபாடத்தை ஓது வதும் விளங்காது."

என்றும்,

"வேதத்தை அத்யயனம் செய்து, அதன் பொருளைச் செவ்வையா கத் தெரிந்துகொள்ளாதவன் சுமைதாங்கும் கட்டைபோல் ஆகிறான்".

என்றும்,

"எவன் அர்த்தத்தை அறிகிறானோ அவன் ஸகல க்ஷேமங்களையும் அடைந்து, ஞானத்தினால் பாபங்களை உதறிப்போக்கிவிட்டுப் பரமப தவியை யடைகிறான்."

என்றும்,

"பிராஹ்மணன், ப்ரதிப்ரயோஜனத்தைக் கருதாமல் வேதத்தை அத்யயனம் செய்து அதன்கருத்தையும் தெரிந்துகொள்ள வேண்டி யது." என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

## தைத்திரீய ஸம்ஹிதை.

இங்ஙனமாகக், கருத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமெனத் தனியாக (மேற்குறித்தவாறு) விதி ஏற்பட்டிருப்பினும், அத்யயனம் என்பதற்கு (பொருளில்லாத) பாடமெனப் பொருள் கூறி,

"வேதத்தின் கருத்தைத் தெரிந்து கொள்ளாமலே, யாகங்கள் செய்வதற்கு ஏற்பட்ட விதிகளைச் செல்லுகிற கல்ப சூத்திரங்களைக் கொண்டே அநுஷ்டானங்கள் செய்துவிடலாம் ஆகையால், (வேதாத்யயனவிஷயத்தில்) அர்த்தத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென விதியில்லை."

எனச், சங்கரதர்சனத்தைக் கைக்கொண்டவர்கள் கூறுகின்றனர். ஆதலால், இந்த விதிக்கு ஏற்ப, (அர்த்தமில்லாத) வேதபாடத்துக்கே கொஞ்சம் புண்யம் ஏற்படுமல்லவா?

"எவன் அசுவமேதம் செய்கிறானோ அவன் ஸர்வபாபங்களையும் போக்கிக்கொள்கிறான். எவன் இவ்விஷயத்தை இவ்வாறாக அறிகிறானோ அவனும் மேற் கூறியபடி பாபங்களிலிருந்து விடுபடுகிறான்."

என வேதம் சொல்வதால் அநுஷ்டானத்துக்கும், ஞானத்துக்கும் தனித் தனி பயனுண்டு.

வேதாத்யயனம் செய்வதால் லகுவாய்ப் பயன் கிடைக்கக்கூடியதாயிருக்கச், சிரமஸாத்யமான அநுஷ்டானம்எதற்கென்று சொல்வது ஒவ்வாது? ஏனெனில், பிரஹ்மஹத்யாதி தோஷங்கள் மனது, வாக்கு முதலியவைகளாலும் ஏற்படக்கூடுமாதலால் (அது விஷயத்தில்) தாரதம்யமுண்டு. பிராஹ்மணனைக் கொல்வதாக மனதினால் எண்ணலாம். வார்த்தையால் ஏவலாம். பிறனைக்கொண்டு செய்விக்கலாம். தானும் செய்யலாம். (இவ்வாறே) பன்முறை செய்திருக்கக்கூடும். எனவே, பிரஹ்மஹத்தியிலும் சிறிது பெரிதெனப்பல விதமாகையால் அதனைப் போக்கடிக்க மார்க்கமும் எண்ணிறந்தன. ஸ்வர்க்கங்கள் பலவிதம் எனச்சொல்லியது போலவே தோஷங்களும் பல வகையாம்.

"ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் அக்நி ஹோத்ரம் செய்யவேண்டும்."

"ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் தர்சபூர்ணிமா யாகத்தைச் செய்ய வேண்டும்."

"ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் ஜ்யோதிஷ்டோமம் என்ற யாகம் செய்ய வேண்டும்."

இவ்வாறான நாநாவித கர்மாக்களுக்கு ஒரேவிதமான பலன் ஏற்படாதாகையால் ஸ்வர்க்கம் பலவிதமென்றே கொள்ளல் வேண்டும்.

"கர்மாநுஷ்டான காலத்தில் தெரிந்து செய்வதுதான் அநுஷ்டான பலனை அதிகமாக்குகிறது."

எனவும், (அர்த்தம்) தெரிந்தவன், தெரியாதவனாகிய இருவரும் கர்மா

# ஸாயணர் உபோத்காதம்.

வைச் செய்கிறவர்களாயினும் அறிவோடும் அறிவில்லாமலும் செய்யப்படுகி
ற கர்மாவின் ப்ரயோஜனத்தை குறித்துச் சொல்லுவதால்

"அறிவோடு செய்வதற்கே பயனதிகம்."

எனச்சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வாக்யம், அங்கோபாஸ்தி விஷயம் என்றால், அஃதில்லை. ந்யாயம் (Law) என்பது எல்லா விஷயங்களுக்கும் பொதுவானது. இந்த விஷயத்தைப் பலப்படுத்த இடமுண்டு. ப்ரஜாபதி, ஸோம யாகங்களுக்குப் பிறகு அக்நிஹோத்ரம், பௌர்ணமாஸ்யா, அமாவாஸ்யா என்றபெயர்களுள்ள ஒன்றற்கொன்று ஏற்றத் தாழ்வான யாகங்களைப் படைத்தார்.

> ஸோம யாகங்களையும், அக்நிஹோத்திரத்தைக் காட்டிலும் மேலான அக்நிஷ்டோமம், உக்தம், அதிராத்ரம் என்ற பெயருள்ள ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்வான யாகங்களையுஞ் சிருஷ்டிசெய்து, முதன்மையாகப் படைத்த அக்நிஹோத்ரம் முதலியவைகளில் அபிமான விசேஷத்தால் இருவகைகளையும் சீர்தூக்கிப் பார்த்தார். இவ்வாறு ன வ்ருத்தாந்தங்களை அறிந்தவனுக்கு அக்நிஹோத்ரங்களாலேயே அக்நிஷ்டோமாதியான யாகங்களின் பயன் சித்திக்கின்றது.

என, ப்ராஹ்மணம் அடியிற்கண்டபடி சொல்லுகின்றது.

> "ப்ரஜாபதி யாகங்களை உண்டாக்கினர். அவையாவன:— அக்நிஹோத்ரம், அக்நிஷ்டோமம், பௌர்ணமாஸீ, உக்தம், அமாவாஸ்யா, அதிராத்ரம் என்பவையாம். அக்நிஹோத்ரம் எவ்வளவோ அவ்வளவு அக்நிஷ்டோமமும். எவ்வளது பௌர்ணமாஸியோ அவ்வளவு உக்தமும். அமாவாஸ்யாஎவ்வளவோ அவ்வளவு அதிராத்ரமுமாம். எவன் இவ்வாறாகத் தெரிந்து அக்நிஹோத்ரம் செய்கிறானோ, அவன் அக்நிஷ்டோமத்தினால் அடையும் பலனையே அடைகிறான். எவன் இப்படி யறிந்து பௌர்ணமாஸியைச் செய்கிறானோ, அவன் உக்தத்தால் அடையும் பலனளவு பயனை யடைகின்றான். எவன் இவ்வாறறிந்து அமாவாஸியைச் செய்கிறானோ, அவன் அதிராத்ரத்தின் பயனை யடைகின்றான்.

ஆகையால், இதனை யறிந்தவனுக்கு எந்த யாகங்களிலும் பயன் ஒன்றே என அறியவேண்டியது. மேலும், அந்தந்த விதிகளின் பக்கத்திலேயே,

"எவன் இப்படி அறிவானோ"

என்ற வாக்யம் (அர்த்தத்தை) அறிவதனாலேயே பயனுண்டு எனச் சொல்லும். இஃது அர்த்தவாதம் என்றால் இருக்கட்டும். அவ்வாறான வாக்யங்கள், விதித்த விதிகளின் ப்ரயோஜனத்தைத் தூக்கிச்சொல்ல ஏற்பட்டிருப்பதால் அக்குற்றத்தைப் பொறுப்போமாக.

> "ஒரு சப்தம், எக்கருத்தைச் சொல்லுமோ அதே அந்தச் சப்தத்துக்குப் பொருள்."

# தைத்திரீய ஸம்ஹிதை.

என்ற ந்யாயத்தால் அப்பதத்தின் ஒழுங்கான அர்த்தத்தில் அது உண்மையாகாது எனக்கூறுதலுந் தகாது.

> சொல்லவந்த விஷயம் மஹா தாத்பரியமாக இருந்தாலும், நம்மில் ஏற்படக்கூடியதான சப்தத்தின் சொந்த அர்த்தம் வராதென்று சொல்ல முடியாது.

"கற்கள் மிதக்கின்றன" என்ற அர்த்தவாதத்துக்கும் பதத்தின் அர்த்தமே உறுதியாகட்டும் என்றால், அது (ப்ரத்யக்ஷப்ரமாணத்துக்கு) ஒத்துக் கொள்ளப்படமாட்டாது. ஆதலால் அவ்வாறு சொல்லல்கூடாது. "வருஷம் இருமுறை சாகுபடி செய்யப்படுகிறது." இதுபோன்ற அர்த்தவாத வாக்யங்களுக்கு ப்ரத்தியக்ஷப்ரமாண விஷயத்தில் விரோதமிராவிடினும் ஏற்கனவே உள்ளதைத் திரும்பச் சொல்வதால் அந்த சப்தத்திற்கே உண்மை இல்லாமலிருக்கிறது. புதிதாகத் தெரிவிக்கவேண்டுமென்ற கருத்தைக்கொண்ட வசனங்கள் திரும்பச்சொல்லப்படுவன அல்ல. வேறு ப்ரமாணங்களாலும் தடைபடா.

ஆகையால், அர்த்தவாதமாக விருந்தாலும் இந்த வசனங்களுக்குச் சொல்லும் அர்த்தமே சரியாகும். இல்லாவிடில், மந்திரங்களில் சொல்லப்படுகிற அர்த்தவாதங்களால் தேவர்களுக்கு அவயவங்கள் முதலியன உண்டென்று சொல்வது பிழையாகும்.

அர்த்தவாதங்கள் மூன்றுவகை:—

1. அர்த்த வாதத்தில் பிரமாணங்களுக்கு மாறாயிருந்தால் குணத்தைச் சொல்லாகிப்பது (குணவாதம்).

2. பிரமாணங்களுக்கு ஒத்து இருப்பின் அநுவாதம் (ஏற்கனவே உள்ளதைச் சொல்வது).

3. அர்த்தம் சித்திக்காமலிருந்தால் பூதார்த்தவாதம்.

அதிகமாய்ச் சொல்லவேண்டியதில்லை. வேதார்த்தத்தை அறிவதால் புண்யம் உண்டென்பது நிச்சயம். ஆகையால், வேதார்த்தத்தை விளக்குவதற்காக வ்யாக்யானம் செய்கிறோம். வேதத்தின் விஷயம், இஷ்டப்ராப்திக்கும், அநிஷ்ட நிவர்த்திக்கும் ஏற்பட்ட உபாயமென்று மொத்தமாகக் காண்பித்தோம். இனி அதனை விளங்கக்கூறித் தெளிவுறச் செய்வோம். வேதம் இரண்டு காண்டங்களுள்ளது. நித்யம், நைமித்திகம், காம்யம், நிஷித்தம் என்ற நான்குவகையான கர்மாக்களை முந்தியதான காண்டம் கற்பிக்கும்.

"ஜீவனோடிருக்கும் வரையில் அக்நி ஹோத்ரம் செய்யவேண்டும்." இதுபோன்ற வாக்யங்கள், கட்டாயம் செய்யவேண்டியதைச் சொல்வதால், நித்ய கர்மாவைப் போதிப்பனவாம்.

"வீட்டை அக்நி வாதையிலிருந்து காப்பாற்ற என்னை முன்னிட்டுக் கபாலங்களில் (தட்டுகளில்) ஹவிஸ்ஸை ஆஹுதி செய்யட்டும்."

## ஸாயணர் உபோத்காதம்.

என்ற சுருதி வாக்யம், (இக்காரியம்) கட்டாயம் செய்யப்பட வேண்டியதில்லை யென்றும், ஒருகாரணத்தை முன்னிட்டுச் செய்யவேண்டுமென்றும் சொல்லுதலால், நைமித்திக கர்மாவைப் பற்றியதாம்.

"பசுவை வேண்டுபவன், சித்ரையால் (பலநிறமுள்ள பசுவால்) யாகம் செய்யவேண்டும்."

இது போல்வன காம்ய கர்மா.

"அழுக்கு வஸ்த்ரம் கட்டினவனோடு பேசக்கூடாது. அவனுடன் உட்காரக்கூடாது."

முதலியன நிஷித்த கர்மாவைப் புகட்டும்.

இவைகளுள், நித்திய நைமித்திக கர்மாக்களைச் செய்வதால், அவைகளைச்செய்யாது விடுவதால் நேரக்கூடிய தோஷங்கள் நிவாரணமாம்.

"விதித்த கர்மாவைச் செய்யாததாலும், நிஷித்த கர்மாவைச் செய்வதாலும், இந்திரிய நிக்ரஹம் செய்யாததாலும் மனிதன் பிரஷ்டனாகிறான்."
என, யாக்ஞவல்க்யர் தனது ஸ்மிருதியில் எழுதுகிறார்.

"ஜீவனோடிருக்கும் வரையில் அக்நி ஹோத்ரம் செய்ய வேண்டும்."
என்ற இதுபோன்றவை வேதவாக்யங்களில் சொல்லப்படாமலிருந்தாலும், இக்கர்மாக்கள் விடக்கூடாதனவாதலால் இவைகளைத் தவறாது செய்பவன் தனக்கு அபீஷ்டமான ஸ்வர்க்கத்தை அடைகின்றான்.
இதனை,

"பழத்துக்காக ஊன்றப்பட்ட மாமரம், நிழலையும், வாஸனையையும், தருவதுபோலத் தர்மத்தை அநுஷ்டித்தலால், அர்த்தமும் உடன் விளைக்கும்."

என, ஆபஸ்தம்பரும் குறிக்கின்றார். காம்யகர்மா இஷ்ட பலத்தைக் கொடுப்பதற்குக் காரணமாகுமென்று அந்தந்த விதி வாக்கியத்திலேயே தெளிவாகிறது.

இஷ்ட விகாதமென்ற அனிஷ்டமும் வராது. நிஷித்த கர்மாவைச் செய்யாமல் விலக்குவதால், காமத்தால் செய்யும் அநுஷ்டானபலனுக்கு வரும் நரகமும் நீங்கும். நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்வதால் ஆநுஷங்கிகமாக ஏற்படும் ஸுவர்க்கபலன் மாத்திரமல்ல, மனது சுத்தியை யடைந்து, ஞானம் வேண்டுமென்ற ஆசையடைந்து ப்ரஹ்மஞானத்துக்குக் காரணமாயிருக்கிறது. அப்படியே வாஜஸநேயிகள்:—

"அந்த (ப்ரஹ்மத்தை) வேதாத்யயநத்தாலும் பிராஹ்மணர்கள், யக்ஞத்தாலும் அழிவற்ற தபஸாலும் அறிய விரும்புகிறார்கள்" என்றார்.
"இப்படிப் பூர்வ காண்டத்தாலேயே பாக்கி இல்லாமல் ஸமஸ்த புருஷார்த்தஸித்தி ஆருமானல் உத்தரகாண்டம் வேண்டியதில்லையே"

எனில், கடைசியான புருஷார்த்தமான மறுபடி ஜன்மமின்மை ஏற்படாதாகையால், வேண்டுமென்க. இதைத்தான் அதர்வவேதக்காரர்கள்,“ இவன் ஸோமலோகத்தில் ஐசுவரியத்தை அநுபவித்துவிட்டு மறுபடி ஜனனமடைகிறான்.”

என்று கர்மத்தைக் கைக்கொண்டவர்கள் தக்ஷிண மார்க்கமாய் சந்த்ர லோகத்தையும்பிறகுபுனராவர்த்தியையும் அடைகிறார்கள் என்றனர். ஆதலால் உத்தர காண்டத்தின் (ஞானகாண்டத்தின்) பிரயோஜனம் இதென்று அறிக. மேலான புருஷார்த்தம், என்பது ஸத்தியோ முக்தி என்றும் க்ரமமுக்தி என்றும் இருவிதம் என்க. தத்காலதேகம் விழுந்தவுடனேயே சித்திப்பது ஸத்தியோ முக்தி. உத்தரமார்க்கமாகப் போய் ப்ரஹ்மலோகத்தில் வெகுகாலம் போகங்களை அநுபவித்து அவ்விடம் ஞானோதயமாகி ப்ரஹ்மலோகத்தின் முடிவில் சித்திப்பது க்ரமமுக்தி என்பது.

ஆகையாலே. உத்தரகாண்டமான (ஞான காண்டத்தில்) ப்ரஹ்மோபதேசமும் ப்ரஹ்மோபாஸ்தியும் இரண்டும் சொல்லும். ப்ரஹ்மோபாஸனையைச் சொல்லி ப்ரஹ்மத்தில் நோக்கத்தோடு விக்கிரஹாராதனையை ஸம்ஸார பலனை விரும்புகிறவர்களுக்கு ச்சொல்லும். ப்ரஹ்மத்தைஉபாஸிக்கிறவனும் விக்கிரஹத்தை உபாஸிக்கிறவர்களும் ஒருவிதமாகச்சமானமானவர்களென்றாலும்,உத்தரமார்க்கத்தில்விக்கிரஹாராதனைசெய்தவனுக்குச் சந்திர லோகத்திற்குப்பிறகு ப்ரஹ்மலோகப்ராப்தி இல்லாததால் கிரமமுக்தியும் இல்லாமல் புநராவர்த்தி ஏற்படும்: இது ப்ரஹ்மசூத்திரம் (4. 3. 15)ற் காண்க.

இப்படியே பூர்வகாண்டத்துக்கும் உத்தரகாண்டத்துக்கும் விஷயத்திலும் ப்ரயோஜனத்திலும்வித்தியாஸமிருக்கட்டும். பூர்வகாண்டத்தின் ஆதியில் மற்றக்கர்மத்தைவிட்டு முதலில் தர்சபூர்ண மாஸேஷ்டிகளே சொல்லப்படுவதற்கு காரணம், அவை ப்ரகிருதியாக இருப்பதாலும் வேறொன்றை அபேக்ஷிக்காமலிருப்பதாலும் என்று சொல்லவேண்டும். எதில் அங்கத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்லப்படுகிறதோ அதுதான் பிரகிருதி என்பது. “விசேஷமாக” என்றபதம் உபதேசத்தில் எல்லா அங்கங்களும் விடாமல் சொல்லப்படும் என்பதை யுணர்த்தும். விகிருதிகளில், பிரகிருதியில் சொல்லப்படாமல் சிறப்பாயுள்ள அங்கங்கள் சொல்லப்படும். ஆகையாற்றான் ப்ரகிருதியை முதலில் சொல்லவேண்டிய அவசியம்.

பிரகிருதி மூன்றுவிதம்:— அக்நிஹோத்ரம், இஷ்டி, ஸோமம் என்பவை. இம்மூன்றிலும் அததன் பாகங்கள் யாவும் காண்பித்திருக்கின்றன.

இவைகளில் ஸோமயாகம், தர்சபூர்ண மாஸத்துக்கு மூந்தினது என்று சொல்லலாகாது. ஏனெனில் ஸ்வரூபத்தில் மற்றதை அபேக்ஷிக்காமலிருந்தாலும் தீக்ஷணீயைப்ராயணீயை முதலான அங்கங்கள் தர்சபூர்ணமாஸத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

# ஸாயணர் உபோத்காதம்.

இஷ்டியில் ஸோமயாகத்தைச் சொல்லி யிருக்கும் அங்கங்கள் வேண்டாததால் சோமத்துக்குமுந்தினது என்று கொள்ளலாம். அப்படியே அக்நிஹோத்ரம் தர்சபூர்ண மாசத்திற்கு முந்தினது இல்லை என்று சொல்வோம். அக்நிஹோத்ரத்துக்கு ஸ்வரூபத்திலாவது அங்கங்களிலாவது மற்றவை வேண்டியதில்லை. ஆயினும் இதில் அக்நிஸித்தி என்றது வேண்டும். அதில் ஆஹவநீயம் என்ற அக்கினி ஸித்தி ஆவதற்குப் பவமான (சுத்தப்படுத்தத்தக்க) இஷ்டிகள் வேண்டும். இந்த இஷ்டிகள் தர்சபூரண மாசத்தின் மாறுதலே. இப்படி ஒன்றோடொன்று ஒட்டி நிற்பதால் அக்நி ஹோத்ரத்துக்குத் தர்சபூர்ணமாஸம் வேண்டும். தர்சபூர்ண மாஸங்களுக்கு அக்நிஸித்திவேண்டும். அக்நிஸித்திக்காக ஆதானம் [மந்த்ரப் பிரகாரம் அக்னியை ஸ்தாபிக்கிறது] முதலில் சொல்லவேண்டுமே என்றால் ஆதான மந்த்ரங்களால் மாத்திரம் அக்நி ஸித்திக்காமல் பவமான இஷ்டிகளாலும் சித்திக்கிறது. இந்த இஷ்டிகள் தர்சபூர்ண மாஸங்களின் விகிருதி (மாறிவருதல்) ஆதலால் அவைகளை நேராகவே அபேக்ஷிக்கின்றன. அவைகளும் அக்நிபெறும் காரணத்தால் பவமானேஷ்டியை வேண்டினாலும் நேராக வேண்டவில்லை. ஆதலால், வேறொன்றும் வேண்டாமையாலே தர்சபூர்ணமாஸேஷ்டிகளையே முதல் முதல் சொல்லவேண்டியதென்று ஆயிற்று.

ரிக், சாம வேதங்களில் முதலில் இவைகளைச் சொல்லவில்லையேயெனின், கர்மகாண்ட விஷயத்தில் யஜுர் வேதம் பிரதான மாகையால் யஜுர்வேதத்தை ஒட்டியே தர்சபூர்ணமாஸயாகங்கள் முதலில் வரவேண்டுமென்றது.

தொடர்ச்சியாகக்கர்மங்களின் தன்மை யஜுர்வேதத்தில் தான் சொல்லப்படுகிறது. ரிக்வேதத்திலும் அங்கங்கே வேண்டியபோது யஜுர்வேத அநுவாகங்கள் எடுத்துக்கொள்ளப்பட்டிக்கிறது. அப்படியே, ஸாமவேதத்தின் ஸ்தோத்ரங்கள் சாமவேதத்தில் வரும். ஆகையாலே, யஜுர்வேதம்‡சுவர்ஸ்தானமாகவும், ரிக் ஸாமங்கள் சித்திரஸ்தானமாகவு மிருக்கின்றன. கர்மங்களில் யஜுஸ்ஸே முக்யம். அதிலும் தர்சபூர்ணமாசங்கள் முதலில் சொல்லப்பட்டன. இந்த வேதம் மந்திரமும், ப்ராஹ்மணமும் சேர்ந்தது. ப்ராஹ்மணம் என்பது மந்திரத்துக்கு வியாக்யானமாதலால், மந்திரமே(ப்ரதான மென்று) முதலில் சொல்லிற்று. அது ரிக்மந்திரங்கள் எனவும், யஜுர் மந்திரமெனவும், ஸாம மந்திர மெனவும் மூவகைப்பட்டது. அத்வர்யுவேதத்தில் யஜுஸ் மந்திரங்கள் விசேஷித்து வருதலால்ரிக்மந்திரங்கள் இருந்தாலும் யஜுர்வேத மென்று பெயர் வழங்குகிறது. அநாதிசித்தமாக வந்த யாக சம்பந்தமானதென்று காட்டும் பெயர், அத்வர்யு வேதமென்பது. இந்த வேதத்தில், அத்வர்யுவுக்கான மந்திரங்கள் யசமானனுக்கான மந்திரங்கள், ஹோதாவுக்கான மந்திரங்கள் என்று தர்ச-

---

‡'சுவர்வைத்துச் சித்திரம் எழுது' என்றபடி. சுவர் முக்கியமானதென்றதனால் முதலில் சொன்னார் என்றபடி.

## தைத்திரீய ஸம்ஹிதை.

பூர்ணமாஸ இஷ்டிகளில் சொல்லும் மந்திரங்கள் மூவ்விதம். "இஷே த்வா" என்று பிரபாடகத்தின் முதலில் சொன்னது அத்வர்யுமந்திரம். "ஸா த்வா வின்சாமி' என்றது யசமானமந்திரம். "ஸத்யம் ப்ரபத்யே" என்றது ஹோதாவின் மந்திரம். இவைகளுள், முன்சொன்னது சுவர்ஸ்தானம், பின்னிரண்டும் சித்திரஸ்தானங்களாதலின் முதலில் அத்வர்யு மந்திரம் சொன்னது தகும். இஷேத்வா, என்றது முதல் 13 அநுவாகங்கள் அத்வர்யு மந்திரம்.

1. கன்றைத் தாயிடமிருந்து பிரிக்க ஏற்படும் மந்திரம்.
2. தர்ப்பையைக்கொண்டு வருதற்கான மந்திரம்.
3. பால் கறப்பதற்கான மந்திரம்.
4. ஹவிஸ் ஸம்பாதிப்பதற்கான மந்திரம்.
5. நெல் குத்துவதற்கான மந்திரம்.
6. அரிசிமா பிசைய மந்திரம்.
7. கபாலத்தை (வாணையை) அடுப்பில் தூக்கி வைக்கும் மந்திரம்.
8. புரோடாசம் ஆக்க மந்திரம்.
9. வேதியைக் கட்ட மந்திரம்.
10. முக்கியமாக ஆஜ்யம் எடுப்பதற்கும், தர்ப்பையினால் பத்தினியைச் கட்டுவதற்கும் மந்திரம்.
11. முக்கியமாக விறகு கட்டுவதற்கும் ஸந்தர்ப்பாநுஸாரமாகத் தர்ப்பைகளைப் பரப்புவது முதலானவைகளுக்கு மான மந்திரம்.
12. நெய்யைத் தெளிப்பதற்கான மந்திரம்.

இங்கே, ஸாமிதேனீ, (அக்நியை மூட்டுவதற்கானது) ப்ரயாஜ்ப பாகம் (ப்ரதான யாகத்தில் முந்தின அங்கமான ஹவிர்பாகங்கள்) இவை பிரதானயாகங்களில் சொல்லவேண்டிய மந்திரங்கள்ஹோதாசொல்லவேண்டியவை ஆதலால் அவைகளை உபேட்சித்து, மேல்வரும் பிரயோகங்களுக்கு அங்கங்களாக இருக்கும் அத்வர்யுசொல்லவேண்டிய சுருக்குக் (அகப்பை) களைச் சேர்த்துவைத்துக்கொள்ள ஏற்பட்ட மந்திரங்கள் 13ல் சொல்லப்பட்டன.

இவைகளைத்தான் விநியோக ஸங்க்ரஹ கிரந்தக்காரர் சுருக்கிச்சுலோகங்களாக எழுதி யிருக்கிறார்.

முதல் அநுவாகத்தில் சொல்லியிருக்கும் கன்றைப் பிரித்து விடுவதென்றால் எது? அதனைமுதல் முதல் சொல்வதற்கு காரணம் யாது? இவற்றைப்பற்றி அடியில் சொல்வோம்.

## ஸாயணர் உபோத்காதம்.

ர்சயாகத்தில் மூன்றுபிரதானஹவிஸ்கள் உண்டு. அப்படியேபூர்ணமாசத்திலும் முதல் யாகத்தில், அக்னிக்காக மூன்று கபாலஹவிஸ், இந்திரனுக்குத் ததி (தயிர்), இந்திரனுக்குப் பால் என ஹவிஸ்கள் மூன்றும்; பூர்ணமாசயாகத்தில், அக்நிக்காக எட்டுக்கபாலஹவிஸ், ஆஜ்யத்தோடு பிரஜாபதிக்காக உபாம்சுயாகமும், அக்நி, ஸோமதேவதைகளுக்குப் பதினொரு கபாலங்களில் (பாத்திரங்களில்) ஹவிஸ்ஸாம் ஏற்பட்டன.

அதில் ப்ரதமையில் ததிஹோமத்திற்குத் தயிர் ஸம்பாதிப்பதற்கு அமாவாஸை இரவில் மாடுகளைக் கறக்க வேண்டியது. இதற்குக் காலையில் (வீட்டுபயோகத்திற்குக்) கறந்தபிறகு தாய்களோடு திரியும் கன்றுகளைத் தாய்களிடமிருந்து பிரிக்கவேண்டியது. இதற்காகத்தான் வத்ஸாபாகரணம் என்று சொல்வது முதலில் வரவேண்டியது.

இந்தக்கார்யத்தில் அப்போது ஒடித்த புரசங்குச்சியால் கன்றை ஓட்டவேண்டியதென்றுதான் குச்சியை ஒடிப்பதற்கு, "இஷேத்வா" முதலில் சொல்லியிருக்கிறது. இந்த மந்த்ரம் அதற்கு ஏற்பட்டதென்பதற்கு ஆதாரம் பிராஹ்மணம். ஆதலினால் மந்த்ரத்தைப் பிராஹ்மணத்தோடு கூடவே, தெரிந்து கொள்ள வேண்டியது என்று சம்ப்ரதாயக்காரர்கள் சொல்லுகிறார்கள். அ:டியில் கண்டபடி:—

எவன் அதனைச் சேர்ந்த ரிஷி, சந்தம், தேவதை, பிராஹ்மணம், இவைகள் தெரியாமல் மந்திரத்தால் யாகம் செய்கிறானோ. செய்விக்கிறானோ, அவன் கட்டையாக ஆகிறான், குழியில் தள்ளப்படுகிறான், நாசமாகிறான், மகா பாபியாக ஆகிறான். ஆகையால் மந்திரத்திலேயே இவைகளையும் சேர்த்துத் தெரிந்து கொள்ள வேண்டியது."

'ரிஷிகள் என்றால் இந்த்ரியங்களுக்குப் புலப்படாத விஷயங்களையும் அறியும் திறனுடையவர்கள் என்க. ரிஷிகளுக்கு வேதத்தைப் பார்க்கத் திறனுண்டென்று ஸ்மிருதி சொல்லுகிறது:—

"யுகத்தின் முடிவில் இதிஹாஸங்களுடன் மறைந்து கிடந்த வேதங்களை மஹர்ஷிகள் ஸ்வயம்புவால் அநுக்ஞை பெற்றுத் தபஸால் அடைந்தார்கள்"

"இஷேத்வா" என்ற மந்த்ரங்களுக்கு ப்ரஜாபதி ரிஷி;"

அப்படியே காண்டாநுக்கிரமணிகையில் சொல்லி யிருக்கிறது.

"(1) சாகையின் ஆதி (2) யஜமான மந்த்ரம் (3) ஹோதாக்கள் மந்த்ரம், (4) ஹோதாவின் கர்மத்தைக் காட்டும் மந்த்ரம். (5) 6, 7, 8, மேலேசொன்ன நால்வகை மந்த்ரங்களுக்கும் வேண்டிய பிராஹ்மணங்கள் (9) பிதிர்மேதம் (பித்ருக்களுக்குச் செய்ய வேண்டிய தர்ப்பணம்) என்று 9 காண்டங்கள். "இஷேத்வா" என்று துவக்கும் ப்ரபாடகம், சாகாதி. ஸம் த்வா, ஸிஞ்சாமி" என்ற ஆறு அநுவாக மந்த்ரம், யஜமானம், "சித்தி: ஸ்ருக்" என்ற மந்த்ரங்கள் ஹோதாக்கள் மந்த்ரம்.

" ஸத்யம் ப்ரபத்யே " என்றது ஹோதாவின் கர்மத்தைக் காட்டும் மந்திரம். " பரே, யுவாம்ஸம் " என்றது பித்ரு மேதம்.

இந்த 9 காண்டங்களையும் ப்ரஜாபதி பார்த்தார். இதன் சந்தங்கள், அதைச் சேர்ந்தசாஸ்திரத்தில் அறியவும். மந்த்ரபதங்களின் வியாக்கியானத்திலிருந்தே அதில் சொல்லியிருக்கும் தேவதையை அறியலாம். விசேஷ ப்ராஹ்மணங்களை அந்தந்த மந்த்ர வியாக்கியானகாலத்தில் மேற்கோளாக எடுத்துக் காட்டுவோம். மந்திரப் பிரயோகங்கள் தைத்தரீயப் பிராஹ்மணத்தில் எங்கும் சொல்லப்படாவிட்டாலும், கல்பசூத்திரக்காரர்களால் மந்த்ர ப்ராஹ்மணங்களைக் கொண்டு நிர்ணயம் செய்து சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் போதாயனர், ஆபஸ்தம்பர் இவர்கள் செய்த ஸூத்ரங்களைக் காட்டி ப்ராஹ்மணத்தையும் அநுஸரித்து மந்திரார்த்தங்களை விவரிப்போம்.

[என ஸாயணர் யஜுர்வேத பாஷ்யத்துக்கு செய்த உபோத்காதம்.]

உ

ஓம்!
வேதபுருஷாயநம:!!

---

# தைத்திரீய ஸம்ஹிதை.

---

யஜுர்வேதமானது கிருஷ்ணயஜுர்வேதம், சுக்கில யஜுர்வேதமென இரண்டு சாகைகளுள்ளது. அவற்றுள் இது கிருஷ்ண சாகையைச் சேர்ந்த தைத்திரிய ஸம்ஹிதையாம். இந்த ஸம்ஹிதையில் ஏழு காண்டங்களுண்டு. அவற்றில் ஒவ்வொன்றிலும் முறையே 8, 6, 6, 7, 7, 6, 5, பிரபாடகங்களுண்டு.

---

## முதற்காண்டம்.

---

இம்முதற்காண்டத்தில் எட்டுப் பிரபாடகங்களுண்டு. அவற்றில் முறையே 14, 14, 14, 46, 11, 12, 13, 22, அநுவாகங்களுண்டு. இவ்வநுவாகங்கள் தம்மிடத்துள்ள பதங்களாற் கணக்கிடப் படுபவை. ஆகவே இவை ரிக்வேதத்தைப் போலச் சந்தஸ்களாலாக்கப்படாமல் ஸ்வரங்களால் மாத்திரம் அத்யயநஞ் செய்யத் தக்

களை. 50 வார்த்தைகளிருந்தால் ஒரு பஞ்சாசத் (வழக்கத்தில் இதனைப் பஞ்சாதியென்பர்) தென்று சொல்லி யதன் கடைசிப் பதத்தால் அதனைக் குறிப்பிடுவர். அதிகமாக வுள்ளதை யித்தனை பதங்களென்று எண்ணிற் குறிப்பர். உதாரணமாக இரண்டாவது அநுவாகத்தின் கடைசியில் ஸஹஸ்ரவல்சாவும், 38ம் எனக் குறித்திருக்கக் காணலாம். அதாவது ஸஹஸ்ரவல்சா: என்பதோடு ஒரு பஞ்சாசத் (பஞ்சாதி) முடிந்துபோக, மேல் 38 பதங்களுள்ளன என்பது அதன் குறிப்பு.

---

## பிரபாடகம் 1.

---

இம்முதற் பிரபாடகத்திலுள்ள 14 அநுவாகங்களிலும் வடமொழியில் முறையே 43, 88, 58, 96, 111, 65, 98, 72, 161, 166, 115, 71, 163, 223 பதங்களுண்டு. ஆகமொத்தம் இப் பிரபாடகத்தில் 1530 வார்த்தைகளுள்ளன. ஒவ்வொரு அநுவாகத் தொடக்கச் சொல்லையும் கூறி இச்சொல் முதல் இத்தனை பதமெனப் பிரபாடக முடிவில் கூறுவது வழக்கம். இம்முதற்பதங்கள் முறையே, இஷே, யஜ்ஞஸ்ய, சுந்தமை, கர்மணே, தேவோ, (அ)வதூதம், திருஷ்டி:, ஸ, பதம், பாதாபுஷ்டம், கிருஷ்ணோ, புவனம், வாஜஸ்ய, உபா, என்பனவாம். இவ்விஷயங்கள் வடமொழிமூலத்தைப்படித்துப பார்க்க விரும்புவோர் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயங்களானவைபற்றி அத்யயனம் செய்யாதார்க்கும் பயன்படும்படியாக அவை இங்கே காட்டப்பட்டன. இம்மாதிரியே ஒவ்வொரு பிரபாடகத்தின் முடிவிலும் அவ்வப் பிரபாடகத்தின் அநுவாக முதற் குறிப்புகளும் பதசங்கியைகளும் வடமொழியி லுள்ளபடி குறித்துக் காட்டப்படும்.

### அநுவாகம். 1.

தர்சபூர்ணமா யாகத்திற்கு அங்கமாகக், கன்றை விலக்கிப் பசுவையும், கன்றையும், மேயவிடும் மந்த்ரங்கள்:—

(1) (பலாச சாகையே) உன்னைத் தனிக்காகவும், (தேவர்களுக்குப்பலத்தைக்கொடுக்கக் கூடிய) ரஸத்திற்காகவும் ஒடிக்கிறேன்.)

(2) (கன்றுகளே, மேய்ச்சலுக்காகக் காட்டுக்குப்) போங்கள். (ஸாயங்காலம்) திரும்பி வாருங்கள்.

(3) பசுக்களே, (அந்தர்யாமியான) பரமேசுவரனாகிய இந்திரனுக்குத்ருப்தி ஸம்பாதிப்பதென்ற உத்தமமான காரியத்தின் பொருட்டு உங்களைக் காட்டில் மேயும்படி ப்ரேரேபணை செய்யட்டும். இந்திரனுக்குத் த்ருப்தி ரூபமான ஹவிஸ் பாகத்தை நன்றாக மேய்ந்து விருத்தி செய்யுங்கள். மிகுந்த பாலைக் கொடுப்பனவும், பல கன்றுகளோடு கூடியனவும், க்ருமி தோஷம், வேறு ரோகம், மலட்டுத்தனம், இவை இல்லாதனவுமான உங்களை அபகரிக்கத் திருடர்களுக்குச் சக்தியில்லாமற் போகட்டும். உங்களைத் தின்றுவிடலாமென்ற கெட்ட எண்ணத்தோடு கூடிய (துஷ்ட மிருகங்களுக்குச் சக்தியில்லாமல் இருக்கட்டும்.) ருத்ரனுடைய ஆயுதம் உங்களை விட்டு விலகட்டும்.

(4) நீங்கள், உங்கள் யஜமானனிடத்தில் ஸ்திரமாகவிருந்து, பல கன்றுகளோடு விருத்தியடையுங்கள்.

(5) (பலாச சாகையே,) யஜமானனுடைய பசுக்களை ரக்ஷிப்பாயாக.

குறிப்பு:—

(1) கன்றுகளைத் தாயிடமிருந்து பிரித்து ஓட்டுவதற்காகப் பலாச சாகையை ஒடிப்பதற்கு ஏற்பட்ட மந்திரம். இதனை, "இஷேத்வா" எனவும் "ஊர்ஜே த்வா" எனவும் இரண்டு மந்திரங்களாகப் பிரித்து, முந்தியது பலாச சாகையை ஒடிப்பதற்கும், பிந்தியது ஒடித்த கிளையைக் கோணலின்றி நிமிர்த்தி, அடிமுதல் நுனிவரையில் தடவுவதற்கும் ஏற்பட்டவை, என ஆபஸ்தம்பர் கூறுகின்றார்.

(2) கன்றுகளைக் காட்டுக்கு ஓட்டும் மந்திரம். ப்ராஹ்மணத்தை அநுஸரித்து வேறு விதமாய் வ்யாக்யானம் செய்யப்படுகிறது. "வாயு, அந்தரிக்ஷத்திற்கு (வெளிக்கு) அதிஷ்டான தேவதை. பசுக்கள், அந்தரிக்ஷ அதிஷ்டான தேவதையைச் சேர்ந்தன. ஆதலின், கன்றுகளை வாயுவினிடத்தில் ஒப்புவிக்கிறார்." என்பது ப்ராஹ்மணமாதலின், கன்றுகளை வாயு ரூபமாகச் சொல்லி, அவைகளை ரக்ஷிக்கும் பொருட்டு வாயுவிடம் ஸமர்ப்பிக்கிறார் என்ற விதம் அறிக.

(3) பசுக்களை மேய்ச்சலுக்கு அனுப்புவதற்கான மந்திரம். ஆபஸ்தம்பர், இம்மந்திரத்தை மூன்று பாகங்களாகப் பிரித்துப் பொருள்கூறுகின்றார்:—1. பசுக்களே ......ப்ரேரேபணை செய்யட்டும். இது, பலாச சாகையால், பசுக்களை மேய்ச்சலுக்கு அனுப்புவது. 2 இந்திரனுக்கு ...... சக்தி இல்லாமல் இருக்கட்டும். இம்மந்திரம் மாடுகளைத் தடவிக்கொடுப்பது. 3 ருத்ரனுடைய ......................விலகட்டும். இது, புறப்பட்ட பசுக்களுக்கு மந்த்ர பூர்வகமாய் விடைகொடுத்தனுப்புவது.

(4) இதனை, யஜமானன் வீட்டுக்குத் திரும்பிவரும் மந்திரமென ஆபஸ்தம்பரும், அத்வர்யு யஜமானனைப்பார்க்கிறதற்கு அமைந்ததெனப் பௌதாயனரும் கூறுகின்றனர்.

(5) பலாச சாகையை மறைத்துவைக்க மந்திரம். அக்கியின் ஹவிஸ்ஸுக் காக நெல் கொணர்ந்த வண்டியிலாவது, அக்னி ஹோத்ர அறையிலாவது முன்புறமாக மறைத்து வைக்க மந்த்ரமென ஆபஸ்தம்பரும், இச்சாகையை ஆஹவநீய அக்னியைச் சுற்றி எடுத்து, கார்ஹபத்ய அக்னிக்குப் பின்புறமாகவந்து, மேற் குறித்தவாறு மறைத்துவைக்கும் மந்த்ரமெனப் பௌதாயனருஞ் சொல்கின்றனர்.

ந

## அநுவாகம் 2.

தர்ப்பைகளைக் கொண்டுவர ஏற்பட்ட மந்திரங்கள்:—

(1) (குதிரையின் பக்க எலும்பினால் செய்யப்பட்ட) வாளே, நீ யாகத்திற்குச் சாதனபதார்த்தமாயிருக்கிறாய்.

(2) ஒளிந்திருக்கிற இந்த ராக்ஷஸர்கள், வைரிகள், இவர்களின் ஸ்வரூபம், நன்றாக எரிந்து போகக் கடவது.

(3) இந்தவாள், வித்தையினால் அறிவடைந்து, தர்ப்பையைக் கொண்டுவரப் போகிறது. (ப்ரஜாபதி யுருவங் கொண்ட) மநுவினால் (தன் கண்ணினின்று) படைக்கப் பட்டது. குதிரைப்புல் அறுப்பதால் விசேஷமாகக் கூராக்கப் பட்டது. முன்காலத்தியவித்வான்களான அநுஷ்டாதாக்கள் கிழக்கிலிருந்து தர்ப்பையைக் கொண்டு வருகிற வழக்கத்தை அநுஸரித்துத், தேவர்களுக்குத் திருப்தி செய்யப் போதுமான தர்ப்பையை ஏராளமாய் (ஸம்பாதிப்பதற்காக) இவ்வாளும் கிழக்குநோக்கிச் செல்கிறது.

(4) ஓ! தர்ப்பைக் கூட்டமே! தேவர்களின் ப்ரயோஜனத்தைக் குறித்து, நீ பிடிக்கப் பட்டிருக்கிறாய். மழையினால் விருத்தியடைந் திருக்கிறாய்.

(5) தேவர்களுக்காக வளர்ந்த தர்ப்பையே, உன்னுடைய கணுவை அடியிலாவது, குறுக்காகவாவது (அறுத்து) ஹிம்ஸிக்கவில்லை. (மறுபடி வளருமாறு) ஸம்பாதித்துக்கொள்கிறேன்.

(6) உன்னைச் சேதிப்பவனாக இருப்பினும், (மந்திரத்தை முன்னிட்டுச் செய்கிற படியால்) இம்ஸிக்கவனல்லேன்.

(7) தேவர்களுக்காக உண்டான தர்ப்பையே, நூற்றுக்கணக்கான சாகைகளாக நீ வளர்வாயாக.

(8) ஆயிரக் கணக்கான சாகைகளாக நாங்களும் விருத்தியடையக் கடவோம்.

(9) (கீழ் இருக்கிற புல்லுகளே, (ருச்சிகளே,) தரையிற் படாமல் (இத்தர்ப்பைகளைக்) காப்பாற்றுங்கள்.

(10) ஓ! (கயிறே, நீ, பூமிக்குக்) காஞ்சிபோல விருக்கிறாய். அதிதி தேவதையின் பொருட்டு உன்னைக் கீழே போடுகிறேன். ஓ! தர்ப்பை முஷ்டிகளை நன்றாகச் சேர்த்துக் கட்டக் கூடிய கயிற்றோடு உங்களை வைக்கிறேன்.

11 தேவதைகளுக்குள் சிரேஷ்டையான இந்திராணியைப் போலாவதற்கு உன்னைக் கட்டுகிறேன்.

12 போஷகனான பூஷா என்னும் தேவன் உன்னுடைய முடிச்சை முடிந்துவிடட்டும்.

(13 (ஓ, தர்ப்பையே) இந்த முடிச்சானது, உன்னை (நிர்ப்பந்தித்துக்கொண்டு நெடுநேரம்) இருக்கவேண்டாம்.

(14) இந்திரனுடைய (அநுக்ரஹத்தால் கொடுக்கப்பட்ட பலத்தையுடைய) கைகளால் உன்னைத் தூக்குகிறேன்.

(15) ப்ருஹஸ்பதியின் (அநுக்ரஹத்தால்) தலையில் வைத்துச் சுமக்கிறேன்.

(16) இந்த விஸ்தாரமான வெளியில் (உனது இஷ்டம்போல) ஸஞ்சாரம் செய்வாயாக.

(17) தேவ லோகத்தை (உன்னதமான இடத்தை) அடைந்தவனாக இருக்கிறாய்.

குறிப்பு:—

(1) வாளைப் பார்த்துச் சொல்லும் மந்திரம். இம்மந்திரத்தால் அரிவாளை மந்திரிக்கவேண்டுமெனப் பௌதாயனரும், கார்ஹபத்ய அக்கினியை மந்திரிக்க வேண்டுமென ஆபஸ்தம்பரும் கூறுகின்றனர்.

(2) அரிவாளைக் கார்ஹபத்யத்தில் காய்ச்சும் மந்திரம்.

(3) தர்ப்பை அறுப்பதற்கென்று கிழக்கு முகமாகச் செல்வதற்கு

ஏற்பட்ட மந்திரம். ஹோமாதாரமான ஆஹவநீயம் பூர்வதிக்கிலிருப்பதால் யாகமும் அத்திக்கிலேயே இருக்கிறது என்பது கொள்கை. வேதியில் பரப்புவதற்கு வேண்டியவளவு மிகுதியாகப் பர்ஹிஸை (தர்ப்பையை)க் கொண்டு வரவேண்டு மென்றார். ஆஹவநீய அக்நியிடம் சென்று, வேதியைப் பார்ப்பதற்கு ஏற்பட்ட மந்திரமெனப் பௌதாயனரும், கிழக்கிலாவது வடக்கிலாவது போய்த் தர்ப்பைமயமான பர்ஹிஸைக் கொண்டுவர நியமித்தமந்திரமென ஆபஸ்தம்பரும் சொல்கின்றனர்

(4) தர்ப்பையைப் பிடித்து மேல் நோக்கி உருவுவதற்கு மந்த்ரம். அரசனுடைய கட்டளையை முன்னிட்டுக்கிராமத்திற் சென்று நெய், பால் முதலியவைகளைப் பலாத்காரமாகப் பெறுகிற ஒருவன், அக்குற்றம் தன்னுடையது அல்லவெனச் சொல்வதுபோல், தர்ப்பைகளைச் சேகரிப்பதும் தனது வீட்டுக் கூரை வேய்வதற்கு அல்லாமல் தேவர்களை உத்தேசத்துச் செய்வதால் தனக்குத் தோஷமில்லை என்றார் உழுது பயிரிடப்படாமலும், தடாகம்முதலியவைகளிலிருந்து ஜலத்தை அபேக்ஷிக்காமலும், மழையினாலேயே வளர்கிறபடியால், அரசனால் முன்னுக்கு வருகிற குடிகள் அவனுக்கு ஸாதகமான பதார்த்தங்களைச் செலுத்தக் கடமைப்பட்டிருத்தல்போலத் தேவ காரியத்துக்கு இத்தர்ப்பைகள் கடமைப்பட்டிருக்கின்றன என்றார்.

(5) தர்ப்பைகளைச் சேர்த்துப் பிடிப்பதற்கு மந்த்ரம். கையால் பிடித்துக் கொள்வதற்கெனப் பௌதாயனர் குறிக்கின்றார்

(6) தர்ப்பைகளை அறுப்பதற்கு ஏற்பட்ட மந்த்ரம்.

“உன்னை இம்சித்தவன் அல்லேனாதலால் இக்காரியத்தால் ஹிம்சிக்கமாட்டேன்” என்றபடி.

(7) அறுத்துப் போகப் பாக்கியான தர்ப்பைக் கட்டைகளைத் தடவிக் கொடுக்கும் மந்த்ரம். புத்திரனைப் போலவே பர்ஹிஸ் உபகாரியானதால் அத்தர்ப்பையை வளரச்செய்வதற்கு முயலவேண்டும் இம்முயற்சி, புத்திரப்ராப்திக்கு ஆஸ்பதமானது என ப்ராஹ்மணம் கூறுகின்றது.

(8) (தர்ப்பைகளை அறுத்தவர்) தன்னைத் தடவிக்கொள்ளும் மந்திரம். ஆசீர்வாத ரூபமான மந்திரம்.

(9) தர்ப்பைகளைத் கீழே வைப்பதற்கு மந்திரம். தரையில் வைத்தால் உச்சிஷ்டம் முதலியன பட்டுக் கெட்டுப்போம். இதன் பிறகு, மந்திரமின்றித் தர்ப்பைகளைச் சேகரிக்கலாம் என்றார்.

(10) (தர்ப்பைகளால் திரித்த) கயிற்றைப் பிடித்துக் கொள்ளும் மந்திரம்.

(11) தர்ப்பைகளைச் சேர்த்துக் கயிற்றால் கட்டும் மந்த்ரம். பலயாகங்கள் செய்த யஜமானனுடைய முறைத் தர்ப்பையால் கட்டுப்பட்ட பத்நி இந்திராணியின் பதவியைப் பெற்றது போலவே உன்னதமான பதவியை உத்தேசித்து இவ்வாறு கட்டப்படுகிறது. பர்ஹிஸ் ப்ரஜா ரூபமானதால், குழந்தைகள் நாளத்

தால் (தொப்புள் கொடி) கட்டுண்டு பிறப்பனபோல (தர்ப்பைகள் நழுவாமலி ருப்பதற்குக்) கட்டவேண்டு மென ப்ராஹ்மணம் கூறுகின்றது.

(12) கயிற்றின் இருநுனிகளையும் சேர்த்து முடிப்பதற்கு ஏற்பட்ட மந்த்ரம்.

(13) முடிச்சை மறைத்துச் சொருகுவதற்கு மந்த்ரம். கயிற்றின் முடிப் புப் போட்ட பாக்கியைப் பின்னால் இழுத்து நுனியானது முன்புற மிருக் கும்படி சொருகவேண்டும். புத்திரனை வேண்டுபவன் இம்மாதிரி செய்ய வேண்டு மெனக் குறித்தார்.

(14) தர்ப்பைக்கட்டைக் கைகளால் தூக்குவதற்கு மந்த்ரம். கைகளுக் குப் பலத்தை அருள்பவன் இந்திரனாகையால் "இந்திரனுடைய கைகள்" எனக் குறித்தார்.

(15) தர்ப்பைக்கட்டைத் தலையில் வைத்துக் கொள்ள மந்த்ரம். பிருஹஸ் பதி தேவர்களுக்கு பிராஹ்மணாகையால், "பிராஹ்மஸ்வரூபமான தலையினால் சுமக்கிறேன்." என்றார்.

(16) அத்வர்யு திரும்பிவருவதற்கு மந்த்ரம்.

(17) தர்ப்பையை உயரத்தில் வைப்பதற்கு ஏற்பட்ட மந்த்ரம். தேவர்கள் உன்னத ஸ்தானமான வானத்தில் வசிப்பதால், "தேவலோகத்தை அடைந் தவன்" என்றே குறித்தார்.

## அநுவாகம். 3.

இரவில் பால்கறக்க ஏற்பட்ட மந்திரங்கள்.

1 (பாத்திரங்களே,) தேவர்களுக்குச் (செய்கிற) யாகமா கிய தேவகார்யத்திற்காகச் சுத்தமாக இருங்கள்.

2 (கும்பமே,) வாயுவுக்கு (ஸஞ்சார ஸ்தானமான கடமா கவும, விண்ணாகவும், மண்ணாகவும், ஸர்வத்தையும் அடக் கக் கூடியவனாகவும், மிகுந்த ப்ரகாசமுடையவனாகவும, (இ ருக்கிறாயாதலால்) திடமாகவும், அசையாமலும் இருப்பா யாக.

3. (பலாச சாகையோடு கூடிய பவித்ரமே,) ஜீவன ஹேது வுக்கு நூற்றுக்கணக்கான பால் தாரைகளைச் சுத்தஞ்செய் கிறவனாயிருக்கிறாய். ஜீவன ஹேதுவாயிருக்கிற ஆயிரம் (பால்) தாரைகளைச் சுத்தம் செய்பவனா யிருக்கிறாய்.

4. சிறிய பால் துளியும் பெரிய பால் துளியும் தேவ லோகத்தில் வசிக்கிற நாகன் எனப் பெயர்கொண்ட அக் னி பகவானுக்கு ஹோமம் செய்தனவாக இருக்கட்டும். விண்ணிற்கும் மண்ணிற்கும் ஹோமம் செய்தன வாகட் டும்.

5. இப்பசு, உலகவாழ்வுக்கு ஆஸ்பதமானது, இப்பசு, உலகெல்லாம் வியாபித்துள்ளது. இப்பசு, உலகைப் படைக்கும் வல்லமை வாய்ந்தது.

6. அழுக்கைக் கழுவக் கூடிய ஸாரத்தியமும் இனிமையுங்கொண்ட ஜலமே, ஸந்தோஷத்திற்குக் காரணமான தனத்தினுடைய லாபத்தின் பொருட்டு, இப்பாலுடன் கலந்துகொள்வாயாக.

7. நன்றாகக் காய்ந்த பாலில், தயிர் ரூபமான ஸோமரஸத்தினால், உன்னைத் தோயப்படி செய்கிறேன். அதனால் இந்திரனுக்குத் தயிர் (ஹோமம் செய்யப்படும்)

8. விஷ்ணுவே இந்த ஹவிஸ்ஸை (பாலை) ரக்ஷிப்பீராக.

குறிப்பு:—

(1) பால் கறக்கும் பாத்ரம், பவித்ரம் முதலியவைகளை ப்ரோக்ஷிக்க மந்த்ரம். கார்ஹபத்யத்தின் வடபுறத்தில் தர்ப்பைகளைப் பரப்பி, அவைகளின் மேல், பால்கறக்கும் பாத்ரம், பவித்ரம், தயிர் பால் வைக்க இரண்டு ஸ்தாலிகள், இந்த நான்கினையும் வைத்து ப்ரோக்ஷிக்க வேண்டும். இது போதாயனருடைய அபிப்ராயம். ஆபஸ்தம்பர், மேற்குறித்தவாறு தர்ப்பைகளின் மேல், வைப்பதோடு மூடுவதற்கு மரப்பாத்திரங்களும், அகப்பையும், நெருப்பைக் கிண்டுவதற்குப் பச்சைக் குச்சியும் வைத்து ப்ரோக்ஷிக்கவேண்டுமென்கின்றார்.

(2) பச்சைக் குச்சியினால் கார்ஹபத்ய அக்நியைக் கிளறுவதற்கும், தயிர் பால் ஸ்தாலிகளை வைப்பதற்கும் மந்திரங்கள். இதனைப் போதாயனர் இரண்டாகப் பிரிக்கின்றார்:— 1. "வாயுவுக்குக் கடம்" எனத் தீமூட்டுதல். 2. "விண்ணுலகும்... ......அசையாமலிருப்பாயாக" என, ஸ்தாலிகளை வைத்தல் வாயு இருப்பதால் "விண்" என்றும், மண்ணால் செய்யப்பட்டதால் "மண் என்றும் சொல்லியதால், இரண்டு உலகங்களின் ஸ்வரூபமெனக் கூறியது.

(3) பால் காய்ச்சும் ஸ்தாலியில் சாகாபவித்ரத்தை வைக்கும் மந்த்ரம். இந்தப் பவித்ரம் வடிகட்டுவதற்காக உத்தேசித்தது. "வஸு" என்றபதம் பணம் எனப்பொருள் பட்டாலும், அப்பணத்தினாலேயே ஜீவனம் ஏற்படுவதால், வஸு சப்தத்திற்கு ஜீவனம் என்றே குறித்தார். வஸு என்பது செய்யும் காரியத்தைக் குறிப்பதால் தொழிலாகு பெயர். "சததாரம்" "ஸஹஸ்ரதாரம்" என்றது பிராணாதாரமான பால் தாரைகள், நூறு, ஆயிரமாக விழுவதால், சதாயுஸ் ஸஹஸ்ராயுஸ் எனச் சொல்கிற ஆசீர்வாதம்என்கிறார், மேலும், பவித்ரத்தை நோக்கி, சூர்ய உதயாஸ்தமனத்தையும், பிறைச் சந்திரனையும் உவமித்து, மூலிகைகளுக்குக் காரணமான சந்திர ஸம்பந்தத்தால், இந்தப் பவித்ரத்தின் மூலமாய்ச் செல்லும் பால் மூலிகைகளின் சேர்க்கையுள்ளதெனத் தெரிவிக்கின்றார்.

(4) பால் கறந்த பசுக்களைப் பார்த்துச் சொல்லும் மந்த்ரம். கறக்கும் பொழுதும், வடிக்கட்டும் பொழுதும் சிதறக்கூடிய பால்துளிகளைக் குறித்துச் சொல்லியது. தேவர்களுக்குத் திருப்தியாகுமாறு ஸ்வாஹாகார வஷட்கார சப்தத்தோடு அக்நியில் ஹோமம் செய்தவை ப்ரயோஜனகரமாகும் இவ்வாறு இருக்கத், தரையில் விழுந்த துளிகள் எவ்வாறு ஹோமம் செய்தனவாகுமெனச் சொன்னால், ப்ராஹ்மணர்களுக்கு இட்ட அன்னம் மந்திரமன்றியே உண்ணப்பட்டாலும் எவ்வாறு பயன் தருவனவோ அவ்வாறே மந்திரமின்றிக் கீழே சிதறிய பால் துளிகளும் பயன்படும் என்றார். பூமியில் ஹோமம் செய்யப்பட்ட பண்டங்கள் தேவர்களுக்குத் திருப்தியைச் செய்கின்றன இவ்விதமாகவே, இப்பால் துளிகளும் தேவலோகவாஸியான நாகன் என்ற அக்நிக்குப் பயன்படும் என்றார். ஜலத்தினால் வளர்ந்த தர்ப்பையின் வழியாக மாடுகள் தின்ற ஓஷதிகளின் ஸாரமான பால் வடிக்கட்டப்படுவதால், ஜலமும் ஓஷதிகளும் கலந்துள்ளது என்றார்.

(5) மாடுகளைக் கறந்தபிறகு, அவை ஒவ்வொன்றையும் மந்த்ர பூர்வகமான பெயர்களால் துதிக்கும் மந்திரம். மந்திரத்தில் குறித்த மூன்று குணங்களால், வரிசையாக பூமி, அந்தரிக்ஷ, விண்ணுலகங்களைக் குறித்தார். இம்மூன்றின் ஸமஷ்டி யென்று பசுக்களைத் துதித்ததாயிற்று, கொடையாளிகளைத் துதிப்பது ஸஹஜம். இவ்வாறு துதிக்கப்பட்டவர்கள் மேலும் மேலும் கொடுப்பதுபோல் இப்பசுக்களும் அதிகமான பாலைக் கொடுக்கும் என்றபடி

(6) பால்கறந்த பாத்திரத்தைக் கழுவிய ஜலத்தைப் பாலோடு கலப்பதற்கு மந்திரம். அழுக்கைப் போக்கும் ஸாமர்த்தியம் ஜலத்தினிடம் அவசியமிருப்பதால், "ஸத்யம்" எனப் பொருள் படுகிற 'ரிதம்" என்ற சொல்லை ஜலத்திற்கு விசேஷண மாக்கினார். கழுவிய ஜலமும், ஓஷதிமயமான பாலும்சேர்வதால், ஆகாரம் ஜலம் இரண்டையும் குறித்ததாயிற்று. ஆகாரத்தில் ஸ்தூலமானது மலம், நடுத்தரமானது மாம்ஸம், ஸூக்ஷ்மமானது மனது என்றும் ஜலத்தில் ஸ்தூலமானது மூத்ரம், நடுத்தரமானது ரக்தம் ஸூக்ஷ்மமானது ப்ராணன் என்றும், மும்மூன்றாக வகுத்திருக்கிறார்கள் ஆகையால் இவை, ப்ராணதாரத்துக்கு இன்றியமையாதன. தயிரும் பாலுமே யஜமானனுக்குப் புஷ்டிசெய்யக் கூடியன வாதலால் "தனத்தினுடைய லாபத்தின் பொருட்டு" என்றார்.

(7) நன்றாகக் காய்ச்சியபிறகு கீழே இறக்கிக் குளிர்ந்த பாலில், தயிர் ஊற்றித் தோயவைக்கும் மந்த்ரம். பாலில் ஊற்றப்படுகிற தயிர், ஸோம ரஸத்துக்குச் சமான மென்றார். ப்ராஹ்மணம் (3-2-3) தயிர்வைக்கும் ஸ்தலியை ஸோம மென்றே குறிக்கின்றதாகையால், மேற் குறித்தவாறு சொல்லியது தயிரைக்கொண்டு பாலைத் தோய்த்தால் இந்திரனுக்கு ப்ரீதியென வேதம் கூறுகின்றது. இவ்வாறு தோயவைத்த பாலை மூடுவதற்கு இரும்பு அல்லது மரப்பாத்திரத்தை உபயோகிக்கவேண்டுமாம். மண்பாத்திரத்தால் மூடினால் அப்பண்டம் பித்ர் தேவதைகளுக்குத் தகுதியாகு மெனச் சொல்லியவாறு அறிக.

(8) பால் சட்டியை உயரத்தில் வைக்க மந்திரம், விஷ்ணு காக்கும்

கடவுளாதலால், அவரை வேண்டிக் கொண்டபிறகு முந்திய அநுவாகத்தில் தர்ப்பைக்குச் சொல்லியதுபோல் சொல்லியது.

## அநுவாகம் 4.

பிரதமையிற் செய்யவேண்டிய காரியத்திற்காகத் தானியத்தை எடுத்து ஹவிஸ் தயார் செய்வதற்கான மந்திரங்கள்.

1. கைகளே, உங்களைத் தேவகார்யத்திற்குத் தகுதி யுள்ளவர்களாகச் செய்கிறேன்.

2. (முறத்தைப்பார்த்து,) எங்கும் வியாபித்திருக்கிற யாகத்தின் பொருட்டு உன்னை (எடுத்துக்கொள்கிறேன்.)

3. ராக்ஷஸர்களும் சத்துருக்களும் எரிக்கப்பட்டார்கள்.

4. (அக்கினியே நீ,) இம்சை செய்யக் கூடியவன். இம்சிக்கிற பாபத்தை அழிக்கக் கடவாய். எந்த ராக்ஷஸனுனை ஒருவன், யாகத்தைக் கெடுக்கும் எண்ணத்துடன் எங்களைக் கொல்ல நினைக்கிறானோ அவனை நாசம் செய்வாயாக. சோம்பல் முதலிய எந்த விரோதிகளை நாங்கள் அழிக்க விரும்புகிறோமோ அவற்றையும் அழித்து விடுவாயாக.

5. (வண்டியைப் பார்த்து) நீ தேவர்களுக்கு ஸம்பந்தப் பட்டவனாய் இருக்கிறாய். மிகவும் சுத்தமாயும் தான்யத்தால்நன்றாய் நிறைந்தும், மிகுந்த அன்புக்கு இடமாயும் ஹவிஸை நன்கு சுமக்கிறவனாயும், தேவதைகளை நன்றாய் அழைப்பவனாயும், (தான்யங்களைப்) போடுவதால் கோணலில்லாமலும் இருக்கிறாய். (பாரத்தைச்) சுமந்து கொண்டிருத்தலால் அசையாமலும், முறியாமலும் இருப்பாயாக.

6. (தானியத்தைப் பார்த்து) மித்ரனுடைய கண்ணால் உன்னைப் பார்க்கிறேன். நீபயப்படவேண்டாம். நடுங்க வேண்டாம். (நான்) உன்னைக் கொல்லவில்லை.

7 காற்று நுழையும்படி விசாலமாக (இருங்கள்.)

8 (தானியத்தை நோக்கி) ஸவிதா தேவதை உதிப்பதன் பொருட்டு, உன்னை அச்விநீ தேவதைகளின் பாஹுக்களாலும் பூஷன் தேவதையின் கைகளாலும், அக்நியின் த்ருப்திக்காகப் போடுகிறேன்.

9 (இதை) அக்நி ஸோம தேவதைகளுக்குப் போடுகிறேன்.

10 இது தேவர்களுக்கு; அதுவோ எங்களுக்கும் தேவர்களுக்கும்.

11 (ஹவிஸ்ஸைப் பார்த்து) அபிவிருத்திக்காக உன்னை அபிமந்த்ரணம் செய்கிறேன். இந்த அபிமந்த்ரணம், (அன்னியர்களுக்குக்) கொடுக்காமல் இருப்பதற்கு அல்ல.

12 ஸ்வர்க்க லோகத்தையும், ஸ்வர்க்கத்தைக் காட்டுகிற ஜ்யோதிஸ்ஸையும் நன்றாய்ப் பார்க்கிறேன்.

13 இகபரலோகங்களில் எங்கள் வீடுகள், (திகிலடையாமல்) திடமாயிருக்கட்டும்.

14 (ஹவிஸ்ஸைப் பார்த்து) விசாலமான வெளியில் (ஸௌகர்யமாக) என்னைத் தொடர்ந்து வருவீராக.

15 அதிதியினுடைய மடியில் (பூமியில்) வைக்கிறேன்.

16 (அக்னி பகவானே) ஹவிஸ்ஸை ரக்ஷிப்பீராக.

---

குறிப்பு:—

(1) காலையில் அக்னிஹோத்ரம் செய்தபிறகு அந்த அக்னியில் கையைக் காய்ச்ச ஏற்பட்ட மந்த்ரம். ஜலத்தில் அலம்புவது வழக்கமாயிருக்க அக்னியில் வாட்டுவதால் எவ்வாறு சுத்தமாகும் என்ற சங்கை பிறக்குமாகையால், பின் வருமாறு குறிக்கின்றார். ஸ்நானம், ஆசமநம், முதலியவை சிரத்தையைத் தூண்டுவதற்குக் காரணமானவை. ஜலமும் சுத்திசெய்யும் சக்தியுடையதுதான். ஆயினும், அசுரர்களுக்குப் பயந்த தேவர்கள் அக்னியிற் குதித்து மறைந்தனர் என ப்ராஹ்மணம் கூறுவதால், எல்லா தேவஸ்வரூபத்தையும் அக்னியே பெற்றிருக்கிறது. அதுபற்றி, அக்னியில் காய்ச்சுவது மேல் எனக் கூறினார்.

(2) வலது கையினால் முறத்தை எடுக்க மந்த்ரம். அக்னிஹோத்ரம் செய்ய உதவுகிற அகப்பையை இடது கையில் பிடிக்கவேண்டுமெனகல்பம் கூறுகின்றது. மேலும், ஸ்ப்யம் (கூரான அகப்பை), வாணுய்கள், சாதாரண அகப்பை, முறம், மான்தோல், அரணிக்கட்டை, உரல், உலக்கை, அம்மி, குழவி, ஆகிய இப்பத்துப் பண்டங்களும் யாகத்துக்குத் தேவையென வேதம் கூறுகின்றது.

(3) முறத்தை, ஆஹவநீயத்திலாவது, கார்ஹபத்யத்திலாவது காய்ச்சுவதற்கு மந்த்ரம்.

(4) யாக தானியங்கள் இருக்கிற வண்டியின் முன்னின்று, வடபுற முள்ள (மாடுகளின் கழுத்தை வீங்கச்செய்து) ஹிம்ஸிக்கிற அக்னியை ப்ரார்த்திக்கிறார்.

(5) வண்டியைப் பார்த்துச் சொல்லும் மந்த்ரம்.

“தேவர்களுக்கு.................கோணவில்லாமலிருக்கிறாய்.” என்றது, தான்ய மூட்டைகளோடு திடமாயிருப்பதற்குச் சொல்லவேண்டும் என்

னும், "அசையாமலும், முறியாமலும் இருப்பாயாக" என்றது, தான் ஏறும் போது சொல்லவேண்டுமென்றும், ப்ராஹ்மணம் கூறுகின்றது.

(6) நெல் மூட்டைகளைப் பார்த்துச் சொல்வது.

ஸூர்யனுடைய அநுக்ரஹத்தால் கிடைத்தகண், எனவேதம் கூறுகின்றது. ஆயினும் "பயப்பட வேண்டாம், உன்னைக் கொல்லவில்லை" எனச் சொல்வதால் "மித்ரஸ்ய" என்றபதம், ஸ்நேகத் தன்மையையும், அநுகூலத்தையும் வற்புறுத்துகின்றது, என ஸாயணர் குறிக்கின்றார்.

(7) தானியங்களை மூடிவைத்திருந்த வைக்கோலை விலக்குவ றது மந்த்ரம்.

காற்று நுழையாமல் மூடப் பட்டிருக்கும் பண்டம் வருணனுக்கு ப்ரீதியாமாதலால், விஸ்தாரமாய் நுழையும்படி செய்து, அவ்வருணனுடைய ஆதிக்யத்தை நீக்குகிறார்.

(8) மந்த்ர சுத்திபெற்ற முறத்தில் அகப்பையினால் தானியத்தை எடுத்துப் போடுவதற்கு மந்த்ரம்.

தோள் முதல் மணிக்கட்டு வரையிலுள்ள ப்ராஹு அச்விநீதேவர்களால் கொடுக்கப்பட்டதென்றும், மணிக்கட்டுக்குக் கீழ் விரல்கள் உட்பட வுள்ளகைகள் பூஷாவால் கொடுக்கப்பட்டனவென்றும், கொள்க.

(9) பூர்ணமா யாகத்தில், அக்நி ஸோம தேவதைகளை உத்தேசித்து முறத்தில் தானியத்தைப் போடுவதற்கு மந்த்ரம்.

(10) முறத்தில் போட்ட தானியத்தைத் தொட்டுக்கொண்டு சொல் லும் மந்த்ரம்.

முறத்தில் போடப்பட்டிருக்கிற தானியம், அப்பொழுது செய்ய உத்தேசித் திருக்கிற யாகத்திற்கே யாதலால், "இது தேவதைகளுக்கு" என்றார். வண்டியில் உள்ள தான்யம், பிற்பாடு செய்யப்போகிற யாகங்களுக்கும், போஜனத்திற்கும் உதவுமாகையால், "அதுவோ, தேவர்களுக்கும் எங்களுக்கும்" என்றார்.

(11) முறத்திலிருக்கும் ஹவிஸை அபிமந்த்ரணம் செய்ய. "கொடுக்காமல் இருப்பதற் கல்ல" என்றது, "தேவர்களுக் கென்றே" எனப்பொருள் படுகின்றது.

(12) ஆஹவநீயத்தைப் பார்க்கும்போது சொல்லும் மந்த்ரம். "ஸ்வர்க்கம்" என அக்நிஹோத்ர அறையையும், "ஜ்யோதிஸ்" என ஆஹவநீயத்தையும் பார்க்கவேண்டுமென ஆபஸ்தம்பர் சொல்கின்றார். யாகம் ஸ்வர்க்க பதவியைக் கொடுக்கக் கூடியதாதலின், அவ்வறையை "ஸ்வர்க்கம்" என்றார்.

(13) வீட்டைப் பார்க்கவாவது, வண்டியிலிருந்து இறங்கவாவது ஏற்பட்ட மந்த்ரம். ஹவிஸை எடுத்துக்கொண்டு வண்டிவிட்டிறங்கியவர், அதடையாருக்கு அளிப்பாரோ என நடுங்கிய இகபர லோகங்களைப் பார்த்துத் ,லை மாயிருக்கட்டும்" எனச் சொல்லியதால், அவ்விரு உலகங்களும் தைரிய ,திமடகின்றன.

(14) ஹவிஸோடு வீட்டில் நுழைய மந்த்ரம்.
(15) கார்ஹபத்யத்தின் வடபுறமாக ஹவிஸை வைக்கவேற்பட்டது.
(16) கார்ஹபத்யத்தை வேண்டிக் கொள்ள மந்த்ரம்.

---

## அநுவாகம். 5.

### நெல்லைக் குத்துவதற்கு மந்த்ரங்கள்.

---

1 (ஜலத்தைப் பார்த்து) பூர்ணமான (பாவனம் செய்யக் கூடிய) தர்ப்பையாலும், வஸுவாயிருக்கிற (லோக ஸ்திதிக்குக் காரண மாயிருக்கிற) சூர்யனுடைய கிரணங்களாலும், ப்ரேரகரான ஈச்வரன் உங்களைப் பரிசுத்தம் செய்யட்டும்.

2 ஜலதேவதைகளே, (நீங்கள்) பரிசுத்தம் செய்வதில் முதன்மை பெற்றவர்கள். வேகமாகப் போவதில் தலைமை வாய்ந்தவர்கள். (ஆகையால்) இந்த யாகத்தை நிறைவேற்றுங்கள். யஜமானனை முன்னுக்கு ஏற்றுங்கள். வ்ருத்ராஸுரனைக் கொல்வதற்கு இந்திரன் உங்களை வேண்டினான். வ்ருத்ராஸுரனைக் கொல்லும் விஷயத்தில் நீங்களும் இந்திரனை வேண்டினீர்கள். ப்ரோக்ஷிக்கப்பட்டவர்களா யிருங்கள்.

3 (தான்யத்தைப் பார்த்து) அக்நியின் த்ருப்திக்காகவும், அக்நீ-ஷோம தேவதைகளின் த்ருப்திக்காகவும் உங்களை ப்ரோக்ஷிக்கிறேன்.

4 (பாத்திரங்களைக் குறித்து) தேவதைகளை உத்தேசித்துச் செய்கிற திவ்யமான கார்யத்திற்குச் சுத்தமா யிருங்கள்.

5 ரக்ஷஸ்கள் உதறப்பட்டார்கள். விரோதிகள் உதறப்பட்டார்கள்.

6 (மான்தோலைப் பார்த்து) அதிதியின் தோலாயிருக்கிறாய். (ஆகையால் இந்த) பூமியானது, உன்னைத் (தன் தோலென்று,) உணர்ந்துகொள்ளக்கடவது.

7 (உரலைப் பார்த்து) நீமரத்தால் செய்யப்பட்டிருப்பினும் கல் உரலாகவே இருக்கிறாய். (ஆகையால்) (இந்த) பூமியின் தோல் உன்னைத் (தன் தோலாகவே) அறியட்டும்.

8 (தான்யத்தை நோக்கி) நீ அக்நியின் சரீரம். வாக்கு உண்டாவதற்குக் காரணமானவன். தேவர்களின் ஆகாரநிமித்தம் உன்னை எடுக்கிறேன்.

9 (உலக்கையைப் பார்த்து) நீ மரத்தால் செய்யப்பட்டிருப்பினும் (தாருட்யத்தால்) கல்லாகவே இருக்கிறாய். தேவர்களுக்கான இந்த ஹவிஸ்ஸை மெதுவாக இருக்குமாறு சமைப்பாயாக. (தயார் செய்வாயாக)

10 (குழவியைப் பார்த்து) இந்த அன்னத்தையும், (அதன் ருசியான) ரஸத்தையும், (கொண்டு வருகிறான் என்று தேவர்களிடம்) சொல்வாயாக. (யக்ஞாயுதங்களைப் பார்த்து) மாதுர்யமானதென்று சொல்லுங்கள், நாங்கள் வைரிக் கூட்டத்தை வெல்வோமாக.

11 (முறத்தைப் பார்த்து) மழையால் வளர்ந்திருக்கிறாய்.

12 (தான்யத்தை நோக்கி) மழையால் வளர்ந்தவன் என்று உன்னை (இம்முறம்) அறியட்டும்.

13 ராக்ஷஸர்களும் வெருட்டப் பட்டார்கள்.

14 (உமியைப்பார்த்து) நீ ராக்ஷஸர்களின் பாகமாக இருக்கிறாய்.

15 (அரிசியைப் பார்த்து) வாயு உங்களை நன்றாகப் பிரிக்கட்டும்.

16 ஸ்வர்ண மோதிரம் பூண்ட ஸவிதாதேவதை உங்களை ஏற்றுக் கொள்ளட்டும்.

---

குறிப்பு:—

(1) அக்னிஹோத்ர அகப்பையின் குறுக்கே பவித்ரமும் ஜலமும் கொண்டுவந்து தர்ப்பையால் மும்முறை அரைக்கும் மந்த்ரம்.

"சூர்யன் மிகச்சுத்தமானவனாகையால் அவனுடைய ஸ்வரூபத்தை நுனி முறியாத தர்ப்பங்களிற் பாவிப்பதால் சுத்தம் ஏற்படுகிறது. ஜலம் ப்ராணாதாரமானது. சூர்யனது கிரணங்கள் ப்ராணதாரமானவை. இவ்விரண்டையும் சேர்ப்பது உயிருடன் உயிரைக் கலந்தது போல் ஆம்" என, ப்ராஹ்மணம் (3-2-5) கூறுகிறது. ஜீவகோடிகள் உயிருடன் வஸிப்பதற்குக் காரணம் சூர்யகிரணமாகையால், அதனுக்கு "வஸு" என்ற அடைமொழி கொடுத்தார். இந்தமந்திரம் மூன்றுபாதங்களோடு கூடிய காயத்ரீ சந்தஸ் ஆகையால் ஒவ்வொரு பாதத்துக்கும் ஒருமுறை அரைக்கச் சொன்னார்.

(2) ஜலத்தைப் ப்ரார்த்திப்பதற்கும் ப்ரோக்ஷிப் பதற்கும் மந்த்ரம். தர்ப்பைக்குச் சுத்தீகரிக்கும் சக்தி உண்டென்பது ஸ்வதஸ்ஸித்தம். அத்தர்ப்பையையும் சுத்தி செய்யக் கூடியது ஜலம் என்றதால் ஜலத்துக்கே சுத்திகரிக்கும் சக்தி மிகுதியென்பது சொல்லாமல் விளங்குகின்றது. ப்ரமஹம் வேகமாக ஓடக்கூடியது ஆதலால், அத்தகைய துரிதத்தோடு "யஜமானனை முன்னுக்கு ஏற்றுங்கள்" என்றார். வ்ருத்ராஸுரவத விஷயத்தில்

பயந்திருந்த இந்திரனுக்கு, ப்ரஜாபதி வஜ்ராயுதத்தை ஜலத்தால் அலம்பிக் கொடுத்தார். இஃது இந்திரன் ஜலத்தின் உதவியை வேண்டியதாம். ஆயுத ப்ரயோக விஷயத்தில் ஜலமும் இந்திரனை அபேக்ஷித்ததால் பராபேக்ஷை நிரூபிக்கப் பட்டது.

(3) முறத்திலிருக்கும் நெல்லைத் தேவதைகளுக்குப் பிரித்து ப்ரோக்ஷிக்க மந்த்ரம்.

(4) பாத்திரங்களை நிமிர்த்தி ப்ரோக்ஷிக்க மந்த்ரம்.

(5) மான்தோலைக் குப்பைமேட்டில் மும்முறை உதறுவதற்கு மந்த்ரம்.

(6) மான்தோலைக் கீழே விரிக்க மந்த்ரம்.

இத்தோலின் கழுத்துப்புறம் மேற்குப் புறமாகவும், மயிருள்ளபக்கம் மேலே இருக்குமாறும் போடவேண்டும். "பூமியின் தோல்" என்றது சரீரத்தில் தோல் ஒட்டியிருப்பது போல் பூமியை விட்டு அங்குமிங்கும் நகராமலிருப்பதற்கு என்றார். ஒரு காலத்தில் தேவர்களை விட்டுப் பிரிந்த யக்ஞபுருஷன் க்ருஷ்ணம்ருகமாகத் தன்னை ஆக்கிக்கொண்டார் என்று ப்ராஹ்மணம் கூறுவதால் நெல்லைக் குத்தும்போது கீழே விரிக்கப்பட்ட தோலில் சிந்தியவை வீணாகாது எனக்குறித்தார்.

(7) க்ருஷ்ணாஜினத்தின் மேல் உரலை வைக்க மந்த்ரம்.

(8) நெல்லை உரலில் போட மந்திரம்.

அக்னியானது காஷ்டத்தைப் பற்றி எரிவதால், காஷ்டம் அக்னிக்குச் சரீரம் போலாம். தான்யமும் ஜடராக்னியால் ஜரிக்கப்படுவதால் ஹவிஸ்ஸும் அவ்வாறே குறிக்கப்பட்டது.

(9) உலக்கையைக் கொண்டுவர மந்த்ரம்.

(10) அக்னீத்ரன்என்ற ஓர் அத்வர்யு அம்மியில் குழவியால் பலத்த சத்தத்தோடு அடிக்க மந்த்ரம். இவனைப்பற்றி ரிக்வேதம் மண். 2. ஸூக். 1. செய். 2-ற் பார்க்க

"அஸுரர்களை அழிக்கக் கூடிய மனுவினுடைய வாக்கு யக்ஞாயுதங்களில் நுழைந்தது. இச்சத்தத்தைக் கேட்கிற அஸுரர்கள் நாசமடைகிறார்கள். இதனைக் கேட்கிற யஜமானனுடைய ஞாதிகளும் நாசமடைகிறார்கள்." என் (3-2-5) ப்ராஹ்மணம் கூறுகின்றது.

(11) வடபுறம் வைத்திருக்கிற முறத்தைப் பார்த்துச் சொல்லும் மந்த்ரம்.

மூங்கிலால் செய்யப்பட்ட முறமாகையாலும், அம்மூங்கில் மழையால் வளர்ந்த தாகையாலும் இவ்வாறு கூறியது காண்க.

(13) குத்தின நெல்லை முறத்தில் போட மந்த்ரம்.

(14) புடைப்பதற்கு ஏற்பட்ட மந்த்ரம்.

பசுயாகத்தில் உதிரமும், ஔஷதியாகத்தில் உமியும் ராக்ஷஸபாகமென ப்ராஹ்மணம் கூறுகின்றது.

(15) உமியை மான்தோலின் அடியில் தள்ள மந்த்ரம்.

இம்மந்த்ரத்தை உச்சரித்துப், புடைத்த உமியை நடுவிலிருக்கும் கபாலத்தில் கொட்டிய பிறகு கையால் அள்ளி மான்தோலின் கீழே தள்ள வேண்டுமெனக் கல்பக்காரர் கூறுகின்றார்.

(16) குறுணையிலிருந்து அரிசியைப் பிரிக்க மந்த்ரம். வாயுவின் கார்யம் சுத்திகரிக்கவும் உதவும் என்றார்.

(17) அரிசியைப் பாத்திரத்தில் போட மந்த்ரம். முறத்திலிருந்து பாத்திரத்தில் போடும் பொழுது கீழே சிந்தக்கூடிய ஹவிஸ் வீணம்போகாமல் ஸவிதா தேவதை அதனை வாங்கிக் கொள்ளட்டும் என்றார்.

அரிசியை மும்முறை திட்டும்படி யஜமான பத்னியை ஏவவேண்டுமென்று ப்ராஹ்மணம் (3-2-5) கூறுகின்றது.

---

## அநுவாகம். 6.

அரிசிமா பிசைவதற்கான மந்த்ரங்கள் கூறப்படுகின்றன.

1 (மான்தோலைக் குறித்து) ரக்ஷஸ் உதறிவிடப் பட்டது. வைரிகள் உதறப்பட்டார்கள். நீ அதிதியின் (பூமியின்) தோல். பூமி உன்னை எடுத்துத் தனதுதோலென்று அறியட்டும்.

(2) ([சமியை(மரக்குழவியைப்) பார்த்து]. தேவலோகத்தைத் தாங்குகிறாய். க்ருஷ்ணாஜினரூபமான பூமியின் தோல் உன்னை யறியட்டும்.

(3) (அமியைப் பார்த்து) (உனக்கு மாவரைக்கத் தெரியுமாகையால்) நீபுத்தியுள்ளவன். மலைக்கு ஒப்பான உனது உறுதியால் தேவலோகத்தைத் தாங்குகிற இந்தக்குழவி உன்னைக் கனப்படுத்தட்டும்.

(4) (அமிக்குழவியைப் பார்த்து) புத்திசாலியாயும் மலைக்கு ஒப்பாயுமிருக்கிறாய். உன்னை அம்மியானது அபிமானிக்கட்டும்.

(5) (தான்யத்தைப் பார்த்து) ஸவிதாவின் பலத்துக்காக, அசுவிநீ தேவர்களின் பாஹுக்களாலும், பூஷாவின் ஹஸ்தங்களாலும் உன்னை எடுத்து (அமியின்மேல்) போடுகிறேன். ஆஹுதி ரூபமான தான்யமாயிருக்கிறாய். தேவர்களைத் திருப்தி செய்வாயாக.

(6) (ஹவிஸைப் பார்த்து) ப்ராணனுக்காக உன்னையும், அபானனுக்காக உன்னையும், வ்யானனுக்காக உன்னையும் (பிசைகிறேன்)

(7) (பாஹூவைப் பார்த்து) (யஜமானனின்) ஆயுளின் பொருட்டு இடைவிடாமல் கார்யம் முழுவதையும் நடத்த ஸாதகமான குழவியைத் தரிக்கிறேன்.

(a) (மாவைப் பார்த்து,) (உங்களை) ஸவித்ரு தேவன் மோதிரக்கையால் ஏற்றுக் கொள்ளட்டும்.

---

குறிப்பு:—

(1) மான்தோலைக் கீழே விரிப்பதற்கு மந்த்ரம்.

தலைப்புறத்தை மேலாகப் பிடித்து மும்முறை உதறி, பிறகு மேற்குப்புறம் கழுத்தும் ரோமமுள்ள பக்கம் மேலாகவுமாக மான்தோலைக் கீழே விரிக்கவேண்டும்.

(2) சமியை மான்தோலில் வைப்பதற்கு மந்த்ரம்.

அம்மியை ஒருபுறம் உயர்ந்திருக்கும்படி தூக்கி வைப்பதற்கு உபயோகிக்கிற குழவிபோன்ற ஒரு பொருளை "சமி" என்றார்.

ப்ரஜாபதி ஆதியில் படைத்தபொழுது வானமும் பூமியும் சமியின் உருவத்தைப் பெற்று ஒன்றாயிருந்தது பற்றித் தேவலோகத்தைத் தாங்குகிறதாகக் குறித்தார்.

(3) மான்தோலின் மேல் அம்மியை வைப்பதற்கு மந்த்ரம்.

மரத்தால் செய்யப்பட்டிருப்பினும் முன் கூறியவாறு வானத்தைத் தாங்கும் சக்தியுடைய இக்குழவி கல்லால் செய்யப்பட்டிருக்கிற அம்மியை அபிமானிக்குமாறு கூறினார்.

(4) அம்மியில் குழவியை வைப்பதற்கு மந்த்ரம்.

மலையிலிருந்து வந்த குழவியும் மலையிலிருந்து உண்டான அம்மியும் பிறந்தவிடம் ஒன்றாதல் பற்றி அக்குழவியை அபிமானித்தல் தகுதி என்றார்.

(5) அம்மியின் மேல் தான்யத்தைப் போடுதற்கு மந்த்ரம்.

அக்னிக்கும் அக்னிஸோமர்களுக்கும் தனித்தனி போடுகிறார் எனப் போதாயனர் கூறுகிறார். அம்மியில் வைத்த தான்யம் சிறிதாயினும் மந்த்ரபலத்தால் பெரிது ஆம் என ப்ராஹ்மணம் குறிக்கின்றது. அசுவினியும், பூஷாவும் பாஹூ புஜங்களுக்குப் பலம் கொடுப்பவர்கள் என வேதம் முன்னமேயே கூறியுள்ளது.

(6) தான்யத்தை மாவாக்க மந்த்ரம்.

ப்ராணனுக்கு எனக் கிழக்கிலும், அபானனுக்கு என மேற்கிலும் வ்யானனுக்கு என நடுவிலும் அரைக்கவேண்டும் என்பது ஆபஸ்தம்பாது அபிப்ராயம்.

உள்ளே செல்கிற மூச்சு ப்ராணன் எனவும், வெளி யேறிவது அபானன் எனவும், இவ்விரு சுவாஸங்களுக்கும் நடுநிலையிலுள்ளது வ்யானன் எனவும் கூறுகின்றார்.

(7) பாஹூவைப் பார்ப்பதற்கு மந்த்ரம்.

(8) அரைத்த மாவை மான்தோலில் போடுதற்கு மந்த்ரம்.

---

## அநுவாகம்—7

---

கபாலத்தை அடுப்பில் வைப்பதற்கு மந்திரங்கள்.

---

(1) (உபவேஷத்தைப் பார்த்து) நீ ஸாமர்த்யசாலியா யிருக்கிறாய். (தணலை எதிர்ப்பதனால்) வேத மந்த்ரத்தாலுண்டான (புரோடசம் என்ற அன்னத்தைக்) கொடுப்பாயாக.

(2) ஏ கார்ஹபத்யமே, (அசாஸ்திரீயமான) ஆமத்தைத் தின்ற அக்நியை வெருட்டு. மாம்ஸங்களைப் பக்ஷிக்க அக்நியை இங்கிருந்து (ஓட்டி) விடும். தேவர்களுக்கு ஹவிஸைக் கொடுக்கக் கூடிய அக்நியை இவ்விடம் வருவிப்பீராக.

(3) (கபாலத்தைப்பார்த்து) ரக்ஷஸ் அக்கியில் எரிக்கப் பட்டான். வைரிகளும் எரிக்கப் பட்டார்கள். நீ திடமானவன். பூமியைத் திடப்படுத்து. இந்த யஜமானனுடைய ஞாதிகளை ஸேவகர்களாகும்படி செய்.

(4) (அஷ்டகபாலமே) நீ திடமானவன். அந்தரிக்ஷத்தையும், ப்ராணனையும், அபானனையும் திடப்படுத்து, யஜமானனுடைய ஞாதிகளைச் சேவகர்களாக்குக. நீ தார்யமானவன், ஆகாயத்தையும், சக்ஷுஸையும், செவியையும் திடப்படுத்து. யஜமானனுடைய ஞாதிகளைச் சேவகர்களாக்கு. நீ உறுதியானவன். திசைகளையும், யோகியையும், ப்ரஜையையும் திடப்படுத்துக. யஜமானனுடைய ஞாதிகளை ஸேவகர்களாக்குவாயாக. நல்ல வஸ்துக்களின் குவியலாயிருக்கிறாய். இந்த யஜமானனுக்கு ஐச்வர்யத்தையும் ப்ரஜையையும் அருள்வீராக. யஜமானனுடைய ஞாதிகளைச் சேவகர்களாக்குக

5 (கபாலங்களைப் பார்த்து) ப்ருகு, அங்கிரஸ் தேவதைகளின் தபோரூபமான அக்கினியால் உஷ்ணமடையுங்கள்.

(6) யாகம் செய்கிறவர்கள் எந்தக் கபாலங்களை அக்நியில் ஸ்தாபித்தார்களோ, அவைகளையே யாகபோஷகனுடைய (யஜமானனுடைய) விரதம் (யாகம்) முடிந்த பொழுது இந்த்ர வாயுக்கள் இறக்கட்டும்.

---

குறிப்பு:—

(1) குச்சியால் அக்நியைக் கிளறுவதற்கு மந்த்ரம்.

பலாச சாகையின் அடியில் சாண்நீளத்தில் ஒடித்த குச்சியை "உபவேஷம்" என்றார்.

(2) கார்ஹபத்யம், ஆஹவநீய மல்லாத அக்நியில் இரண்டு தணல்கள் எடுத்து ஒன்றை விலக்கி மற்றொன்றை ஸ்தாபிப்பதற்கு மந்த்ரம்.

"வெருட்டும், ஓட்டிவிடும்" எனச்சொல்லி ஒருதணலை எறிந்து விட்டு, "வருவிப்பீராக என்றுரைத்து ஒரு தணலை அங்கீகரிக்க வேண்டும்.

(3) தணலில் கபாலத்தை வைக்கவும் கபாலத்தில் தணலைவைக்கவும் மந்த்ரங்கள்.

'நீ திடமானவன்' என்று நடுவிலுள்ள புரோடாச கபாலத்தைத்தணலில்வைத்து, "எரிக்கப்பட்டார்கள்,' என்று கபாலத்தில் தணலை வைக்கவும் கபாலத்தின் மேலும் கீழும் தணலிருத்தலால் இருசுடருக்கு மத்தி என்றார். இவை பூமி அந்தரிக்ஷங்களுக்குச் சுடர்களாயின. ஸ்வர்க்கத்துக்குச் சூர்யன் இருப்பதால் முச்சுடராயிற்று என்றார்.

(4) 2-3-7-8வது கபாலங்களை அனலில் வைப்பதற்கு மந்த்ரம்.

"நீ திடமானவன்" என்று 2-வதையும், 'நீதார்ட்ய முள்ளவன்'என்று 3-வதையும், 'நீ 'உறுதியானவன்' என்று 7வதையும், குவியலாயிருக்கிறீர்' என்று 8-வதையும் வைக்க வேண்டு மென்பது ஆபஸ்தம்பர் கூற்று.

கர்ப்பத்திலிருக்கும் சிசுவுக்குக் கபாலம்(மண்டை)முதலில் அமைவதுபோல் யாகாரம்பத்தில் கபாலங்களைக் குறித்தார். மந்த்ரத்தால் கபாலங்கள் சுத்தி பெறுவதால் யாகமும், யஜமானனும் சுத்தியடைகிறார்கள். இந்தச்சுத்தி ஸ்வர்க்கத்துக்குச் சாதகமாகிறது.

(5) புதிதாக வைத்த கபாலங்களில் தணலைவைப்பதற்கு மந்த்ரம்.

(6) கபாலங்களை இறக்குவதற்கு மந்த்ரம்.

இது யாகமுடிவில் சொல்ல வேண்டியதாயினும் கபாலங்களை முன்னிட்டு இங்கு குறித்தார்.

---

## அநுவாகம்–8.

---

புரோடாசம் சமைக்க மந்த்ரங்கள்.

---

(1) (மாவைப்) போஷிக்கிறேன்.

(2) அப்புக்கள் அப்புக்களோடு சேரட்டும். ஓஷதிகள் (உஷ்ணமும் சீதமுமான ஜல) ரஸத்தோடு சேரட்டும். தனத்தைக் கொடுக்கும் ஓஷதிகள் பசுக்களைக் கொடுக்கும் ஓஷதிகளோடு கூடட்டும். மாதுர்யமான ஓஷதிகள் மாதுர்யமான ஓஷதிகளோடு சேரட்டும்.

(3) (மாவைப் பார்த்து) முன் ஜலத்தால் உண்டானவர்கள். நீங்கள் (இப்பொழுது) ஜலத்தோடு சேருங்கள்.

(4) ப்ரஜா வ்ருத்திக்காக உங்களைப் பிசைகிறேன்.

(5) உன்னை அக்னிக்கும், உன்னை அக்னீ ஷோமர்களுக்கும் (கொடுக்கிறேன்.)

(6) நீ யாகத்தின் சிரஸாயிருக்கிறாய்.

(7) (புரோடாசத்தைப் பார்த்து) (காய்ந்த கபாலத்தில் இருப்பதால்) நெருப்பாக இருக்கிறாய். (தேவதைகளுக்கு ப்ரயோஜனமானதால்) பூர்ணமான ஆயுளைக் கொடுக்கிறாய்.

(8) நீ விஸ்தாரமாக இரு. யஜமானனும் (ப்ரஜை முதலியவற்றால்) விஸ்தாரமடையட்டும்.

(9) (நீரால் ம்ருதுவான) தோலை அடைவாயாக.

(10) ரக்ஷஸ்கள் மறைந்தார்கள். வைரிகள் மறைந்தார்கள்.

(11) (புரோடாசத்தைப் பார்த்து) வ்ருத்தியடைந்திருக்கிற நாகம் என்ற அக்னியில் சேர்த்து, ஸவிதா தேவன் (உன்னைப்) பக்வம் செய்யட்டும். அக்னி உன் சரீரத்தை அதிகமாய்க் காய்ச்சாமல் இருக்கட்டும்.

(12) அக்னியே, ஹவிஸை ரக்ஷிப்பீராக.

(13) (புரோடாசத்தைப் பார்த்து) மந்த்ரத்தோடு சேர்க்கையை அடைவாயாக.

(14) ஏகதா, த்விதா, த்ரிதா தேவதைகள் ஹோமம் செய்யப்படட்டும்.

---

குறிப்பு:—

(1) பிசைந்த மாவைப் பாத்ரத்தில் போடுவதற்கு மந்த்ரம்.

இம்மந்திரத்தின் பாக்கியை 1-1-4-8ல் கூறியபடி நிரப்பிக் கொள்ளச் சொன்னார். பக்கம் 21—ல் பார்க்க.

(2) மாவிருக்கும் பாத்ரத்தில் கிண்ணத்திலிருக்கிற குளிர்ந்த ஜலத்தையும் உஷ்ண ஜலத்தையும் ஊற்றுவதற்கு மந்த்ரம்.

கிண்ணத்திலிருக்கும் ஜலத்திற்கு "ப்ரணீதா" எனப்பெயர் மாவாயிருக்கிற ஓஷதியோடு இருவிதமான ஜலங்கள் கலக்கின்றன. ஜலம் ஸ்வபாவத்தில் குசியுள்ளது. அதனால் விளைகிற தான்யத்தால் தனம் கிடைப்பதால் தனரூபமுடையதாகும். பசுக்கள் வ்ருத்தி யடைவதால் பசுரூபத்தை யுடையதாம். தேவார்ஹமான மாவோடு கலத்தலால் இரண்டும் ஸந்தோஷிக்கட்டும் என்றார்.

(3) மாவை முழுவதும் நனைப்பதற்கு மந்த்ரம்.

மழையினால் பெய்த ஜலம் பூமியில் இறங்கி எவ்வாறு பயிர்களைச் செழிப்பிக்கின்றதோ, அவ்வாறு புரோடாசத்தைச் செழிப்பிக்குமாறு ஜலத்தால் நனைத்தார்.

(4) மறுபடியும் ஜலம் கலப்பதற்கு மந்த்ரம்.

சுக்ல சோணித ஸம்பந்தத்தால் குழந்தைகள் ஜனிப்பது போல மாவும் ஜலமும் கலப்பதால் ப்ரஜாவ்ருத்தியாம் என்றார்.

(5) மாவைப் பிரிக்க மந்த்ரம்.

அக்நிக்கு இது, அக்நி ஸோமர்களுக்கு இது, எனத் தனித்தனியே வைக்கிறார்.

(6) மாவை உருண்டையாக்குவதற்கு மந்த்ரம்.

(7) புரோடாசத்தை எட்டுக்கபாலங்களில் வைக்க மந்த்ரம்.

(8) புரோடாசத்தைத் தட்டையாக்குவதற்கு மந்த்ரம்.

ஜலம் தெளிப்பதால் புரோடாசம் விஸ்தாரமாவதுபோல் யஜமானன் வ்ருத்தியடைகிறான்.

(9) மேடுபள்ளமில்லாமல் தோலால் மூடப்பட்டிருக்கிற உடம்பு போலிருக்கும்படி புரோடாசத்தைப் புரட்டுவதற்கு மந்த்ரம்.

(10) பர்யக்நி கரணம் செய்வதற்கு மந்த்ரம்.

கொளுத்திய தர்ப்பையை மும்முறை சுற்றுதல் "பர்யக்நிகரணம்" இவ்வாறு செய்வதால் ரக்ஷஸ்கள் மறைகின்றன. மேலும், ஒவ்வொரு பக்ஷமும் கபாலங்கள் சூடேற்றப்படுவதால் அவ்வுஷ்ணம் ஒருவேளை யஜமானனையும் தாக்கக்கூடும். அப்படித் தாக்காமலிருக்குமாறு இப்பர்யக்நிகரணம் கூறப்பட்டது.

(11) புரோடாசத்தை அதிமாய்க் காய்ச்சாதபடி அக்நியை வேண்டுகிறார்.

தேவலோக வாஸியான நாகாக்நி ரக்ஷஸ்களை அழிக்க வல்லமை வாய்ந்தது என ப்ராஹ்மணம் கூறுகின்றது.

(12) கார்ஹபத்யத்தை வேண்டுகிறார்.

(13) புரோடாசங்களின்மேல் தர்ப்பைக்கட்டை வைத்து அதன் மேல் சாம்பலைத் தூவுகிறார்.

புரோடாசம் மண்டை ஓட்டிற்குள் இருக்கிற நெய்ப் பசையுள்ள கொழுப்புக்கு ஒப்பென்றும், அதனைச் சாம்பலால் மூடுவது கொழுப்பு மாம்ஸத்தால்மூடப்பட்டிருத்தலுக்கு ஒப்பென்றும் கூறியுள்ளார். மந்த்ரபலத்தால் புரோடாசம் கெடாமலிருக்கு மென்பது துணிபு.

(4) புரோடாச பாத்ரங்களை அலம்பிக் கொட்டுவதற்கு மந்த்ரம். பாத்ரங்களில் ஜலம் ஊற்றி, கார்ஹபத்யத்தில் காய்ச்சி, மேற்குப்புறமான மூன்று கோடுகளில் கொட்டவேண்டும்.

பூர்வத்தில் தேவர்கள் முளைக்கக் கூடிய தான்யங்களைக்குத்தின தோஷத்தை அக்நியிடம் விட்டார்கள். அக்நியும்அப்பாபத்தை மும்முறைஜலத்தில் விட்டதால்ஏகதா முதலிய மூன்று தேவதைகள் உண்டாயினர். இந்த ஹோமத்தால் அத்தேவதைகள் சாந்தியடைவதோடு வீரஹத்தி, ப்ருஹ்மஹத்திமுதலிய ஸகல பாபங்களும் சமனமடைகின்றன.

---

## அநுவாகம். 9.

---

### வேதி கட்டுவதற்கு மந்த்ரங்கள்.

---

(1) (ஸ்ப்யத்தைப் பார்த்து) உன்னை எடுக்கிறேன்.

2 ஆயிரக்கணக்கான சத்துருக்களை வதஞ் செய்ததும்; நூற்றுக்கணக்கான ஆயுதங்களோடு பளபளவென மின்னுவதுமான இந்திரனுடைய வலது கையாயிருக்கிறாய். வெகு தீக்ஷ்ண்யமான தேஜஸோடு கூடிய வாயுவாக விருக்கிறாய்

(3) தேவயாகத்துக்கு ஆதாரமான பூமியே, உன் செடிகளின் மூலத்தை அழிக்காமலிருப் பேனாக.

(4) அரரு (என்ற அசுரன்) இந்தப் புவியிலிருந்து ஓட்டப் பட்டான்.

(5) (புல்லோடு கூடிய குப்பையைக் குறித்து) மந்த்ர ஸ்தானமான குப்பைமேட்டைச் சேர்வாயாக.

೬)) (வேதியைப் பார்த்து) உனக்காக மேகம் வர்ஷிக்கட்டும்.

(7) ஸவித்ருதேவா, (புல்லும் தூளியுமாக இருந்து) எங்களை த்வேஷிக்கிறவனையும், நாங்கள் த்வேஷிக்கிறவனையும் நூறுகயிறுகளால் தூரத்தில் கட்டும். கட்டியிருந்து அவர்களை விடவேண்டாம்.

8 அரரு (என்ற அசுரன்) தேவயாகத்திற்கு யோக்கியமான இந்த இடத்திலிருந்து வெருட்டப் பட்டான். மந்த்ர ஸ்தானமான குப்பை மேட்டை அடைவாயாக. உனக்காக மேகம் வர்ஷிக்கட்டும். ஸவித்ரு தேவனே, எங்களை த்வேஷிக்கிறவனையும் நாங்கள் த்வேஷிக்கிறவனையும் தூரத்தில் நூறு கயிறுகளால்கட்டுவாயாக. அவர்களை விடாமருலிப்பாயாக. தேவயாகத்தைத் தடுக்கிற அரரு என்றஅசுரன் இந்த இடத்திலிருந்து துரத்தப் பட்டான். மந்த்ரஸ்தானமான குப்பை மேட்டை அடைவாயாக. உனக்காக மேகம் வர்ஷிக்கட்டும். எங்களை த்வேஷிக்கிறவனும் நாங்கள் த்வேஷிக்கிறவனும் வெகு தூரத்தில் நூறுகயிற்றால் கட்டப் படட்டும். கட்டியிருந்து அவர்களை விட்டு விடவேண்டாம்.

9 (குப்பை மேட்டை நோக்கி) உன்னை அடைந்த அரரு ஸ்வர்க்கம் செல்லாமலிருக்கட்டும்.

10 (வேதியைப் பார்த்து) வஸுக்கள் காயத்ரீச் சந்தஸால் உன்னைச் சுற்றிக் காக்கட்டும். ஆதித்யர்கள் ஜகதீச் சந்தஸால் உன்னைச் சுற்றிக் காத்துக் கொள்ளட்டும்.

11 ஸவித்ரு தேவதையின் அநுமதியால் அத்வர்யுக்கள் (மண்ணை வெட்டுகிற) கார்யத்தைச் செய்கிறார்கள்.

12 ஸத்யமாக இருக்கிறாய், ஸத்யத்திற்கு இருப்பிடமாக இருக்கிறாய். ஸத்தியத்துக்குக் காரணமாயிருக்கிறாய்.

13 வேதியே, குப்பை மேட்டில் பாசத்தால் கட்டுப் பட்டிருக்கிற க்ரூரனான அரரு வெளிப்படுதற்குமுன் (தைவீகமான ஹவிஸை) தரிக்கிறவளாக இருக்கிறாய். (பித்ருக்கள் அடைகிற ஸ்வதையாகவும் இருக்கிறாய். விஸ்தாரமாயிருக்கிறாய். (புரோடாசம் முதலிய) த்ரவியங்களோடு கூடினவளாயிருக்கிறாய். வெகுநாள் ஜீவிக்கும் ஸ்வபாவமுள்ள யஜமானர்கள் வேதிரூபமான பூமியைச்சந்த்ரனிடத்தில் உயரத்தூக்கி ஸ்தாபித்தார்கள். இப்போதுள்ள புத்திமான்கள் அதுபோலவே மனதால் அநுஸந்தானம் செய்து யாகம் செய்கிறார்கள்.

---

குறிப்பு:—

(1) ஸ்ப்யத்தை எடுப்பதற்கு மந்த்ரம். ஸ்ப்யம் கொல்லத்துக்காரன் கரண்டி போன்றது.

வேதிக்குப் பின்புறம் நின்று ஸ்ப்யத்தை எடுக்கிறார். ஸவிதாவின் வருகைக்காக அச்வினியின் பாஹுக்களாலும், பூஷாவின் கைகளாலும், உன்னை எடுக்கிறேன் என்றார்.

(2) ஸ்ப்யத்தைப் பார்த்துச் சொல்லும் மந்த்ரம்.

இந்த ஸ்ப்யம் வலிபொருந்திய ஆயுதமாதலால் இந்த்ரனுடைய கையை உவமித்தார். யஜமானனின் தேஜஸின் பொருட்டு வாயுவைத் தேஜோவான் என்றார்.

(3) வேதியின் வடபுறம் ஸ்தாபித்திருக்கிற தர்ப்பத்தை ...யத்தால் அடிப்பதற்கு மந்த்ரம்.

வேதியில் வடக்கு நுனியாகத் தர்ப்பையைப் பே...
தால் இவட்டுகிறார். இந்தப் பூமியில் விஷ்ரதன் ...
செய்ததாலும், வ்ருத்ரனுடைய இரத்தம் அதன்மே...
அது அசுத்தமாயுள்ளது.

"ப்ருதிவீ தேவயஜநி" என்று கூறுவதால் ...
ப்ராஹ்மணம் உரைக்கின்றது.

(4) ஸ்ப்யத்தினால் புல் முதலிய கூளங்களை வி... மந்த்ரம்.

(5) குப்பையை வடபுறம் கொண்டு போக மந்த்ரம்.

"அஸ்து ச்ரௌஷட்" என்ற மந்த்ரம் "கோ" என்ற பதத்தால் குறிக்கப் பட்டது. இது யாகசாலையின் வடபுறமிருந்து செல்லப் படுதலால் அத்திசையை "கோஸ்தானம்" என்றார்.

குப்பை மேடும் வடபுறத்திலேயே உள்ளது.

(6) வேதியைப் பார்ப்பதற்கு மந்த்ரம்.

(7) வடபுறம் குப்பையைக் கொட்டுவதற்கு மந்த்ரம்.

குப்பை கூளங்களை விலக்குவதால் 3-வது மந்த்ரத்தில் குறித்த அரரு என்ற அசுரன் அழிந்தான் என்றார். இவன் உலகெலாம் பரவிப் படுத்திருந்தான் "அபஹதோ அரரு" என்ற மந்த்ரத்தை உச்சரித்து அவனைத் தேவர்கள் அழித்தார்கள்.

(8) ஸ்தம்ப யஜுஸை எடுத்து எறிவதற்கு மந்த்ரம்.

ஸ்ப்யத்தால் நறுக்கப்பட்ட தர்ப்பைக்கு ஸ்தம்பயஜுஸ் எனப்பெயர். அதை ...ம்முறை குப்பை மேட்டில் எறிகிறார்.

8-வது மந்த்ரம் முதல் மறுபடியும் கூறுகின்றார். தேவயாகத்திற்குத் தகுதியான பூமியிலிருந்து வெருட்டப்பட்டானென்றும் தேவயாகத்துக்கு விரோதமாயுள்ளவன் வெருட்டப் பட்டானென்றும் அடிக்கடி சொல்லியது, வேதியைத் தேவயக்ஞத்துக்குத் தகுதியாக்குமாறு எனக் கொள்க.

(9) குப்பைகள் மறுபடி யாகபூமியில் வராமலிருக்கும்படி சொல்கிற மந்த்ரம்.

(10) பரிக்ராஹம் செய்வதற்கு மந்த்ரம்.

ஆஹவநீய கார்ஹபத்யங்களுக்கு மத்தியில் வேதி செய்வதற்கு ஸ்ப்யத்தால் மூன்று கோடுகள் போடுவது பரிக்ராஹம் எனப்படும். இம்மந்த்ரத்திற் கூறியுள்ள மூன்று பகுதிகளைச் சொல்லிக் கொண்டு கோடுகளைப் போட வேண்டும்.

ஆதியில் புவிமுழுதும் அசுரர்களால் ஆக்ரமிக்கப் பட்டிருந்தது. அப்பொழுது தேவர்கள் பார்த்தவிடமும் அவர்கள் தங்கிய விடமும் அவர்களுக்கு ஸ்வாதீனமாயிற்று.

அந்தந்த விடங்களில் வேதியைக் கட்டினார்கள். வஸுக்கள் தென்புறத்தையும், ருத்ரர்கள் மேற்புறத்தையும், ஆதித்யர்கள் வடபுறத்தையும், அக்நி கீழ்புறத்தையுமாக அடைந்தார்கள். வேதியைக் கட்டும் பொழுது அந்தந்தத் திசையில் மேற் குறித்தவாறு ஸ்தாபிக்கச் சொன்னார்.

(11) வேதி வெட்டுவதற்கு மந்த்ரம்.

ஸ்ப்யத்தினால் அத்வர்யு கிழக்குப் புறத்தில் முதலாக வெட்டுகிறார் மேடுபள்ள மில்லாமலும், நான்கு அங்குலம் ஆழமாகவும் வெட்டவேண்டும். சாண் ஆழம் வெட்டியும் மணல் தென்படாவிடில் இன்னும் ஆழமாக வெட்டவேண்டும். தென்புறம் மேடாகவும் கிழக்கிலும் வடக்கிலும் சரிவாகவும் வேதி செய்யப்பட வேண்டும். மண்கட்டிகள் இல்லாமல் ஸமனாக இருக்குமாறு மணலைத் தூவ வேண்டும்.

(12) வேதியின் வடபுறம் பரிக்ராஹம் செய்ய மந்த்ரம்.

'ஸத்யம்' என்று தெற்கிலும்' இருப்பிடமென்று மேற்கிலும் காரணமென்று கிழக்கிலும் 10-வது மந்த்ரத்தில் கூறியது போல் இம்மந்த்ரத்தின் மூன்று பகுதிகளுக்கும் மூன்று கோடுகள் கிழிக்க வேண்டும்.

அசுரருக்குச் சொந்தமல்லாமல் தேவர்களுக்கே உரியதாதலின் வேதியை ஸத்யம் என்றார். ஹவிஸுக்கு இருப்பிடமாதலினாலும், ஹவிஸ்ஸலத்தைக் கொடுக்கத் தவறாததாலும் ஸத்யத்துக்கு இருப்பிட மென்றார்.

(13) வேதியைச் செய்து முடிப்பதற்கும் அதனைப்பார்ப்பதற்கும் மந்த்ரம்.

அம்ருதமயமான சந்த்ரமண்டலத்தை அநுஸந்தானம் செய்யச்சொன்னார். புவியைவிடச் சந்த்ர மண்டலம் சுத்தியுள்ளதென்று அதனை வீமமாகமாக ஸ்மரணை செய்தார்.

## அநுவாகம். 10.

யாகத்திற்குஆஜ்யம் முதலியன தயாரிக்கவும், பத்நிக்கு யோக்த்ரம் கட்டவும் மந்த்ரங்கள்.

1 (ஸ்ருக்குக்களைப் பார்த்து) அதிதீக்ஷ்ணமான (அக்நியின்) தேஜஸால் காய்ச்சுகிறேன்.

2 மாட்டுக் கொட்டிலை நாசம் செய்யாம விருப்பேனாக, (இதனால்) அன்னத்துக்கு ஆதாரமும், சத்துருக்களை அடக்குபவருமான உம்மைச் சுத்தப் படுத்துகிறேன். (துடைக்கிறேன்.)

வாக்கையும், ப்ராணனையும், கண்ணையும், காதையும், ப்ரஜையையும், அதன் காரணத்தையும் நாசம் செய்யாமலிருப்பேனாக. அன்னத்துக்கு ஆதாரமும் சத்துருக்களை அடக்குபவருமான உம்மைச் சுத்தப் படுத்துகிறேன்.

3 அக்நிக்கு வ்ரதாதிகளால் பணிவிடை செய்து கொண்டு நல்ல மனதையும், ப்ரஜையையும், ஸௌபாக்கியத்தையும், (அழிவில்லாத) சரீரத்தையும் ப்ரார்த்தித்து நிற்கும் பத்நியைச்சுகமாய் (இருக்கும்) ஸத்கர்மாவுக்காகக் கட்டுகிறேன்.

4 (கார்ஹபத்யத்தை வணங்கி) ஸத்ப்ரஜைகளோடும் கூடின நாங்கள், சத்துரு நாசத்துக்குக் காரணமும், ஒருவராலும் அவமதிக்கத் தகாதவருமான உம்மை, உமது ப்ரஸாதத்தால் ஒருவராலும் அவமதிக்கப்படாத நாங்கள் பூஜிக்கின்றோம்.

5 நல்ல ஞானத்தோடுகூடிய ஸவிதா தேவதை கட்டிய இந்த வருணபாசத்தை அவிழ்க்கிறேன். அநுஷ்டானம் செய்த கர்மபலனை ப்ரஹ்மலோகத்திலெனது பதியோடு சுகமாய் இருப்பேன்.

6 ஆயுளை அடைவேனாக ,ப்ரஜையையும்,(பதிவ்ரதையாயிருக்கிற(தேஜஸையும் அடைவேனாக, திரும்பத்திரும்ப இந்தப் பதிக்குப் பத்நியாக (பிரியாமல்)இருப்பேனாக,இச்சரீரத்தில் ஜீவாத்மா நிலைத்திருக்கட்டும்.

7 (நெய்யைப்பார்த்து) நீ பசுக்களின்பால், நீ ஒஷதிகளின் ரஸம், உனக்குக் குறைவில்லாம விருப்பதற்காக இந்த ஸ்தாலியில் உன்னை விடுகிறேன்:

8 நீ பசுக்களின் பால், நீ ஒஷதிகளின் ரஸம், (ரோகங்கள் முதலிய) தோஷமில்லாத கண்களால் நல்ல ப்ரஜைக்காக உன்னைப் பார்க்கிறேன்,

9 உன் ரூபம் தேஜஸ். தேஜோரூபமான (ஆஹவனீயத்தில்) ப்ரவேசிப்பாயாக. (இது) உன் தேஜஸை அபகரிக்காமலிருக்கட்டும்.

10 நீ அக்நியின் நாக்கு. தேவர்கள் உன்னால்சுகமடைகிறார்கள். அந்தந்த (ஆஹுதி) ஸ்தானத்துக்கு அந்தந்த யஜுஸால் (எடுத்துக் கொள்வதற்குப்) போதுமானதாகஇருப்பாயாக.

11 சுத்தமாக இருக்கிறாய், நீ ஜ்யோதிஸ், (தேவர்களுக்குத்) தேஜஸைக்(கொடுப்பவன்.)

12) ஸவித்ரு தேவன் (பின்னமில்லாத) பவித்திரத்தால் உங்களைச் சுத்தீகரிக்கட்டும். லோகஸ்திதிக்குக் காரணமான சூர்யன் தனது கிரணங்களால் சுத்தப் படுத்தட்டும்.

13 சுத்தமான உன்னைச் சுத்தமான ஜுஹூவில் அந்தந்த ஆஹுதி ஸ்தானத்துக்கு அந்தந்த யஜுர்மந்த்ரத்துக்கு எடுத்துக்கொள்கிறேன். ஜ்யோதிஸ் ரூபமான உன்னை ஜ்யோதிஸ் ரூபமான உபப்ருத்திலும் அர்ச்சிஸான உன்னை அர்ச்சிஸான த்ருவையிலும் அந்தந்தஆஹுதி ஸ்தானத்துக்கு அந்தந்த யஜுர் மந்த்ரத்தால் எடுத்துக் கொள்கிறேன்.

குறிப்பு:—

பி (1) ஆறு ஸ்ருக்குக்களைக் கார்ஹபத்யத்தில் காய்ச்ச மந்த்ரம்.

ஸ்ருவம், ஜுஹூ, உபப்ருத், த்ருவைமுதலிய பண்டங்களைக்காய்ச்சுகிறார்.

(2) அவைகளைத் துடைப்பதற்கு மந்த்ரம்.

"கோஷ்டம்" எனச்சொல்லி ஸ்ருவத்தையும், "வாசம், ப்ராணம் 'என ஜுஹூவையும், "சக்ஷுஸ், ச்ரோத்ரம்" என உபப்ருத்தையும், "ப்ரஜாம் யோநிம்" என த்ருவையையும் துடைக்கிறார்.

ப்ராணாதாரமும் கட்டாயம் வேண்டுவனவுமான பசு, வாக்கு ப்ராணன், கண், காது, ப்ரஜை, யோநி, முதலியவை குறிக்கப்பட்டன.

மேற்கூறிய பண்டங்களில் ஸ்ருவம் ஒன்றே ஆண் ஆதலால் அதனை முதற் குறித்தார். மற்றவை பெண் என்பது வெளிப்படை.

"ஜுஹூ ஸ்தரீ, உபப்ருத் அந்தரிக்ஷம், த்ருவை என்பது இவ்வுலகு, ஸ்ருக்குக்கள் ஏனைய உலகங்களாம். இவைகளை மந்த்ர மூலமாய்த் துடைப்பது மழைக்குக் காரணமாம். மழையின்றி உலகு நிலைபெறாது, என ப்ராஹ்மணத்தில் குறிக்கின்றார்.

(3) பத்நிக்கு யோக்த்ரம் கட்டுதற்கு மந்த்ரம்.

யோக்த்ரம் என்பது சடைபோல் திரித்த தர்ப்பை. இது பத்நிக்குக் கட்டுவதற்கு உதவுவது.

வேதியின் வடபுறமாகப் பத்நியை அழைத்துப், பின்புறமாக வலது பக்கத்தில் சென்று, கார்ஹபத்யத்தின் முன் வடக்குமுகமாக உட்கார்த்தி யோக்த்ரம் கட்டுகிறார். ஸத்ப்ரஜா விருத்திக்குக் காரணமான பத்நி யிராவிடில் ப்ரஜையை அருள வல்லமையுள்ள யாகத்தால் பயனில்லாது போம். ஆனதுகவே யாகம் செய்வதற்குப் பத்நிக்கு அதிகாரமில்லை. யோக்த்ரத்தால் கட்டப்பட்டபிறகு அவளையும் அநுவ்ரதையாக யாக கார்யத்துக்குச் சேர்த்துக் கொள்கிறார்.

யோக்த்ரம் என்பது யோகத்திற்கும், அதனைக் கட்டிக்கொண்டு யாகபூர்த்திசெய்தல் இகபர க்ஷேமங்களுக்கும் ஆகுமாதலால் இதனை "யோக க்ஷேமம்" என ப்ராஹ்மணம் (3-3-3) கூறுகின்றது.

தர்மபத்நிக்குத் தேவுதையான நற்குணங்களைத்தும் இம்மந்திரத்தில் குறிக்கப்பட்டன.

(4) பத்நியோடு கார்ஹபத்யத்தின் முன் உட்காருவதற்கு மந்த்ரம் பத்நியில்லாதிருந்தாலும், அதிகமாயிருந்தாலும் யக்ஞம் நிறைவேறாது சேர்ந்து உட்காருதல் இருவருங்கூடி நிறைவேற்றுவதைக் குறிக்கும்.

(5) பத்நி யோக்த்ரத்தை அவிழ்ப்பதற்கு மந்த்ரம்.

7-வது அநுவாகத்தில் கபாலங்களை இறக்கச் சொல்லியது போலவே இங்கு யோக்த்ர விஸர்ஜனம் கூறப்பட்டது. இவ்விரண்டும் யாகஸமாப்தி காலத்தில் செய்யவேண்டியன. ஸந்தர்ப்பம் நோக்கி இவ்விடம் கூறினார்.

6 பூர்ணபாத்ரம் கொண்டுவந்த பிறகு பத்நி கார்ஹபத்யத்தை வேண்டுகிறாள்.

பதிவ்ரதைகளின் வேண்டுகோள் கூறப்பட்டது.

7 பாத்ரத்தில் நெய் ஊற்றுவதற்கு மந்த்ரம்.

பவித்ரம் வைத்து அதன்மேல் நெய் ஊற்றுகிறார்.

ஸ்ருஷ்டியையும் யாகத்தையும் உத்தேசித்து பூர்வத்தில் ப்ரஜாபதியானவர், தேனும் நெய்யுமாக உருவெடுத்துக்கொண்டார். தேன் ப்ரஜா ஸ்ருஷ்டிக்குக் காரணமாயிற்று. ஸகலஜீவகோடிகளும் இன்பமடைவதற்குக் காரணம் தேனாயிருத்தலேயாம். நெய் யாகத்திற்குக் காரணமானது என ப்ராஹ்மணம் கூறுகின்றது.

8. பத்நி நெய்யைப் பார்ப்பதற்கு மந்த்ரம்.

யக்ஞம் புருஷஸ்வரூபம். பத்நியின் பார்வை அதனைத் தம்பதியாகுகிறது. யஜமானனும் பத்நியும் ஒரு தம்பதி. யக்ஞபுருஷனும் பத்நியின் பார்வையும் மறுதம்பதி. இவ்விரு தம்பதிகளும் சேர்வதால் யக்ஞம் அவிச்சின்னமாக நிறைவேறுகிறது.

9 கார்ஹபத்யத்தில் நெய்யைவைத்து எடுத்து மறுபடி ஆஹவநீயத்தில் வைப்பதற்கு மந்த்ரம்.

கார்ஹபத்தியத்தில் வைப்பதால் பத்நியின் த்ருஷ்டிதோஷம் நீங்குகிறது: ஆஹவநீயத்தில் வைப்பது யக்ஞஸாதனம்.

10 ஆஹவநீயத்தில இருக்கிற நெய்யை வடபுறம் எடுத்துப் போவதற்கு, அத்வர்யு ஸ்ப்யத்தால் கோடுகிழித்து, அதன்வழியே எடுத்துச்சென்று வேதியின் வடபுறம் வைத்து அதனைப் பார்க்கிறார்.

அக்நியின் ஜ்வாலை நாவைப்போல் இருக்குமாதலின், மந்த்ரத்தில் நாக்குஎன்று கூறினர்.

11 வடக்கு நுனியான பவித்ரத்தால் நெய்யை அரைக்கிறார் பாத்திரத்தில் நெய்யைக் கொஞ்சமாக ஊற்றி அந்நெய் பாத்திரமுழுவதுமாகும்படி தர்ப்பைய முன்னும் பின்னுமாக ஓட்டித் தடவுதல் அரைத்தலாம் இதனை உரைத்தல் என்பர் ஒருசாரார். நீர்த்தொடாது எண்ணெயுரையார்'என்னும் ஆசாரக் கோவைச் செய்யுளை நோக்குக. அநுவாகம் 5. மந்த்ரம் 1-ன் குறிப்பிலுள்ள “மும்முறை அரைக்கும் மந்த்ரம்' என்றவிடத்திலேயும் இப்பொருளேயே கொள்க.

சுத்தமான ஆஜ்யம் அக்நியில் ஹோமம் செய்யப்படும்போது, ஜ்யோதிஸாயும் ஆகிறபடியால், “தேவர்களுக்குப் பலத்தைக் கொடுக்கிறாய்” என்றார்.

12 ப்ரோக்ஷணீ பாத்ர ஜலத்தை அதேபவித்ரத்தால் அரைக்கிறார். நெய்யை அரைத்த பவித்ரமாதலால் அந்த நெய்யின் திவலைகள் ஜலத்தில் பல நிறங்களோடு விளங்கும். தேவர்களுக்கெல்லாம் ஜலத்தால் உடலும் நெய்யால் புஷ்டியும் எற்படுகின்றன. இவ்விரு பண்டங்களின் சேர்க்கையைத் தேவர்களின் உருவம் என்றார்.

13 ஜுஹூ முதலியவைகளில் முறையே ஆஜ்யம் ஊற்றுவதற்கு மந்த்ரம்.

---

## அநுவாகம். 11.

---

இத்மம் கட்டுவதற்கும், தர்ப்பைகளைக் கட்டுவதற்கும், ஹவிஸை வேதியில வைப்பதற்கும் மந்த்ரங்கள்.

---

1 (இத்மத்தைப் பார்த்து) நீதான் க்ருஷ்ணம்ருகம். அக்நியின் த்ருப்திக்காக உன்னைப்ரோக்ஷிக்கிறேன்.

2 (வேதியைப் பார்த்து) நீ (ஹவிஸுக்கு ஆதாரமாக) அடையப்பட்டாய்தர்ப்பங்களைத் தரிப்பதற்காகப்ரோக்ஷிக்கிறேன்.

3 (தர்ப்பத்தைப் பார்த்து) நீ வேதியைப் பெருமைப் படுத்து

பவன். உன்னிடத்தில் ஸ்ருக்குக்களை ஸ்தாபிக்க உன்னைப் ப்ரோக்ஷிக்கிறேன்.

4 தேவலோகத்துக்காக உன்னையும், அந்தரிக்ஷத்துக்காக உன்னையும், பூலோகத்துக்காக உன்னையும்ப்ரோக்ஷிக்கிறே
5 ன் (ஜலத்தைப் பார்த்து) என்றால் பித்ருக்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறாய். தர்ப்பையில் உட்கார்ந்திருக்கிற (பித்ருக்களுக்கு) (ரஸமாயிருக்கிற) பலரூபமாக ஆவாய். (சிந்தின ஜலத்தைப் பார்த்து) ரஸத்தோடு கூடப் பூமியில் ப்ரவேசியுங்கள்.

6 (ப்ரஸ்தரத்தை எடுத்து) ஸர்வவ்யாபியான (யாகத்தைத்) தாங்குகிறவனா யிருக்கிறாய்.

7 (தேவ பர்ஹிஸைப் பார்த்து) ம்ருதுவான கம்பளம் போல் ம்ருதுவான உன்னைத் தேவர்களுக்குச் சுகாஸநமாக (வேதியில்) பரப்புகிறேன்.

8 (மத்திம பரிதியைப் பார்த்து) விச்வாவஸு (என்ற பெயருள்ள) கந்தர்வன். எல்லா ஹிம்ஸிக்கிறவர்களிடமிருந்தும் யஜமானனைச் சுற்றிலும் ரக்ஷிக்கிறவர். நீர் அன்ன ரூபமானவர். ஸ்துதி பெற்றவர். இந்திரனுடைய வலதுகை நீரே. யஜமானனைச் சுற்றிலும் ரக்ஷிக்கிறவர். அன்ன ரூபமானவர். ஸ்துதி பெற்றவர். அநுஷ்டிக்கப்படும் நித்யகர்மத்தின் நிமித்தம் மித்ரவருண (தேவதைகள்) யஜமானன் ரக்ஷைக்கு உன்னை வடக்குப் பக்கத்தில் வைக்கட்டும். யஜமானனைச் சுற்றிலும் ரக்ஷிக்கிறவர். அன்ன ரூபமானவர். ஸ்துதி பெற்றவர்.

9 ஸூர்யன் உன்னைக் கிழக்குப் பக்கத்தில் எவ்விதமான ஹிம்ஸையிலிருந்தும் ரக்ஷிககட்டும்.

10 கவியான (திவ்ய ஞானமுள்ள) அக்நியே, (யாக) நிமித்தம் மஹானாய், காந்தியுள்ளவனாய், ஹோமம் செய்தவனுக்கு ஸம்ருத்தியைக் கொடுக்கும் உன்னை மூட்டுகிறேன்.

11 (தர்ப்பரூபமான) வித்ருதிகளே, நீங்கள் இருவரும் ப்ரஜையை அடக்குங்கள்.

12 வஸுக்களுடையவும், ருத்ரர்களுடையவும், ஆதித்யர்களுடையவுமான ஆஸ்னத்திலிருங்கள்.

13 (நீங்கள்) ஜுஹூ, உபப்ருத், த்ருவைகளாயிருக்கிறீர்கள். க்ருதாசி என்ற பெயருள்ளவர்கள். (இந்த ப்ரியமுள்ள பெயரோடும், ப்ரியமுள்ள இந்த ஆஸனத்தில் இருங்கள்.

14 இவை ஸத்கர்மாவின் ஸ்தானத்தில் வைக்கப்பட்டன. அவைகளை விஷ்ணுவே ரக்ஷியும், யக்ஞத்தை ரக்ஷியும், யஜமானனை ரக்ஷியும், யாகத்தை நடத்துபவனை ரக்ஷியும்.

---

குறிப்பு:—

1 இத்மத்தை (ஸமித்தை) ப்ரோக்ஷிக்க மந்த்ரம்.

இத்மம் அக்னிக்கு மிகுந்த ப்ரியமுள்ளதாகையால் அதன் பொருட்டு ப்ரோக்ஷிக்கிறார். வனத்திலுண்டான இத்மமும் அவ்வனத்திலிருக்கும் மான்களும் ஒன்று என்று உபசாரமாய்ச் சொன்னார்.

ஸ்வாஹாகாரத்துக்குப் பலபொருள் இருத்தலால், இங்கு ப்ரோக்ஷித்தலை "ஸ்வாஹா" எனக் குறித்தார்.

2 வேதியைப்ரோக்ஷிக்க மந்த்ரம்.

பர்ஹிஸை வஹிப்பதற்கு இப்ரோக்ஷணம்.

3 பர்ஹிஸை ப்ரோக்ஷிக்க மந்த்ரம்.

ஸ்ருக்குக்களை உன்னிடம் வைப்பதற்கு ப்ரோக்ஷிக்கிறேன் என்றார்.

4 வேதியில் பர்ஹிஸை வைத்து "நீ வானம்" என்று அதன் நுனியிலும், "நீ அந்தரிக்ஷம்" என நடுவிலும், "நீ பூமி" என அடிப்புறத்திலும் ப்ரோக்ஷிப்பதற்கு மந்த்ரம்.

லோகத்ரயத்தையுங் குறித்தார்.

5 ப்ரோக்ஷித்த பிறகு மிகுந்துள்ள ஜலத்தைக் கீழே ஊற்றுவதற்கு மந்த்ரம்.

6 ப்ரஸ்தரத்தை ஆஹவனீயத்திலிருந்து கொண்டு வருவதற்கு மந்த்ரம்.

தர்ப்பைக் கற்றையை "ப்ரஸ்தரம்" என்றார்.

7 தர்ப்பைகளைப்பூமி மறையும்படி வேதியில் பரப்புவதற்கு மந்த்ரம்.

8 நடுவிலும் தெற்கிலும், வடக்கிலும் பரிதியைப்போடுவதற்கு மந்த்ரம்.

வேதியைச் சுற்றிப்போடுகிற ஸமித்துக்களுக்குப் "பரிதி" எனப் பெயர்.

9 ஆஹவனீயத்தை ப்ரார்த்திக்கிற மந்த்ரம்.

10 இரண்டு ஆகார ஸமித்துக்களை வைப்பதற்கு மந்த்ரம்.

11 வித்ருதி போடுவதற்கு மந்த்ரம்.

வேதிக்குள் வடக்கு ஜனியாக ப்ரஸதாத்துக்கும் பர்ஹிஸுக்கும் இடையில் போடுகிற இரண்டு தர்ப்பங்களை "வித்ருதி" எனக் குறித்தார்.

12 வித்ருதியின்மேல் ப்ரஸ்தாத்தை வைப்பதற்கு மந்த்ரம்.

13 ப்ரஸ்தாத்தின்மேல் ஜுஹூ முதலிய மூன்றையும் வைக்கிறதற்கு மந்த்ரம்.

க்ருதாசீ—நெய்யினால் பூசப்பட்டது.

14 ஸ்ருக்குக்களைத் தடவுவதற்கு மந்த்ரம்.

---

## அநுவாகம். 12

---

நெய்யைத் தெளிப்பதற்கு மந்த்ரங்கள்.

---

1 அக்நியே, நீரே புவனம், விஸ்தாரத்தை அடைவீராக. உமக்கு இந்த நமஸ்காரம்.

2 ஜுஹூவே வாரும். தேவயாகார்த்தம் அக்நி உம்மை அழைக்கிறார். உபப்ருத்தே வாரும், தேவயாகார்த்தம் ஸவித்ருதேவன் உம்மை அழைக்கிறார்.

3 அக்நி விஷ்ணுக்களே, உங்களைத் தாண்டி நான் போகவில்லை. அதற்கு நீங்கள் விலகுங்கள். என்னைத் தபிக்கச் செய்ய வேண்டாம். நீங்கள் உலகைப் படைத்தவர்கள். எனக்கு இருக்க இடங்கொடுங்கள்.

4 (பூப்ரதேசமே) விஷ்ணுவின் ஸ்தானம் (நீ.)

5 (விஷ்ணு ஸ்தானமாகிய) இங்கிருந்து இந்த்ரன் (அஸுரர்களைக் கொல்கிற) வீரத்தனமான கார்யங்களைச் செய்தான். நிர்ருதிதிக்கிலிருந்து தொடங்கி மிருதுவாகவும் இடைவெளியில்லாமலும் ஈசான திக்குவரையில் (கொண்டு வரப்படுகிற) யஜமானனுடையயக்ஞமானது விளம்பமில்லாதது (பலனை உடனே கொடுக்கக் கூடியது.) தேவர்களுக்கு ஹோமம் செய்யப்படட்டும்.

6 பெரிய ஜ்வாலையுள்ளது.

7 கர்மாபராத மில்லாமல் அக்நியே, என்னைக் காப்பாற்றும். ஸத்கர்மாவில் என்னை ஸ்தாபியும்.

8 (ஆகாரசேஷமான நெய்யைப் பார்த்து) யாகத்துக்கு சிரஸாக இருக்கிறாய். சோதிப்போடு சேர்ந்து சேரட்டும்.

---

1 ஜுஹூ உபப்ருத்துகளுக்கு முன்னால் ஆஹவநீயத்தை அஞ்சலி செய்வதற்கு மந்த்ரம்.

லோகஸ்திதிக்குக் காரணமாதலால் "புவநமஸி" என்றார். ஹோம காலத்தில் நன்றாய் ஜ்வலிக்கவேண்டுமாதலின் "விஸ்தாரத்தை அடையும்" என்றார்.

2 வலதுகையால் ஜுஹூவையும் இடதுகையால் உபப்ருத்தையும் எடுப்பதற்கு மந்த்ரம்,

ஜுஹூ அக்நியென்றும், உபப்ருத் ஸவிதா என்றும் ப்ராஹ்மண கூறுகின்றது.

3 அத்யாக்ராம ஜபம் செய்கிறார்.

ஆகாரஹோமத்தின் பொருட்டு மத்திமபரிதிக்குப் பின்புறமாய்ஸ்ருக்கின் முன் ப்ரஸ்தரத்தில் படாமல் அத்வர்யு, இடதுகாலை வைத்துப் போகிறார்.

அக்நி ஆஹவநீயத்தில் இருக்கிறார் விஷ்ணுவின் ஸ்தானம் ஸ்ருக்

4. அவஸ்தான மந்த்ரம்.

தேவதைக்கு ஸ்தானம். கொடுத்தல் அவஸ்தானம் வலதுகாலைமடக்கி இடதுகாலை நிமிர்த்தி மண்டியிட்டு உட்கார்ந்து தென்புறமுள்ள பரிதி ஸந்தியைத் தாழ்த்தி "இது விஷ்ணுவின் ஸ்தானம்" என்று சொல்கிறார்.

5 நெய் தெளிப்பதற்கு மந்த்ரம்.

இதற்கு ஆகாராபிகாரம் எனப்பெயர். மத்திம பரிதியைத் தொட்டுக் கொண்டு இத்மங்களில் நெய் தெளிக்கிறார்.

6 ஸ்ருக்கைத் தூக்கிக்கொள்கிறார்.

மேல் மந்த்ரத்தில் கூறிய ஆகாராபிகாரத்தால் எரிகிற அக்நிக்குமேல் ஸ்ருக்கை உயர்த்துகிறார்.

7, ஜுஹூ உபப்ருத்துக்களை இடித்துக்கொள்ளாமல் இரு கைகளிலும் எடுத்துக்கொண்டு வடக்கில் போகிறார்.

8 ஜுஹூவிலுள்ள நெய்யோடு ஸ்ருவையிலுள்ள நெய்யைச் சேர்க்கிறார்.

ஆகாராபிகாரம் செய்வது யக்ஞத்தின் ஆரம்பமாதலால் இதனைச் சிரஸ் என்றார்.

---

## அநுவாகம். 13

அத்வர்யு ஸ்ருக் வ்யூஹநம் செய்தல் முதலியன இந்த அநுவாகத்தில் கூறப்படுகின்றன.

---

1 அன்னத்தை உண்டு பண்ணுவதற்கு (ஜுஹூவை) மேலே தூக்குவதால் இவிடமிருந்து என்னை உயர்த்தினார். உபப்ருதத்தைக் கீழே பிடிப்பதால் என்வைரிகளைத் தாழ்த்தினார். பரமான ப்ரஹ்மமும், தேவர்களும் என்உயர்வையும் என் வைரிகளின் தாழ்வையும் வ்ருத்தி செய்தார்கள். பிறகு இந்த்ராக்நி(தேவதைகள்) என் விரோதிகளைத் தங்கள் ஸ்தானங்களிலிருந்து நாலாபக்கங்களிலும் ஓடும்படி செய்யட்டும்.

2 (பரிதிகளைப் பார்த்து) வஸுக்களுக்காக உன்னையும், (மத்யத்தைப்பார்த்து) இந்த்ரனுக்காக உன்னையும் (தெற்கிலிருப்பதைப்பார்த்து) ஆதித்யர்களுக்காக உன்னையும் (வடக்கிலிருப்பதைப்பார்த்து) நெய்யால் பூசுகிறேன்.

3 பக்ஷிகள் ஆஜ்யத்தில் பூசப்பட்ட (ப்ரஸ்தரத்தின்) நுனியை நக்கிவிட்டு (நாநாதிக்குகளும்) போகட்டும். நான் ப்ரஜையையும் அதன் காரணத்தையும் கெடுக்காமலிருப்பேனாக.

4 (ப்ரஸ்தரத்தின் அவயவங்களான தர்ப்பங்களைப் பார்த்து) ஜலமும் ஒஷதிகளும் வ்ருத்தியடையட்டும் நீங்கள் வாயுவின் பிந்துக்கள். (ப்ரஸ்தரத்தைப் பார்த்து). நீ தேவலோகத்துக்குப்போய் மழை பெய்யும்படி செய்வாயாக.

5 அக்நியே ஆயுளைக் காப்பவன் நீ; என் ஆயுளைக்காப்பாயாக. அக்நியே, கண்ணைக் காப்பவன் நீ, என் கண்ணைக்காப்பாயாக.

6 ஸ்திரமாயிருக்கிறாய்.

7 அக்நியே, ஸ்தோத்ரங்களால் அடையக்கூடிய நீர் (தானாகவே) எந்தப் பரிதியை மேற்குப்பாகத்தில் வைத்துக் கொண்டீரோ, (அநுகூலமா யிருந்து) ப்ரியமான அந்த (மத்தி) பரிதியை இதோ உம்மிடம் சேர்க்கிறேன். இவன் உம்மிடத்தில் அப்ரியனாக ஒருக்காலும் இருக்கமாட்டான். (தக்ஷிண உத்தர பரிதிகளை அக்நியில் போட்டு) யக்ஞத்தின் (பலன் ரூபமான) அன்னத்தை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள்.

8 (விச்வ தேவர்களே) நீங்கள் சிந்தனைகளை ஹவிஸாகக் கொள்கிறவர்கள், (அந்த ஹவிர்ப்பாகங்களை ஏற்றுக்கொள்வதில்) இச்சையுள்ளவர்கள், பெரியோர்கள், ப்ரஸ்தரத்தில் நிற்பவர்கள், பர்ஹிஸில் உட்கார்ந்திருப்பவர்கள், நாங்கள் செய்கிற இந்த ஸ்துதிகளை மெச்சி, இந்த பர்ஹிஸில் உட்கார்ந்து, ஸந்தோஷியுங்கள்.

9 (ஜுஹூ உபப்ருத்துக்களைப் பார்த்து) அக்நியின் அழிவில்லாத ஸ்தானத்தில் ஸ்தாபிக்கிறேன். ஸுகமாயிருப்பவர்களே, என்னைச் சுகத்தில் ஸ்தாபியுங்கள், யாககார்யமான பாரத்தை வஹிக்கிற (இந்தத் தம்பதிகளை) ரக்ஷியுங்கள்.

10 அக்நியே, ஹிம்ஸை யடையாத ஆயுளுள்ளவரே, உஷ்ணமான சரீரம் உடையவரே, பந்தத்திலிருந்தும் தப்பான சாஸ்த்ரானுஷ்டானத்திலிருந்தும் துர்ப்போஜனத்திலிருந்தும் துர்நடத்தையிலிருந்தும் காப்பாற்றுவீராக. எங்கள் அன்னத்தை விஷமில்லாததாக (அம்ருதமாகச்) செய்வீராக யோநியை உட்காரச் சௌகர்யமானதாய்ச் செய்யும். ஹோமம் செய்யப்படட்டும்.

11 தேவர்களே, வழிதெரிந்தவர்களே, எந்த வழியையடைந்து வந்தீர்களோ அதே வழியில் (போய்) வாருங்கள். மனஸுக்குப் பதியே, தேவனே, தேவர்களிடத்தில் இந்த யக்ஞத்தைத் தெரியப்படுத்துங்கள். (இந்தநெய்) ஹோமம் செய்யப்படட்டும். வாயுவினிடத்தில் கொடுங்கள்.

---

குறிப்பு:—

(1) ஸ்ருக்குக்களை வ்யூஹனம் செய்கிறார்.

அத்வர்யு வடக்காகத் திரும்பிவந்து, ஸ்ருக்குக்களை முன்போலவே வைத்து, "உயர்த்தினார்" என வலதுகையால் ஜுஹூவை உயர்த்தித் "தாழ்த்தினார்" என்று இடது கையால் உபப்ருத்தைத் தாழ்த்திப் பிடிக்கிறார். பிறகு "வ்ருத்தி செய்தார்கள்" என்று, ஜுஹூவை மேற்கிலும், "ஓம்படி செய்யட்டும்" என்று உபப்ருத்தைக் கிழக்கிலும் வைக்கிறார்.

(2) ஜுஹூவைக்கொண்டு மூன்று பரிதிகளுக்கு நெய் பூசுவதற்கு மந்த்ரம்.

(3) "நக்கிவிட்டு" என்று ப்ரஸ்தரத்தின் நுனியை ஜுஹூவிலும் போகட்டும்" என்று மத்தியை உபப்ருத்திலும், "கெடுக்காமல் விருப்பேனுக" என்று அடியை த்ருவையிலும் நெய்யில் நனைக்கிறார்.

(4) ப்ரஸ்தரத்தை ஆஹவநீயத்தில் போடுகிறதற்கு மந்த்ரம்.

காற்று மழைபொழிவதற்குக் காரணம், மழையினால் தர்ப்பங்கள் உண்டாயினவாதலால் வாயுவின் பிந்துக்கள் எனத் தர்ப்பையைக் கூறினார்.

(5) எழுந்து நின்று ஆஹவனீயத்தை உபஸ்தானம் செய்கிறார்.

ப்ரஸ்தரத்தை அக்நியில் போடுவதால் யஜமானனுக்கு ஆயுளும், பார்வையும் குறையுமாதலால் இவ்வாறு வேண்டினார்.

(6) வேதியின் மத்தியிலுள்ள தரையைத் தடவுகிறார்.

(7) பரிதிகளை அக்நியில் போடுதற்கு மந்த்ரம்.

(8) ஸம்ஸ்ராவ மந்த்ரம்.

உபப்ருத்திலுள்ள நெய்யை ஜுஹுவில் வடித்து விச்வேதேவர்களுக்கு ஹோமம் செய்தல் ஸம்ஸ்ராவம்.

(9) ஜுஹு உபப்ருத்துக்களை வண்டியின் முன்பாகத்தில் வைப்பதற்கு மந்த்ரம்.

(10) தவிட்டை ஹோமம் செய்வதற்கு மந்த்ரம்.

ஜுஹுவில் தவிடும், மீதியாயுள்ள நெய்யும், இத்மம் கறுக்கின வெட்டுத் துண்டுகளும், தக்ஷிணாக்நியில் ஹோமம் செய்கிறார்.

(11) எழுந்து வலதுகாலினால் வேதியைத் தாண்டி த்ருவையினால் ஸமிஷ்ட ஹோமம் செய்கிறார். பர்ஹிஸை ஹோமம் செய்கிறார். ஸர்வஹோமம் செய்கிறார்.

ஜுஹு முதலிய யாக பாத்ரங்கள் யஜமானனுடைய ஜீவகாலம் முடிய விருந்து நிர்யாணத்தின் பிறகு யஜமானனுடன் சிதையில் வைக்கப்பட வேண்டியிருத்தலால் அவைகளை வைத்துக்கொண்டு மீதியான எல்லாவற்றையும் ஹோமம் செய்கிறார் யக்ஞம் முடிந்தது என்று வாயுவின் மூலமாய்த் தேவர்களுக்கு அறிவிக்கிறார்.

## அநுவாகம். 14.

தர்சபூர்ணமாஸ விக்ருதிகளான காம்யேஷ்டிகளினுடைய யாஜ்யை புரோநுவாக்கிய மந்த்ரங்கள்.

1 இந்திராக்கினிகளே, உங்கள் இருவர்களையும் அழைக்கிறேன். (முழுமையும்) ஹோமம் செய்தற்கும் இருவர்களும் கூடி (புரோடாசத்ரவ்ய) அன்னத்தை (அடைந்து) சந்தோஷிப்பதற்கும்—நீங்கள் அன்னங்களையும் தனங்களையும் கொடுப்பவர்கள் (என்று) அன்னத்திற்காகவும். (அழைக்கிறேன்.)

2 மகிமை பொருந்திய மாப்பிள்ளையைக் காட்டிலும், மைத்துனனைக் காட்டிலும் [அனேகப்ரஜைகளை] நீங்கள் இரு

வர்களாய் விசேஷமாகக் கொடுக்கிறவர்கள் என்று கேட்டி
ருக்கிறேன் அப்படியாக இந்திராக்னிகளே, உங்களுக்கு ஸோ
மங்களை(யும் புரோடாசத்தை)க் கொடுத்துப் புதி
தான ஸ்தோத்திரத்தைச் செய்கிறேன்.

3 இந்திராக்னிகளே, தாஸர்கள் ஆண்டுவரும் தொண்ணூறு
பட்டணங்களையும் ஒரே தடவையில் ஒரு அடியாக உதறி
விட்டீர்கள்.

4 வ்ருத்ரனை வதம் செய்த இந்திராக்னிகளே, சுசியானதும்,
புதிதாக உண்டானதுமான ஸ்தோத்திரத்தைப் பெற்றுத்
திருப்தி அடையுங்கள் நீங்கள் இருவர்களும் ரோஷ கர்வங்
களில்லாமல் (அழைத்தவுடன்) வருகிறவர்கள் என்று அ
ழைக்கிறேன். உங்களை வேண்டுகிற (யஜமானனுக்கு) அன்
னத்தை உடனே கொடுங்கள்.

5 நல்லமார்க்கத்துக்கு அதிபதியே, பூஷதேவனே, அன்ன
லாபத்தைச் செய்விக்கிற கர்மாவின் பொருட்டு நாங்களே
உன்னை ரதத்தைப்போல் பூட்டுகிறோம்.

6 பலத்தின் ஆசையால் தூண்டப்பட்டவனாய் அந்தந்தமார்க்
கத்தைப் பரிபாலிக்கிற அர்க்கனை (தேவதையை) ஸ்தோத்ர
வாக்யத்தால் அடைந்தேன். அவர் நமக்குச் சந்த்ரன்போல்
சந்தோஷத்தைக் கொடுக்கும் ஐச்வரியத்தை—ஔஷதிகளா
ன (ஸஸ்யங்களை) அளிக்கட்டும். பூஷாதேவனும் அந்தந்த
விஷயத்தில் ப்ரக்ஞையையும் விசேஷமாக உண்டுபண்ணட்
டும்.

7 (புத்ரனைப் போன்ற) ஹிதனால் நாம் பெறுவதுபோல் க்ஷேத்
ரபதியின் சகாயத்தால் பசு, குதிரை, அன்னம், முதலியன
நாலுபுறத்திலிருந்தும் அடைவோமாக. அந்த க்ஷேத்ரபதியு
ம (மேல் சொல்லிய) பசு முதலியவற்றில் நான் சுகத்தை
அடையும்படி செய்யட்டும்.

8 இந்த க்ஷேத்ரத்திற்குப் பதியே, பசு பாலைக் கறப்பது போல்
எங்களுக்கு மதுரமானவையும், மேன்மேல் வருவனவும்,
மற்ற த்ரவ்யங்களோடு சேர்ந்து அவற்றை மதுரமாய்ச்செய்
வனவும் நெய்யைப் போல் நாட்பட வைத்திருந்தும் கெடா
தவையுமான பதார்த்தங்களை (எங்களுக்கு) உண்டாகும்படி
செய்யும்; யக்ஞபதிகள் எங்களைச் சுகிகளாய்ச் செய்யட்டும்.

9 அக்நியே, தனத்துக்கு நல்ல மார்க்கத்தில் எங்களைக் (கொண்
டு) சேரும். தேவனே, ஸர்வ மார்க்கங்களையும் நீர் அறிவீர்

ரூபமான (கோணலான) பாபத்திலிருந்து எங்களை நீக்கும் அநேக நமஸ்கார வாசகங்களைச் செய்கிறோம்.

10 எதைச் செய்யக் கூடுமோ, அதை விட்டுப்போகாமல் செய்து முடிப்பதற்குத் தேவர்களுடைய வழியையும் இப்போது அடைந்தோம். அக்நி அறிந்தவர். அவர் நமக்காக யாகம் செய்கிறார். அவரே அழைப்பவர். அவரே அத்வரங்களையும் (யாகங்களையும்) ருது முதலான காலங்களையும்கல்பிக் கிறார்.

11 ப்ராயணீயமான அவிஸ் அக்நிக்கு விசேஷமாக ஆகட்டும். விபாவஸோவே, (பலத்தைக் கொடுத்து என்னை) ஆதரியும் எருமையைப்போல் (ஆதரியும்.) (அப்போது) உம்பால் தனமும் அந்நமும், விசேஷமாயுண்டாகும்.

12 அக்நியே, நீ நவீநன். விட்டுப்போவது, வ்ரதம் தவறுதல், முதலிய ஸகல பாபங்களையும் க்ரம (அநுஷ்டானங்களால்) போக்கி எங்களைக் கரையேற்றும் (எங்கள்) நகரம் விஸ்தாரமாக ஆகட்டும். (பயிரிட யோக்கியமான) நிலமும் மிகுதியாக உண்டாகட்டும் .எங்கள்குழந்தைகளுக்குஸௌகத்தைக் கொடும்.

13 அக்கினியே, நீர் மனுஷ்யர்களிடத்தில் வந்து வ்ரதத்தைக் காத்துக்கொடுப்பீர். எங்கும் யாகங்களில் ஸ்துதிக்கப் படுகிறீர்.

14 தேவர்களே, தெரிந்தவர்களான உங்கள் வ்ரதங்களைக்கொஞ்சமும் தெரியாத நாங்கள் முற்றிலும் கெடுத்துவிடுவதெல்லாவற்றையும் எல்லாந் தெரிந்த அக்நி அந்தந்தக் காலங்களில் பூரணம் செய்யட்டும்.

குறிப்பு:—

"ப்ரஜாபதி ப்ரஜைகளை ஸ்ருஷ்டித்தார், ஸ்ருஷ்டித்த அவைகளை இந்த்ராக்நிகள் ஒளித்து விட்டார்கள். ப்ரஜாபதி சிந்தித்தார். 'இந்த்ராக்நிகள் தான் என் பிரஜைகளை ஒளித்து விட்டார்கள்". என்று பதினொரு கபாலங்களில் இந்த்ர அக்நி தேவர்களுக்கு ஹவிஸ்ஸைப் பார்த்தார். அதைக் கொடுத்தார். இவர்களும் அவரிடத்தில்ப்ரஜைஜயைத் திருப்பிக்கொடுத்துவிட்டார்கள்.

1-வது இஷ்டி. இந்த்ராக்நிகள் தான் இவன் பிரஜையை ஒளிக்கிறார்கள் ப்ரஜையைப் பெறச் சக்தியிருந்தும் பிரஜையை அடைகிறதில்லை (ஆகையால்) இந்த்ராக்நிகளுக்கு பதினொரு கபாலங்கள் ப்ரஜை வேண்டியவன் வைக்கவேண்டும். இந்த்ராக்நிகளையே, அவர்கள் பாகத்தோடு அடைகிறான். அவர்களும் ப்ரஜையை இவனுக்கு அளிக்கிறார்கள். இவனும் அடைகிறான்.

2-வது இஷ்டி நிலத்தைக் குறித்தாவது அல்லது தன் ஞாதிகளோடாவது கலகம் செய்பவன் இந்த்ராக்நிகளுக்குப் பதினொரு கபாலம் வைக்க வேண்டியது. இந்த்ராக்நிகளேயே அவர்கள் பாகத்தோடு அடைகிறான் அவர்களாலேயே எதிரியின் சக்தியையும் பலத்தையும் ஜயித்துப் பாபியான சத்துருவை நாசம் செய்கிறான்.

3-வது இஷ்டி. சண்டைக்கு எவன் போகிறானோ அவனிடமிருந்து சக்தியும், வீர்யமும்போய் விடுகிறது. சண்டைக்குப் போகிறவன் இந்த்ராக்னிதேவர்களுக்குப் பதினொரு கபாலம்வைக்கட்டும் இந்த்ராக்நிகளேயே அவர்கள் பாகத்தோடு அடைகிறான். அவர்கள் இவனிடத்தில் சக்தியையும்வீர்யத்தையும் வைக்கிறார்கள். சக்தியும் வீர்யமும் வாய்ந்து சண்டையில் போய் ஜயம் அடைகிறான். [2 2 1]

1. முன் சொன்ன மூன்று இஷ்டிகளுக்கும் முதல் மந்த்ரம் புரோநுவாக்யம். இந்திராக்னிகளைக் குறித்துச் சொல் என்பது அத்வர்யுவின் கட்டளை. யாகத்தில் முதலில் தேவதைகளை ஆஹ்வானம் (கூப்பிடுதல்) செய்வதன் பொருட்டு அத்வர்யுவின் கட்டளைப்படி ஹோதா சொல்லவேண்டியது புரோநுவாக்யம். இரண்டாவது மந்த்ரத்துக்கு யாஜ்யம் என்று பெயர். இந்த ஹோமத்தை எதைக்கொண்டு செய்வதோ அந்த மந்திரத்திற்கு யாஜ்யம் என்பர்.

2. மாப்பிள்ளை ப்ரஜைகளை விசேஷமாகக் கொடுக்கிறான் என்பதும் மைத்துனன் ஸஹோதரியின்ஸ்நேகத்தினிமித்தம் க்ருஹ தன, ரக்ஷணைத்துக்காக தாஸதாஸீ ஜனங்களைக் கொடுக்கிறானென்பதும், உலகத்தில் ப்ரஸித்தி.

---

முதல் இஷ்டி.

"சண்டையில் ஜெயிக்கிறவன் இந்த்ரியத்தையும் வீர்யத்தையும் இழக்கிறான். ஜெயித்தவன் இந்த்ராக்நிகளுக்கு ஏகாதச கபால ஹவிஸ்ஸை வைக்கட்டும். ஸ்வபாகத்தோடு இந்த்ராக்நிகளை அவன் அடைகிறான். இவனிடத்தில் அவர்கள் இந்த்ரியமும் வீர்யமும் வைப்பதனால் இவனுக்கு அவை குறைவதில்லை"· 2. 2. 1. யுத்த ச்ரமத்தால் உண்டாகும் வீர்யக்குறைவைக் குறித்தது.

இரண்டாவது இஷ்டி.

ஜனசபையை அடைகிறவனுக்கு இந்த்ரியமும் வீர்யமும் நழுவிவிடுகின்றன. அவன் இந்த்ராக்கினி தேவதைகளுக்கு அஷ்டாதச கபாலம் வைக்க வேண்டும். அவர்கள் பாகத்தைக் கொடுக்க அவர்கள் இவனிடம் இந்த்ரிய வீர்யத்தை வைக்க இவைகளுடனே ஜனஸபையை அடைகிறான்.

தன் ஜய விஷயங்களையாவது, வித்யா விஷயங்களையாவது ப்ரகடனம் செய்யச் சபையை அடையும்போது தைர்யக்குறைவு ஏற்படுவதை நிவர்த்திக்க ஏற்பட்ட இஷ்டி.

தாஸர்கள்—. ப்ரஜைகளை நாசம் செய்பவர்கள், திருடர்களுக்குப் பிறந்தவர்கள்.

இப் பிரபாடகத்தில் 1740 வார்த்தைகள் உள்ளன. இவ்வநுவாகங்களின் முதற் பதங்கள் முறையே (1) ஆப: (2) ஆகூத்யை (3) தைவீம். (4) இபம். (5) வஸ்வி. (6) அர்சந (7) ஸோம:. (8) உக் ஆயுஷா (9) ப்ரசயவஸ்வ (10) அக்நீஷோமீயம் (11) அர்சு: (12) வித்தாயநீ. (13) யுஞ்ஜதே (14) க்ருணுஷ்வ. என்பனவாம்.

இந்த ப்ரபாடகத்தில் சொல்லிய மந்த்ரங்களுக்குக் காண்டம் 6 பிராமணமாகும் அதாவது ப்ரயோகங்களையும் மந்த்ரார்த்தங்களையும் விரித்துரைக்குமாதலால் பாஷ்யக்காரரான ஸாயனார் இந்த ப்ரபாடகத்தில் வ்யாக்யானம் எழுதும்போது காண்டம் 6-க்கும் வியாக்யானம் செய்திருப்பதால் [illegible] கரியமாக இவ்விடத்தில் ஸாயனார் [illegible] 6-வது காண்டத்திற்கு [illegible] மொழிபெயர்த்திருக்கிறோம்.

---

இது முதல் மூன்று ப்ரபாடகங்களில் ஸோமயாகம் சொல்லப்படுகின்றது.

---

## அநுவாகம் 1.

யஜமானகர்த்ருக ப்ராக்வம்ச ப்ரவேச உபயுக்த மந்த்ரா:

வபனம் (க்ஷவரம்) முதலியவற்றால் சுத்திபெற்ற யஜமானன் மூங்கிலின் கிழக்கு நுனியாகப் போட்டு [illegible] வைக்கப்பட்ட மந்த்ரங்கள் [illegible] ப்ராசீனவம்சம் என்று பெயர். இதனை, [illegible] முதலியன செய்து கொள்வதற்கு முன்னமேயே அமைத்திருத்தல் வேண்டும். மேற் குறித்த யாகசாலை கிழக்கு நுனியான மூங்கிலையுடையது ஆதலால் தேவர்களின் திருப்தியை முன்னிட்டு அமைக்கப் பெற்றதாம். இதற்குள் நுழைகிற யஜமானன் தேவலோகத்தை ஸமீபிக்கிறான் என்பது தேற்றம்.

1 ஜீவனத்தின் பொருட்டும், ஆயுளின் பொருட்டும், தேஜஸின் பொருட்டும், (இந்தத்) தீர்த்தம் (என் தலையை) நனைக்கட்டும்.

2 ஓஷதியே, இவரைக்காப்பாற்றுக. கத்தியே, இவரை ஹிம்ஸிக்காதே. தேவதைகளில் ப்ரஸித்தரான நான் இவைகளை (இந்தக் கேசங்களை) வபனம் செய்கிறேன்.

3 இனி நடக்கப்போகிற (கார்யங்களை) இடையூறின்றி அடை வோமாக.

4 தாய்க்குச் சமானமான தீர்த்தம் எங்களைச் சுத்தம் செய்யட்டும். ஓடுவதால் சுத்தமான இந்த ஜலம் எங்களைச் சுத்திகரிக்கட்டும். எங்களுடைய மிகுதியான பாபத்தைப்போக்கட்டும்.

5. (ஸ்நானத்தால்) பளபளப்பாயும், (ஆசமனத்தால்) சுத்தனாயும், ஜலத்திலிருந்து வெளிவருகின்றேன்.

6 (வஸ்த்ரத்தைப் பார்த்து) ஸோமனுடைய சரீரமாயிருக்கிறாய் என் சரீரத்தைக் காப்பாற்று.

7 (வெண்ணெயைப் பார்த்து) பசுக்களின் பாலாயிருக்கிறாய். பளபளப்பால் தேஜஸ் உடையவனாயிருக்கிறாய். எனக்குத் தேஜஸ் அருள்வாயாக.

8 (கண்ணிலிடும் மையைப் பார்த்து) வ்ருத்ரனுடைய கருவி யாயிருக்கிறாய். கண்களைப் போஷிப்பவனாகிறாய். என்து கண்ணைக் காப்பாற்றுவாயாக.

9 ஞானபதியாகிய (மனோதேவதை)உன்னைச் சுத்தம் செய்யட்டும். வாக்பதி உன்னைச் சுத்திகரிக்கட்டும். நுனிமுறியாததர்ப்பை நுனியோடு ஸூர்யகிரணங்களுக்குக் காரணமான தர்ப்பைகளாலும் ஸவிதா தேவதை உன்னைச் சுத்தம் செய்யக்கடவது.

10 பவித்ரம் செய்யும் பதியே, அம்பரத்திரியான உனது பவித்ரத்தினால் எந்தக் கார்யத்திற்காக நான் (என்) சரீரத்தைச் சுத்தி செய்துகொள்ளுகிறேனோ அந்தக் கார்யத்தைச் செய்ய சக்தி உள்ளவனாக இருப்பேனாக.

11 ஓ தேவர்களே, உங்களை உத்தேசித்துச் செய்கிற யாகத்தில் அதனை நிறைவேற்றும் தீர்மானத்தோடும் வருகின்றோம். யாகஸம்பந்தமான தேவதைகளே, எந்தமுயற்சிக்காக உங்களை அழைத்தோமோ அதற்காக வருகின்றோம்.

12 ஓ இந்த்ரா, அக்நியே, வானமே, பூமியே, தீர்த்தமே, ஓஷதிகளே, (யஜமானனை அறிவீர்களாக.)

13 (ஆஹவநீயத்தைப் பார்த்து) தீக்ஷைரூபமான (நியமங்களுக்கெல்லாம்) அதிபதியாயிருக்கிறாய். (ஆகையால் இங்கு இருக்கிற என்னைக் காப்பாற்று.

குறிப்பு:—

1. ஜலத்தைத் தலையில் தடவுதற்கு மந்த்ரம்.

கிழக்கு முகமாக உட்கார்ந்து தலையின் வலது புறத்தில் ஜலம் தடவிக் கொள்ளவேண்டும்.

(2) வபனம் செய்து கொள்வதற்கு மந்த்ரம்.

தர்ப்பையும் ஓர் மூலிகையாதலின் அதனை ஒஷதியென்றார். இத் தர்ப்பையைநுனியானது மேலே இருக்கும்படி பிடித்துக்கொண்டு காப்பாற் றுஎன்றும் கத்தியைத்தலையில்வைக்கும்பொழுது "ஹிம்ஸிக்காதே"என்றும், சொல்லவேண்டும்.

3 மீசைகளையும்நகங்களையும் விலக்குவதற்கு மந்த்ரம்.

ரோமங்களும் நகங்களும் ம்ருதமான தோலும் யாகங்களுக்கு அநர்ஹ மானவை. அவைகளை நீக்குவதால் யஜமானன்யாகம் செய்வதற்குத் தகுதியா கின்றான்.

(4) ஸ்நாநம் செய்வதற்கு மந்த்ரம்.

ஓடும் ஜலத்தை "க்ருதம்"என்றார். ஓடுவதனுல் மழை ஜலம் சுத்திய டைகின்றதாகையால்"க்ருதபுவ:" என்றார். அழுக்கைத் தேய்த்துக் கழுவுதல் பாபத்தைப் போக்குவதுபோல் ஆகும். "எங்களை" என்றதற்குப் பதிலாக எங்களது யஜமானர்களை எனச்சொல்ல வேண்டுமென்பது ஆபஸ்தம்டரு டைய அபிப்ராயம்.

(5) ஜலத்தில் மூழ்கி எழுந்தபிறகு சொல்லும் மந்த்ரம்.

ஸ்நாநத்தால் உடலும்ஆசமனத்தால் உள்ளமும் சுத்திபெறுகின்றன. முண்டனம் (மொட்டையடித்தல்) முதலியவற்றால் தீக்ஷையும் ஆகாரவிஷ யத்தில் நியமத்தால் தவமும் பெறப்படுகின்றன. இவ்விரண்டும் நீரில்மூழ்கு வதால் அடையக் கூடியன.

(6) வஸ்த்ரம் தரித்துக்கொள்ள மந்த்ரம்.

வெண்பட்டுக்கு ஸோமன் அபிமான தேவதை யாதலின் வஸ்திரத் தை ஸோமனது சரீரம் என்றார்.

(7) வெண்ணை தடவிக் கொள்ள மந்த்ரம்.

தீக்ஷைபெற்ற யஜமானன் இவ்வுலகுக்கும் ஸ்வர்க்கத்துக்கும் மத்தி யில் இருப்பதால் பாலுக்கும் மோருக்கும் மத்தியமான நிலையைப் பெற்ற நவ நீதத்தை உடலெங்கும் தடவிக்கொள்ளுதல் தகும் என்றார்.

8 கண்ணில் மைதீட்டிக்கொள்ள மந்த்ரம்.

நுனியில் பஞ்சு சுற்றிய நாணல்கட்டையால் அம்மியில் நன்றாக இழைக்கப்பட்ட மையை எடுத்து, வலது கண்ணில் இட்டுக்கொள்ளவேண் டும்.

இந்திரன் வ்ருத்ரனைக் கொன்றபொழுது, அவ்வசுரனுடைய கருவி ழி மையாக மாறிற்று. ஆதலால், மையை வ்ருத்ரனது கருவிழி என்றார்.

9 இருபத்தொரு தர்ப்பைகள் அடங்கிய தர்ப்பைக்கட்டினுல் யஜமான னைத் தடவும் மந்த்ரம்.

வாக்பதி என்றது ஸரஸ்வதி தேவதை.

இந்திரன் வ்ருத்ரனைக் கொன்றபொழுது அவன் ஜலத்தில் விழுந்து மரித்தான். அவனது சரீரத்தின் சுத்தமான சில சில பகுதிகள் தர்ப்பையாக யின. தர்ப்பைகள் இருபத்தொன்று, கைகால்களின் விரல்கள் இருபதையும் ஆத்மா ஒன்றையும் குறிக்கும்.

10 தர்ப்பைக்கட்டைக் குறித்து யஜமானன் சொல்லுதல்.

11 யாகசாலைக்குச் செல்லும் பொழுது சொல்லவேண்டியது.

யஜமானனுடைய வலது கையைப் பிடித்து அத்வர்யு அழைத்துச் செல்லவேண்டுமெனப் போதாயனரும், கிழக்குப் புறமுள்ள வாயிலின் வழியாக நுழையவேண்டுமென ஆபஸ்தம்பரும் குறிக்கின்றனர்.

12 யாக சாலையில் நுழைவதற்கு ஏற்பட்ட மந்த்ரம்.

ஆஹவநீயத்தின் தென்புறம் போகவேண்டும் என்று ஆபஸ்தம்பர் சொல்கிறார்.

13 ஆஹவநீயத்தின் தென்புறம் வடக்குமுகமாக உட்காருவதற்கு மந்த்ரம்.

---

(கிழக்கு நுனியாக முக்கியமான மூங்கிலைப் போட்டுக்கட்டின க்ருஹத்துக்கு ப்ராசீனவம்சம் என்று பெயர்.)

"ப்ராசீனவம்சத்தைக் கட்டுகிறான். தேவர்களும் மனிதர்களும் திக்குகளைப் பங்கிட்டுக் கொண்டார்கள். தேவர்கள் கிழக்கும், பித்ருக்கள் தெற்கும் மனுஷ்யர்கள் மேற்கும், ருத்ரர்கள் வடக்கும் அடைந்தார்கள். யக்ஞசாலையை ப்ராசீன (கிழக்கு) வம்சமாகச் செய்திருக்கிறதால், தேவலோகத்தையே அடைகிறான்.

ஸா — [க்ருஹத்துக்குச் சுவர்போல் ப்ராக்வம்சத்துக்கு மறைவு வேண்டுமென்று விதித்தார்.]

நாலு பக்கமும் மறைவு கட்டுகிறான் ஏனெனில் மனுஷ்யலோகத்துக்குத் தேவலோகம் மறைவாகத்தானே இருக்கிறது.

ஸா — [வாசல்படி வேண்டுமென விதித்தார்]

இந்த உலகத்தை முற்றிலும் துறத்தல் ஆகாது என்று சொல்லுகிறார்கள். பரலோகத்தில் நாம் இருப்போமே மாட்டோமோ என்று யார்தான் அறிவார். இரண்டு உலகங்களையும் அடையும் பொருட்டுத் திசைகளில் வாயிற்படிகளை அமைக்கிறார்.

ஸா — இவ்வுலகத்தில் ப்ரத்யக்ஷமாகச் சுகத்தை அடைகிறோம். க்ருஹ க்ஷேத்ர, புத்ரமித்ரர்களால் இது உண்டாகிறது. ஸ்வர்க்கமோ ஸந்தேஹம். யாகம் விக்னமில்லாமல் ஸாங்கமாகமுடிந்தால் ஸ்வர்க்கம் உண்டு. இல்லாவிடில் இல்லை. அவ்வாறு இருப்பினும் இப்பிறவியில் இல்லை. மரணத்திற்குப் பின்தான் கிடைக்கும். அப்பொழுதும், நரகப்ரத

மான கர்மாவால் தடைபட்டுத் தாமதிக்கும். ஆனதால் தெரிந்தவர்கள் இவ்வுலகத்தை முழுமனதுடன் துறத்தல் தகாதென்று சொல்லுவார்கள். இதற்காக, இவ்வுலகைப் பார்க்க வேண்டி வாயிற்படிகளை அமைத்து இரண்டு உலகங்களையும் அடைகிறார்.

ஸா — [அடியில் விதிக்கிறார்.]

கேசத்தையும், மீசையையும் வபனம் செய்து கொள்ளுகிறார். நகங்களை எடுக்கிறார், ஏனெனில் கேசமும், மீசையும் ம்ருதமான தோல்; ஆகையால் அசுத்தியுள்ளன.

ஸா — [அடியில் விதிக்கிறார்.]

"அங்கிரஸ்கள் ஸ்வர்க்க லோகத்தை (க்குறித்துப்) போய்க்கொண்டிருக்கும்போது தீக்ஷை, தபஸ் இரண்டையும், ஜலத்தில் ப்ரவேசிக்கச் செய்தார்கள். ஜலத்தில் ஸ்நாநம் செய்கிறவன் ஸாக்ஷாத்தாகவே தீக்ஷை, தபஸ் இவைகளை அடைகிறான்.

ஸா — [தீக்ஷை என்பது க்ஷவரம் முதலியன செய்துகொள்வது. தபஸ்— ஆகாராதிகளைக் கட்டுப்படுத்துவது. —அடியில் இறங்கி ஸ்நாநம் செய்ய இடத்தை விதிக்கிறார்.

தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்கிறான். தீர்த்தத்திலல்லவா அவர்கள் அவைகளை ப்ரவேசிக்கச் செய்தார்கள். தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்கிறான். (தனக்கு) ச்சமானர்களுக்கும் தீர்த்தமாகவே ஆகிறான் (அதாவது—புண்யபாதன். என்று அவனை அடைவார்கள்.)

ஸா — [ஆசமனத்தை விதித்தார்.]

ஆபோசனம் செய்கிறான், நிச்சயமாகவே உள்ளும் சுத்தியை அடைகிறான்.

ஸா — [விதித்தார்.]

வஸ்த்ரத்தால் தீக்ஷையைச் செய்துகொள்ளுகிறான். க்ஷௌமம் [பட்டு] ஸோமனைத் தேவதையாகக் கொண்டது. இப்படித் தீக்ஷையைப்பெறுகிற இவன் ஸோம தேவதையையே அடைகிறான்.

ஸா —

நீ ஸோமனுடைய சரீரமாக இருக்கிறாய், என் சரீரத்தைக் காப்பாற்று என்றார். தன் தேவதையை அடைகிறான், நிச்சயமாக இந்த ஆசீர்வாதத்தை வேண்டுகிறான்.

ஸா — [வஸ்த்ரத்தைத் தரித்துக் கொண்டவனுக்கு ஸோமன்தான் தன்தேவதை.— இந்த விஷயத்தை வேறுவிதமாக விவரிக்கிறார்.].

[வஸ்த்ரத்தில்] கண்டில் நூலைச் சுற்றுவது அக்நிதேவதையினுடையது. காற்றில் உலர்வது வாயுதேவதையினுடையது. (அறுந்த நூலை) முடிவது பித்ருதேவதைகளுடையது. (தடியாலாவது, கண்டாலாவது தட்டுவது)

ஓஷதிகளுடையது. பாவுபோடுதல் ஆதித்யர்களுடையது. (குறுக்கு நூல் போட்டு) நெய்வது விச்வே தேவர்களுடையது. இடைவெளிகள் நக்ஷத்ர தேவதைகளுடையது. (அதனால்) வஸ்த்ரம் என்பது ஸர்வதேவதைகளுடையதாம். வஸ்த்ரதீக்ஷையினால் இவன் தன்னை ஸர்வதேவதைகளினாலும் தீக்ஷை பெற்றவனாகச் செய்கிறான்.

மனுஷ்யன் வெளியில் ப்ராணனை யுடையவன். அவனுடைய ஆகாரமே ப்ராணன். ஆகாரம் செய்கிறான். ப்ராணனுடனேயே தீக்ஷை பெறுகிறான். ஸா — [ஆகாரத்தை ப்ராணன் எனச் சொன்னது, அது ப்ராணன் நிலைப்பதற்கு ஹேது வாகுமானதால். மித்ர பந்துக்களால் நன்றாகச் சாப்பிடவேண்டும் என்று' 'ப்ரார்த்திக்கப்பட்டு' என்பதை 'ஆகாரம் செய்கிறான்' என்பதற்கு முன் எடுத்துக்கொள்ளவேண்டியது.] [விதிக்கிறார்;]

ஆகாரம் செய்தவனாக ஆகிறான். அவன் ப்ராணனளவு. அதோடு கூடவே யாகசாலையை அடைகிறான்.

ஸா — [அப்யங்கத்தை விதிக்கிறார்.]

தேவதைகளுக்குச் சேர்ந்தது நெய் (க்ருதம்.) பித்ருக்களுக்குப் புளித்த வெண்ணெய் (மஸ்து). மனிதர்களுக்குப் பக்வமாகாதது. (ஆனதால்) நவநீதம் என்பது (வெண்ணை) ஸர்வதேவதைகளுக்கும் சேர்ந்தது. நவநீதத்தால் அப்யங்கம் செய்து கொள்வதால் ஸர்வ தேவதைகளையுமே திருப்தி செய்விக்கிறான்.

ஸா — [மேல் சொல்லியது நவநீதத்தின் மூன்று நிலைகள்.
1. நன்றாய்க் காய்ச்சினது. 2. கொஞ்சம் புளிப்பை அடைந்தது. 3 பக்வமாகாமல் வாஸனை சேர்ந்தது. மறுபடியும் நவநீதத்தின் பெருமையைக் கூறுவார்.]

தீக்ஷிதனான இவன் (யக்ஞத்தைத் தொடங்கியதால்) இவ்வுலகத்தை விட்டு விலகுகிறான். (யக்ஞம் முடிவு பெறாததலால்) தேவலோகத்தையும் அடையவில்லை. வெண்ணெயும் (க்ஷீரபாவத்தைவிட்டுவிலகிநெய்நிலைமையை அடையாததால்) நடுநிலையிலிருக்கிறது. ஆகையாலேயே நவநீதத்தால் மனித வழக்கத்துக்கு மாறாக ரோமவாட்டமாயும், யஜுர் மந்த்ரத்துடனும் அப்யங்கம் செய்து கொள்ளுகிறான்.

இந்த்ரன் விருத்ரனைக் கொன்றான். அவன் கருவிழி விழுந்து விட்டது. அது மையாக மாறிற்று. (ஆகையால்) மையைத் தீட்டிக் கொள்வதால் சத்துருக்களுடைய கண்ணை எடுத்துவிடுகிறான்.

முதலில் வலது கண்ணில் தீட்டுகிறார். (ஏனெனில்) முதலில் இடது பக்கத்தில் மையை மனுஷ்யர்கள் தீட்டிக் கொள்ளுகிறார்கள். இவர் தேய்த்துக் கொள்ளுகிறதில்லை. ஏனெனில் மனுஷ்யர்கள் தேய்த்துக்கொள்ளுகிறார்கள். ஐந்துமுறை மை தீட்டிக் கொள்ளுகிறார். பங்க்தி என்ற சந்தஸ்ஸுக்கு ஐந்து பாதங்கள். யக்ஞம் ஐந்துகளாலானது (ஐந்துமுறை தீட்டிக்கொள்ளுதலால்) யக்ஞத்தையே அடைகிறார். இவர் அளவிட்டுத்தீட்டிக்கொள்ளுகிறார். மனிதர்கள் அளவில்லாமல் தீட்டிக்கொள்வார்கள்;

பஞ்சுடன்கூடின நாணற்குச்சியால் தீட்டுகிறார். மனுஷ்யர்கள்பஞ்சில்லாத குச்சியால் தீட்டிக்கொள்வார்கள். இது மனுஷ்யர்கள் வழக்கத்துக்கு விசேஷமானது.

ஸா — யக்ஞம் ஐந்துகளாலானது.6-5-11ல் ப்ராஹ்மணாதிகள் சொல்வார்கள்: ஐந்தென்பது ருக்காலல்ல, யஜுஸாலல்ல யக்ஞத்தை ஏன் ஐந்தாலானது என்றால் பொறி, வெந்தமாவு, சுல், புரோடாசம், தயிர் இந்த ஐந்துகளால் ஆனது பற்றி பாங்க்தம் என்று யக்ஞத்தைச் சொன்னார்.

பஞ்சில்லாத குச்சியால் தீட்டினால் வஜ்ராயுதம் போல் ஆகும். பஞ்சுள்ள குச்சியால் மித்ரகுணத்தை ஒட்டித் தீட்டுகிறார்.

[தர்ப்பங்களைக் கொண்டு தடவ என்று விதித்தார்.]

இந்த்ரன் விருத்ரனைக்கொன்றான். அவன் ஜலத்தில் இறந்தான். அதில், யக்ஞத்துக்கு அர்ஹமாயும், சுத்தமாயும் தேவத்தன்மையுள்ளதாயுமிருந்தது ஜலத்தை விட்டுப்போய் தர்ப்பைகளாயிற்று. ஆகையாலேயே தர்ப்பங்களால் பரிசுத்தி செய்கிறது, யக்ஞத்துக்கு அர்ஹமானது .சுத்தமானதும்தேவத்தன்மையுள்ளதுமான ஜலத்தாலேயே பரிசுத்தப் படுத்தப்படுகிறதாக ஆகும்.தர்ப்பங்கள் ஸங்கியை விதித்தார்.

இரண்டு தர்ப்பங்களால் சுத்தம் செய்வது, இரவு பகலாலேயே இவனைச் சுத்தம் செய்ததாகும். மூன்று தர்ப்பங்களால் சுத்தம் செய்வது, மூன்று உலகங்களாலும் சுத்தஞ் செய்ததாகும். ஐந்துகளால் சுத்தம் செய்வது,பங்க்தி (என்றச்சந்தஸ்) ஐந்துபாதங்களுள்ளது.யக்ஞம்ஐந்தாலானது, யக்ஞத்தால் சுத்தம் செய்ததாகும். ஆறுகளால் சுத்தம் செய்வது (ருதுக்கள் ஆறு) ருதுக்களாலேயே இவனைச் சுத்தம் செய்ததாகும். ஏழுகளால் சுத்தம்செய்வது (சந்தஸ்கள் ஏழாம்) சந்தஸ்களால் சுத்தம் செய்ததாகும்.ஒன்பதுகளால் சுத்தம் செய்கிறது, (புருஷனிடத்தில் ப்ராணன்கள் ஒன்பதாம்) நவப்ராணன்களோடு இவனைப் பரிசுத்தம்செய்கிறதாகும் இருபத்தொன்றால் சுத்தம் செய்கிறது (கைவிரல் பத்தும் கால்விரல் பத்தும், ஆத்மா ஒன்றுமாக இருபத்தொன்றும், இவன் புருஷன்.) இவனைமுழுதும் சுத்தம் செய்ததாகஆகும்.

"சித்துக்குப்பதி உன்னைப் பரிசுத்தப் படுத்தட்டும்" என்றார். மனம்தான்சித்துக்குப்பதி, (சித்பதி) மனதால்தான் சுத்திசெய்கிறான்.வாக்பதி உன்னைப் பரிசுத்தப் படுத்தட்டும் என்றார். வாக்கால்தான் இவனைச் சுத்திசெய்கிறான். ஸவித்ருதேவன் உன்னைச் சுத்தப்படுத்தட்டு மென்றார் ஸவித்ருதேவனால் தூண்டப்பட்டே இவனைச் சுத்தப்படுத்துகிறான்.

'பவித்ரபதியே' அந்த உம் பவித்ரத்தால் எதற்காக(அக்னிஷ்டோம கர்மாவுக்கு)ஆத்மாவைச் சுத்தம் செய்கிறேனோஅதைச்செய்ய எனக்குச்சக்தி உண்டாகட்டும்.' என்றார். ஆசீர்வாதமான அநுக்கிரகத்தைப் பெற வேண்டுகிறான்.

ப்ராசீனவம்ச ப்ரவேசம் செய்கிறார்.

எந்தத் தேவர்கள் யக்ஞத்துக்காகச் சுத்தம் செய்து கொண்டார்களோ அவர்களே தான் வலுவடைந்தார்கள். இப்படித் தெரிந்து தன்னை யாகத்துக்குச் சுத்தமாக்கிக் கொள்பவன் வலுவடைகிறான். வெளியில் சுத்தம் செய்து உள்ளே ப்ரவேசிக்கச் செய்கிறான். உண்மையாகவே மனுஷ்யலோகத்தில் இவனைப் பரிசுத்தமாக்கிப், பரிசுத்தியடைந்த இவனைத் தேவலோகத்துக்கு அழைத்துச் செல்கிறான்.

ஒரு ஆஹுதியால் தீக்ஷிதனை மாட்டான் என்றார். தீக்ஷிதத்தன்மையைப் பெற ஸ்ருவத்தால் நாலு தடவை ஹோமம் செய்கிறான். ஐந்தாம் தடவை ஸ்ருக்கால் ஹோமம் செய்கிறான். பங்க்தி ஐந்து பாதங்களுள்ளது யக்ஞம் ஐந்தாலானது. (ஆகையால்) யக்ஞத்தையே அடைகிறான்.

ஸா — [ஆஹுதிகளை விதிக்கிறார்]

'ஒரு ஆஹுதியால் தீக்ஷிதனைக் மாட்டான்' என்றார், தீக்ஷிதத்தன்மையை (ப்பெற) ஸ்ருவத்தால் நாலு தடவை ஹோமம் செய்கிறான். ஐந்தாவதை ஸ்ருக்கால் செய்கிறான். பங்க்தி ஐந்து பாதங்களாலானது (ஆகையால்) யக்ஞத்தையே அடைகிறான்.

ஸா — [முதல் மந்த்ரத்தில் ஆஹுதியின் உபயோகத்தைச் சொன்னார்.]

'மனஸ்ஸங்கல்பம் நிறைவேறத் தூண்டும் அக்னி தேவனுக்கு ஸ்வாஹா' என்றார். மனஸ்ஸங்கல்பத்தால் தான் புருஷன் யக்ஞத்தைக்குறித்து யாகம் செய்கிறேன் என்று சொல்லுகிறான். [மேதையின் உபயோகத்தைச் சொல்லுகிறார்.] மேதை-அதாவது தாரணசக்தி சித்திப்பதற்காக மனஸ்ஸை ப்ரேரணம் செய்கிற உதவியான அக்னிக்கு ஸ்வாஹா.' என்றார் மேதையால், மனதால் தான் புருஷன் யக்ஞம் செய்ய வேண்டுமென்று அறிகிறான்.

'ஸரஸ்வதிக்கும், பூஷனுக்கும் அக்னிக்கும் ஸ்வாஹா'. என்றார். வாக்குத்தான் ஸரஸ்வதி, பூமியே பூஷன், வாக்காலும் பூமியாலும் யக்ஞத்தைச் செய்கிறான்.

ஸா — [வாக்கால் மந்த்ரோச்சாரண சித்தியும், பூமியால் யாகம் செய்ய இடமும் நெல் முதலியவையும் அடைவதாகும்.]

அப்புக்களே தேவலோகத்திலிருந்து கிடைத்தன. மழையிலும் வானத்திலிருந்து கிடைப்பனவே, பெரியவையே, எல்லாருக்கும் ஸுகத்தை உண்டு பண்ணுவனவே என்றார். [ஸா — அப்படி இல்லாவிடில்- இந்த யஜுஸைச்சொல்லாவிடில் ஜலம் பொறுமையாயில்லாமல் இவ்வுலகம்வந்து சேரும்.

ஸா — [பொறுமையில்லாமல் என்பதற்கு இடிமுழக்கத்தோடு வரும் என்க] 'அப்புக்களே, தேவலோகத்திலிருந்து கிடைத்தவை பெரியவை எல்லாருக்கும் சுகத்தை உண்டுபண்ணுவன' என்றார் இந்த உலகத்திற்கு அவைகளைப் பொறுமையுள்ளதாகச் செய்கிறான். ஆகையால் இவ்வுலகத்திற்குப் பொறுமையுடன் வருகின்றன. வானமும் பூமியும் என்றார். யக்ஞம் வானத்திலும் பூமியிலுந் தானிருக்கிறது. அகண்ட வெளியிலென்றார் யக்ஞம் வெளியில் தானிருக்கிறது.

ஸா — [பூமியில் யாகசாலையும், அந்தரிக்ஷத் (வெளி) தில் அனுஷ்டான நிமித்தம் ஸஞ்சாரமும் வானத்தில் யாகபலனும் என்று யாகம் மூவுலகத்திலும் இருக்கின்றன என்று சொன்னபடி.]

ப்ருகஸ்பதிஎங்கள் ஹவிஸால் திருப்தி யடையட்டும்' என்றார். தேவர்களுள் ப்ருஹஸ்பதியே ப்ரஹ்மம். ப்ரஹ்மத்தாலேயே இவனுக்கு யக்ஞத்தை அடையும்படி செய்கிறார் [ஸா — பாடாந்தரத்தை ஒட்டி] விதே: என்றுசொன்னால் யக்ஞவிக்நம் உண்டாம் என்று யக்ஞவிக்நத்தை பரிகரிக்கிறான்

ஸா — [வ்ருத்தி அடை—என்றபதம்] இல்லாததால் விக்நமேற்படும். ஔத்க்ரஹணமந்த்ரத்தைவிதித்து அநுவிஷயமான கதையைச் சொல்லுவார்.

ப்ரஜாபதி யக்ஞத்தை ஸ்ருஷ்டித்தார் இவரிடம்ஸ்ருஷ்டியைப்பெற்ற அந்த யக்ஞம் ஓடிவிட்டது. யஜுஸ்ஸையும் சூழ்ந்து கொண்டது. அப்படியே ஸாமத்தையும் ருக் (தேவதை) அதைத் தூக்கிப்பிடித்துக் கொண்டது. ருக் தூக்கிப்பிடித்துக் கொண்டதால் உயரத்தூக்குதலான ஹோமத்துக்கு ஔத்க்ரஹணம் (என்றுபெயர் அமைந்தது.)

ஸா — [ஓடும் யக்ஞபுருஷனைப் பிடிக்க மூன்றுவித மந்த்ர புருஷர்களை அனுப்பினார் ருக் பிடிக்க வல்லவனானான்]

யக்ஞத்தைப் பிடித்துக் கொள்ள ருக்கால் ஹோமம் செய்கிறார்.

ஸா — [அந்த ருக்கின் சந்தஸைத் தூக்கிச் சொல்லுகிறார்.]

சந்தஸ்களுள் 'அநுஷ்டுப்' ச்சந்தஸ் தூக்கிற்று என்பார்கள் ஆனதால் யக்ஞத்தைப்பிடித்துக் கொள்ள அனுஷ்டுப் ச்சந்தஸ்ஸால்ஹோமம்செய்கிறார்.

பன்னிரண்டு வாத்ஸ பந்தங்கள் (கன்றைக்கட்டும் தாம்புகள்) பிடித்தன என்றார்பன்னிரண்டுகளால்வாத்ஸபந்த(விஷய)த்தை அறிந்தவர்கள் தீக்ஷையைச் செய்கிறார்கள்.

ஸா — [ஒருகன்றை ஒரு பாசத்தால் கட்டுவதுபோல், விச்வேதேவஸ்ய' என்ற பன்னிரண்டு பதங்களில் ஒவ்வொருபதத்தாலும் யக்ஞம் கட்டப்படுகிறது. இதனால் அந்தப் பதங்களுக்கு வாத்ஸ பந்தங்கள்' என்று பெயர்

இந்த ருக் தான் அனுஷ்டுப்பாக, இந்த ருக்கால் தீக்ஷை செய்கிறதால் ஸர்வ வாக்காலும் செய்கிறான்.

ஸா — [அனுஷ்டுப் வாக்விசேஷமானதால் வாக்கென்றே சொன்னார்.]

'உலகத்தை நிர்வகிக்கிறஎல்லாத் தேவதைகளுடைய' என்றார். இதனால் (நேதா: என்ற பதத்தால்) ஸவித்ருதேவனைக் குறிக்கும். மர்த்தா (மனிதன்)ஸக்யத்தை வரிக்கட்டும் என்றதால் (மர்த்தபதம்) பித்ருதேவனைக் குறிக்கும், ''விச்வத்தை ஆத்மாவாக (சரீரமாக) உடையவனே. தனத்திற்கு ஈசுவரனாக இருக்கிறாய்'' என்று (விச்வபதத்தால்) விச்வே தேவதையைக்குறிக்கும். 'போஷிப்பதற்குத் தனத்தை யாசிக்கட்டும்'என்றார் இதனால் பூஷதேவனைக்குறிக்கும்.' இந்தருக் (இப்படி) ஸர்வதேவர்களையும் குறிக்கின்றன. இந்த ருக்கால் தீக்ஷை செய்வதால் இவனை (யஜமானனை) ஸர்வதேவதைகளாலும் தீக்ஷை செய்கிறார்.

ஸா — (அக்ஷர ஸங்க்யை அனுஸரித்துக் கொண்டாடுகிறார்.)

(இந்த மந்த்ரத்தில்) ப்ரதம பாதம் ஏழு அக்ஷரங்களுள்ளது, (மற்ற மூன்றும் எவ்வெட்டு அக்ஷரங்களுள்ளன, மூன்றையும் எட்டையும் கூட்டுக: நான்கையும் எட்டையும் கூட்டுக, எட்டு அக்ஷரங்களுடையதாதலால் காயத்ரீ. பதினொரு அக்ஷரங்களுடையதாதலால் த்ருஷ்டுப். பன்னிரண்டு அக்ஷரங்களுடையதாதலால் ஜகதி ஆகையால் இந்த ருக்கே எல்லாச் சந்தஸ்களுமாம். இந்த ருக்கால் தீக்ஷையைச் செய்வது எல்லாச்சந்தஸ்களாலும் தீக்ஷையைச் செய்கிறது (போலாகும்)

ஸா — ப்ரம பாதத்தின் ஏழு அக்ஷரங்களை மூன்றும் நாலுமாகப் பிரித்து, இரண்டு மூன்று நான்கு பாதங்களின் எட்டு அக்ஷரங்களோடு மூன்றையும் நான்கையும் தனித்தனியே கூட்டி வரும் எண்ணைக் கொண்டு பதங்கள் வாய்ந்தன. த்ருஷ்டுப் பதினொன்றாலானது, ஜகதி பன்னிரண்டாலானது.)

'ப்ரதமபாதம் ஸப்தாக்ஷரங்களுள்ளது பசுக்கள் சக்வரீ. பசுக்களையே அடைகிறான்:

ஸா — பசுக்களைக்கொடுப்பதால் சக்வரீயைப்பசுக்கள் என்றார். ப்ரதமபாதம் ஒரு அக்ஷரம் குறைந்தது. ஆனதால் வாக்கால் குறைவு பெற்று ஜீவிக்கிறார்கள். பூரணமான, (ருக்கால்) ப்ரஜாபதியை அடைவதற்கு ஹோமம் செய்கிறான். ப்ரஜாபதி பூரணன் போலிருக்கிறார் ஹோமம் [ஒரு அக்ஷரம் குறைந்த (ருக்கால்) ப்ரஜையை ஸ்ருஷ்டிப்பதற்காக ஹோமம்செய்கிறான். குறைந்ததிலிருந்துதான் ப்ரஜாபதி ப்ரஜைகளைச் சிருஷ்டித்தார்.

ஸா. —.[ இந்த ருக்கில் ப்ரதமபாதம் ஒரு அக்ஷரம் குறைவு பெற்று இருப்பதால் மனிதர்கள் வாக்கின் ஸ்வரூபம் பூர்ணதசையை அடையாமல் ஜீவிக்கிறார்கள் ]மூலாதாரத்திலிருந்து உண்டாகிற வாயு தலை வரையில் வ்யாபித்து முகத்தில் அந்தந்த ஸ்தானங்களில் வர்ணங்களை உண்டு பண்ணுகிறது. இப்படி வர்ணமாக வெளியடைவது தான் வாக்கின் நாலாவது பதம். மூன்மூன்று பதங்களும் கண்டத்திற்கு கீழே உண்டாவதால் வ்யக்தமாகாமல் இருந்துவிடுகின்றன.]

இதனால் இந்தருக்கில் ஸம்பூரணமடையாத வாக்கின் காரியம் காண்பிக்கப்பட்டது: மேல் மூன்று பாதங்களிலும் எட்டு அக்ஷரங்களும் பூர்ணமாக இருத்தலால் பூர்ணஸ்ருஷ்டியோடு கூடின ப்ரஜாபதிக்கு ஸமமென்று ப்ரஜாபதி பெறுதலின் காரணமாயிற்று என்க. முதல் பாதத்தில் அக்ஷரக்குறைவாதலின் ஸ்ருஷ்டி சூன்யமாய் ஜகத்தின் பீஜத்துக்கு ஸமம் என்று ப்ரஜோத்பத்திக்குக் காரணமாகிறது.

ஸா — மந்த்ரத்தைச் சொல்வதற்கு முன், ஒரு ஆக்யானத்தால்சித்ரம் என்று மந்த்ரத்தில் சொன்னதை விவரிக்கிறார் ருக்கும் ஸாமமும் யக்ஞத்திற்காகத் தேவர்களோடுகூட இராமல் க்ருஷ்ண ம்ருகத் (மான்) தின் உருவத்தோடு ஓடிப்போய் விட்டார்கள். தேவர்கள் யோசித்தார்கள்.

எவனை இவர்கள் அடைவார்களோ அவனல்லவா இந்தப் பலனை அடைந்து விடுவான்' என்று அவர்களை சமீபத்தில் (வரும்படி) கூப்பிட்டார்கள்.

அவர்கள் பகல் இரவு மகிமையை(சுக்லம், க்ருஷ்ணம் என்ற இரண்டு வர்ணங்களையும்) தங்கள் ம்ருகசரீரத்தில் வைத்துவிட்டுத் தேவர்களுக்குச் சமீபத்தில் வந்தார்கள்; க்ருஷ்ணாஜினத்தின் (மான்தோலின்) வெண்மை இந்த ருக் தேவதையின் வர்ணமே. அதன் கருமை ஸாமத்தின் வர்ணமாகும்'

ருக், ஸாமங்களின் பிம்பங்களாக இருக்கிறார்கள் என்றார். நிச்சயமாகவே ருக், ஸாமங்களையே பெறுகிறான். க்ருஷ்ணாஜினத்தின் வெண்மை அஹஸ்ஸின் (பகலின்) நிறமே, கருமை இரவின் நிறம். இவைகளில் (இரவு பகலில்) எந்த ஸாராம்சம் அங்கே (ருக், ஸாமங்களில்) மறைந்துகிடக்குமோ அதையே பெறுகிறான்.

க்ருஷ்ணாஜினத்தால் (யஜமானனைத்) தீக்ஷை செய்து வைக்கிறான். கிருஷ்ணாஜிநம் என்பது வேத (புருஷனுடைய) ரூபந்தான். (ஆதலின்) வேதத்தாலேயே (இவனைத்) தீக்ஷைசெய்வது போலாம்.

'(வருண) தேவ! இந்தப் புத்தியை வேண்டுகிற இவனுக்கு' என்றார். இது யஜுர்வேதப்படியே இருக்கிறது. தீக்ஷைபெற்ற இவனே கர்ப்பமாம். உல்பமே(கருப்பத்தின் சிசுவின் தலையைமூடியிருக்குந்தோல்) வஸ்த்ரமாம். மூடிக்கொள்ளுகிறான். ஆதலால் கர்ப்பங்கள் (தோலால்) மூடப்பட்டே பிறக்கின்றன. ஸோமத்தைக் கிரயத்துக்கு வாங்குமுன் எடுக்கக்கூடாது ஸோமம்வாங்குமுன் (வஸ்திரத்தை) எடுத்தால் சிசுக்களின்கருக்கள் நழுவிவிடும். ஸோமம் வாங்கினபொழுது வஸ்த்ரத்தை எடுக்கிறான், பிறக்கிறானும். ஐச்வர்யம்பெற்றவர்களுக்குமுன்— வஸ்த்ரத்தை எடுத்துவிடுவது போலவே ஆகும்.

அங்கிரஸ் (தேவதை)கள் ஸ்வர்க்கலோகம் போகும்போது பலத்தைப் பங்கிட்டார்கள். அதில் மிகுதியானவையே சரங்களாக (ஒருவகைப்புல்) ஆயின. பலந்தான் சரங்கள். சரத்தாலானதே மேகலையாக அமைந்ததால் பலத்தையே பெறுகிறான்.

மேகலையை மத்தியில் கட்டிக்கொள்ளுகிறான், இவனுக்கு மத்தியிலேயே பலத்தை ஸ்தாபிக்கிறான் ஆனதால் மத்தியிலேயே பலத்தை அடைந்து சுகிக்கிறார்கள். புருஷனுக்கு நாபிக்கு மேலேயே சுத்தமாம் (மேத்யம்). கீழே அசுத்தமாம். மத்தியத்தில் கட்டுவதால் இவன் (யஜமானன்) சுத்தத்தையும் அசுத்தத்தையும் பிரித்துக்காட்டுகிறார்.

இந்த்ரன், விருத்ரன்பேரில் வஜ்ராயுதத்தை எறிந்தான். அது மூன்றாகப்பிளந்தது. ஸ்ப்யம் என்றது ஒருபாகம்; ரதம் ஒருபாகம், யூபஸ்தம்பம் ஒருபாகம்; உள்ளே எந்த சரங்கள் (அம்புகள்)பிளந்தனவோ அவைகளே சரப்புல்களாயினவாம்; ஆதலால் சரப்புல்லுக்குப்பெயர் சரம் என்றாயிற்று. வஜ்ரமே சரங்களாம். பசிஎன்பது மனிதனுக்கு சத்ருவல்லவா? மேகலை சரப்புல்லாலமைத்திருப்பதால் வஜ்ரத்தாலேயே சத்ருவான பசியை சாக்ஷாத்தாகவே மத்தியிலிருந்து ஓட்டிவிடுகிறான். முப்புரியாலானது (மேகலை) ப்ராணன் மூன்றுவிதமே. (ப்ராணன், அபானன், வ்யானனென்று) மூன்றுவிதமான ப்ராணனையே மத்யத்தில் யஜமானனிடத்தில் ஸ்தாபிக்கிறான்.

ரஜ்ஜுவைக்காட்டிலும் விசேஷமாக பெருத்திருக்கிறது. மேகலையால் யஜமானனையும் முப்புரிச்சடையால் பத்நியையும் தீக்ஷை செய்து வைக்கிறான்; சேர்ந்திருப்பதற்காக.—

ஸா — க்ருஷ்ண மிருகத்தின் கொம்பு இந்த்ரன் யோநி என்பதைப் பூர்வ ஆக்யானத்தால் விவரித்து விதிக்கிறார். cf (1—2—2—6.)

யக்ஞம் தக்ஷிணையை(க்குறித்து) நினைத்தது. அதனுடன் சேர்ந்தது. (யக்ஞம் புமாந்; தக்ஷிணை ஸ்த்ரீ என்க.) அதை இந்த்ரன் கவனித்து யோசித்தான். எவன் இதிலிருந்து ஜநிப்பானோ அவன் இந்த ஐசுவர்யத்தை எல்லாம் அடைவனே என்று தக்ஷிணையில் ப்ரவேசித்தான். அவளிடத்திலிருந்து இந்த்ரன் பிறந்தான். பிறகு அவன் ஆலோசித்தான். நானில்லாமல் வேறொருவன் இவளிடத்தில் பிறப்பானேல் இதெல்லாமாக ஆகிவிடுவானென்று யோநியைத்தடவி அறுத்துவிட்டான். ஒரு ப்ரஸவத்துக்குப் பிறகு மலடாக ஆனாள். இதனால்தான் ஒரு ப்ரஸவத்துக்குப்பிறகு கருத் தரியாமல் இருந்துவிடுகிறது. (இந்த்ரன்) அந்த (யோநியைக்) கையில் சுற்றிக் கொண்டான். மிருகங்களிடத்தில் வைத்தான். அது க்ருஷ்ணமிருகத்தின் கொம்பாக மாறிற்று. "இந்த்ரன் யோநியாக இருக்கிறாய், ஹிம்ஸிக்காதே," என்று க்ருஷ்ணம்ருக விஷாணத்தைக் கொடுக்கிறான். (அதனால்) யக்ஞத்தை யோநியுள்ளதாகச் செய்கிறான். தக்ஷிணையையும் யோநியுள்ளதாகவும் இந்த்ரனையும் யோநியுள்ளவனாயும் (இப்படி இவைகளெல்லாம்) யோநியோடுகூடியனவாகச் செய்து வைப்பதற்காகச் (செய்கிறான்.) cf (1—2—2—8)

'க்ருஷிக்காக உன்னையும் நல்ல ஸஸ்யத்துக்காகவும்" என்றார் இதனாலேயே ஓஷதிகள் க்ருஷி இல்லாமலே முளைக்கின்றன. "நல்லபலத்துடன் கூடின ஓஷதிகளுக்காக உன்னை" என்றார். ஆகையால் ஓஷதிகள் பலிக்கின்றன. கையால் சொறிந்து கொண்டால் ப்ரஜைகள் சொறியுள்ளனவாகிவிடும். புன்னகைசெய்தால் நக்நர்களாகுமாம். க்ருஷ்ணவிஷாணத்தால் சொறிந்துகொள்ளுகிறான். அதைப்பிடித்துக் கொண்டு புன்னகை செய்கிறான். இது ப்ரஜைகளின் ரக்ஷணார்த்தம் — தக்ஷிணைகளைக் கொடுப்பதற்கு முன்பு க்ருஷ்ண விஷாணத்தைப் பரித்யாகம் செய்யக்கூடாது. தக்ஷிணைகளைக் கொண்டுவருவதற்கு முன்பு க்ருஷ்ணவிஷாணத்தைப் பரித்யாகம்செய்தால் ப்ரஜைகளின் கரு நழுவிவிடும். தக்ஷிணைகளைக்கொடுத்தபிறகு க்ருஷ்ணவிஷாணத்தைக் குழியில் (சாத்வாலத்தில்) எறிகிறான். யக்ஞத்தின் யோநியே சாதவாலம் (குழி) க்ருஷ்ண விஷாணமே யோநி- யோநியிலேயே யோநியை வைக்கிறான். (இது) யக்ஞம் யோநியோடுகூடினதாக இருக்க வேண்டுமென்று.

ஸா — [வேதிக்குவேண்டிய மண்ணை எடுக்கஇருக்கும் குழிக்கு 'சாதவாலம்' எனப்பெயர்.] V. 1. 4. cf (1—2—2—6)

வாக் யக்ஞத்துக்கு உதவிசெய்ய இஷ்டமில்லாமல் தேவர்களிடமிருந்து போய்விட்டது. அது விருக்ஷங்களில் நுழைந்தது. வ்ருக்ஷங்களில் பேசுவதும், துந்துபியிலும் வேணுவிலும் வீணையிலும் (பேசுவதெல்லாமும்)

அந்தவாக்கே. தீக்ஷிதனுக்குத் தண்டம்கொடுப்பதால் வாக்கையே அடைகி ருன். அத்திமாத்தாலானது (இந்தத் தண்டம்.) அத்தி பலம். பலத்தையே அடைகிருன். முகத்துக்கு நேரே இருக்கிறது, முகத்திலிருந்து இவனுக்குப் பலத்தை ஸ்தாபிக்கிருன். ஆனதால் முகத்தாற் பலத்தை அனுபவிக்கிருர் கள். (1) ஸோமத்தைவாங்கினபிறகு மைத்ராவருணன் (என்ற ருத்விக்குக் குத்) தண்டத்தைக் கொடுக்கிருன். ஏனெனில் மைத்ராவருணன்தான் முத வில் ருத்விக்குக்களுக்கு வாக்கை (ச்சொல்லும்படி) நியமிக்கிருன். அதை ருத்விக்குகள் யஜமானனிடத்தில் ப்ரதிஷ்டைசெய்கிருர்கள்.

"யக்ஞத்தை மனதால் ஸ்வாஹா;" (அடைகிறேன்) என்ருர். ஏனெ னில் மனதால்தான் ஒருபுருஷன் யக்ஞத்தை அடைகிருன். "விண்ணுக்கும் மண்ணுக்கும் ஸ்வாஹா." (இவைகளே ஆச்ரயத்திருக்கிறது) என்ருர், விண் ணிலும் மண்ணிலும்தான் யக்ஞம் இருக்கின்றன. விஸ்தாரமான அந்த ரிக்ஷத்திலிருந்து என்ருர் யக்ஞம் அந்த ரிக்ஷத்திலிருக்கிறது. ஸ்வாஹா "யக்ஞத்தை வாதத்திலிருந்து பிடித்துக்கொள்ளுகிறேன்" என்ருர். எவன் பரிசுத்தம்செய்கிருனே அவனே யக்ஞம், அதையே ஸாக்ஷாத்தாக அடை கிருன். Cf. (1—2—4—10)

முஷ்டிகளைச் செய்துகொள்ளுகிருன். வாக்கை அடக்கிக்கொள்ளுகி ருன். இது யக்ஞம் நிலைப்பதற்காக. இந்தப்ராஹ்மணன் "தீக்ஷைசெய்து கொண்டுவிட்டான்." என்று மூன்றுதடவை (சத்தமில்லாமல்) மெள்ள சொல் லுகிருர். தேவர்களிடத்திலேயே இவனைக்குறித்துச்சொல்லுகிருர். மூன்றுத டவை உரத்த சத்தத்தோடு (சொல்லுகிருர்). தேவமனுஷ்யர்கள் இருவர்களி டத்திலுமே இவனைக்குறித்து சொல்வதாகும். நக்ஷத்ரங்கள் உதயமாகும்வ ரையில் பேசலாகாது. நக்ஷத்ரங்கள் உதயமாகுமுன் பேசினுல் யக்ஞம் சேத மாகும். நக்ஷத்ரங்கள் உதயமாகும்போது வ்ரதத்தைச்செய்யுங்கள் என்று பேசுகிருன். தீக்ஷிதன் யக்ஞத்திற்காக வ்ரதத்தைப்பூண்டவனும். யக்ஞ விஷயமாகவே பேசுகிருன்..(முன்னர்ப்) பேசிவிட்டால் விஷ்ணு தேவதாக மான ருக்கைச்சொல்லவேண்டும். விஷ்ணுவே யக்ஞமாம். யக்ஞத்தால் யக் ஞத்தைச் சரிசெய்ததாகும்.

## அநுவாகம் 2.

ப்ராசீன வம்சத்தை அடைந்த யஜமானனுக்குத் தீக்ஷை செய்து கொள்ள அங்கபூதமான மந்த்ரங்கள்.

வபனுதிகள் செய்து கொண்டு யாகசாலையில் ஆஹவனீயத் தின் தென்புறம் உட்கார்ந்த யஜமானனுக்குத் தீக்ஷை பெற் றுக் கொள்வதனுலேயே சரீரசுத்தி ஏற்படுமாதலால் இந்த அநுவாகத்தில் தீக்ஷா ஹோமங்கள் சொல்லப்படுகின்றன.

(1) (யாகம் செய்கிற) ஸங்கல்பம் நிறைவேறத் தூண்டுதல்

செய்கிற அக்நிக்கு இது ஹோமம் செய்ததாகட்டும். (வேதார்த்தத்தைத் தெரிந்து கொள்கிற) அறிவின் பொருட்டு மநோபிமான தேவதையாகிய அக்நிக்கு இது ஹோமம் செய்ததாகட்டும் தீக்ஷையின் பொருட்டுத் தபோபிமான தேவதையாகிய அக்நிக்கு இது ஹோமம்செய்ததாகட்டும். மந்த்ரோச்சாரண சக்தியின் பொருட்டு (வாக்கைப்) புஷ்டிசெய்கிற அக்நிக்கு இது ஹோமம் செய்ததாகட்டும். வானத்திலிருந்து (பெய்து) பஹுபலமாகவும் உலகமுழுவதற்கும் தான்யங்களை உண்டாக்குகிற தீர்த்தமும், வானமும், பூமியும், விசாலமான அந்தரிக்ஷமும், ப்ருஹஸ்பதி தேவதையும் எங்களுடைய ஹவிஸால் வ்ருத்தியடைவதற்கு இது ஹோமம் செய்ததாகட்டும்.

(2) உலகத்தை நிர்வாஹிக்கிற எல்லா தேவதையினுடைய அநுக்கிரஹத்தை யஜமானன் வரிக்கட்டும். உலகத்தில் தனத்தின் இருப்பிடமாயிருக்கிறாய். (யாகத்தைப்) போஷிப்பதற்குத் தனத்தை யாசிக்கட்டும். (அதன்பொருட்டு) இது ஹோமம் செய்ததாகட்டும்.

(3) (க்ருஷ்ணாஜினத்திலுள்ள வெண்மையும் கறுப்புமான புள்ளிகளைப் பார்த்து) ருக் ஸாமங்களுடைய சித்திரங்களாயிருக்கிறீர்கள். உங்களைத் தொடுகின்றேன். இந்த யாகத்தில் என்னை மேலான ருக்குகளால் (கூறப்பட்ட கார்யம்முடியும் வரையில்) காப்பாற்றுங்கள்.

(4) ஓ வருணதேவா, இந்த (அக்நி ஹோத்ர விஷயமான) அறிவை அடைந்திருக்கிற யஜமானனுடைய) ஸம்ருத்தியான யாகத்தை நன்றாக உபதேசித்துக் (கரையேற்றுவாயாக. எல்லா இடையூறுகளையும் (நாங்கள்) எதனால் கடப்போமோ அத்தகைய சுகமாய்த் தாண்டக்கூடிய படகில் ஏறுகிறோம்.

(5) (மேகலையைப் பார்த்து) நீ அங்கிரஸ் ஸம்பந்தமானதும் கம்பளம்போல் ம்ருதுவானதுமான அன்னரஸமாயிருக்கிறாய். அந்த ரஸத்தை எனக்குக் கொடு, என்னைக் காப்பாற்று, (கட்டுவதால்) என்னை ஹிம்ஸிக்காதே. (வஸ்த்ரத்தைப் பார்த்து) நீ விஷ்ணுவினுடைய சுகத்தைக் கொடுப்பவன்,

யஜமானனுக்குச் சுகமும், எனக்குச் சுகமும் கொடு. (தலைப் பாகையைப் பார்த்து) (நக்ஷத்ரங்களின் ப்ரகாசத்திலிருந்து என்னைப் போற்றுவாக.

(6) (மான் கொம்பைப் பார்த்து) இந்திரனுடைய யோநியா யிருக்கிறாய். என்னை ஹிம்ஸிக்காதே.

(7) (மண் கட்டியைப் பார்த்து) நல்ல தான்யங்களை யுடைய ஸாகுபடியின் பொருட்டு உன்னைப் புரட்டுகிறேன்.

(8) (தலையைக் குறித்து) நல்ல போகத்தைத் தரக்கூடிய ஓஷதிகளின் பொருட்டு உன்னைச் (சொரிந்து கொள்கிறேன்.
(9) (அத்திக் கிளையைப் பார்த்து) வனஸ்பதி (உண்டாக்கிய தண்டரூபமான) தேவன் பிடிக்கப்பட்டு இருக்கிறார். (நீர் என்னை) காரியம் நிறைவேறுகிறவரையில் நிமிர்ந்து நின்று என்னைக் காப்பாற்றும்.

(10) ஹோமமானது செய்யப்படட்டும். மனதினால் யாகத்தை அடைகிறேன். வானத்திலும் பூமியிலும் அந்தரிக்ஷத்திலும் யாகம் இருக்கிறது. நேராடியே வாயுவின் அநுக்ரஹத்தினால் யாகம் செய்யத் தொடங்குகின்றேன்.

---

குறிப்பு:—

(1) த்ருவை என்றபாத்ரத்திலுள்ள ஆஜ்யத்தினால் ஐந்து தீக்ஷாஹோமம் செய்ய மந்த்ரம்.

இம்மந்த்ரத்தின் முதல் நான்கு ஹோமங்கள் செய்தபிறகுதான் யஜமானன் தீக்ஷை பெற்றவனாகின்றான். இவ்வாறு தீக்ஷிதனான பிறகு ஐந்தாவது ஹோமம் செய்யப்படுகிறது. மந்த்ரோச்சாரணசக்தியை "ஸரஸ்வதி" யெனவும், லோகக்ஷேமத்திற்குக் காரணமான ஸஸ்யங்களை "சம்" எனவும் ப்ரயோகித்தார்.

(2) உத்க்ரஹண ஹோமம் செய்யமந்த்ரம். (பூர்ணாஹுதி) உத்க்ரஹணம், யக்ஞ புருஷனைப் பிடித்துக் கொள்ளுதல். ஓடிப்போன யக்ஞ புருஷனைப் பிடிப்பதற்கென ருக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று மந்த்ர புருஷர்களை ப்ரஜாபதி ஏவினார். ருக்தேவதை அப்புருஷனைப் பிடித்துக் கொண்டது. ஆதலின், ருக்வேத மந்த்ரத்தால் செய்கிற இதனை "உத்க்ரஹண ஹோமம்" என்றார். யஜமானன் மரணத்தை யடையக் கூடியவனாதலால் "மர்த்த:" என்றது தகுதி.

இம்மந்திரத்தில் "நேதா:" என்றபதம் ஸவிதா தேவதையையும், "மர்த்தா" என்றது பித்ருக்களேயும், "விச்வே" என்ற வார்த்தை விச்வேதேவர்களேயும் "புஷ்யஸே" என்ற சொல் பூஷா தேவதையையும் குறிக்கும்.

(3) மான்தோலேத் தடவும் மந்த்ரம்.

கிழக்குப்புறம் தலேயும், மேற்பக்கம் ரோமங்களும் இருக்கும்படி தோலேக் கீழேவிரித்துக், சட்டைவிரலால் கறுப்புக் கோடுகளேயும் தடவ வேண்டும். வெள்ளேக்கோட்டினுல் ருக்வேத ஸ்வரூபமும், கறுப்புக் கோட்டினுல் ஸாமவேத ஸ்வரூபமும் பெறப்படும். மேலும், வெண்மை பகலேயும் கருமை இரவையும் குறிக்கின்றன. இம்மந்த்ரத்தால், ருக், ஸாம, அஹோராத்ர (இரவும் பகலும்) தேவதைகளின் அநுக்ரஹத்தை யஜமானன் அடைகின்றான்.

(4) மான்தோலில் உட்காருவதற்கு மந்த்ரம்.

வருணன் ஜலதேவதை யாதலின் மான்தோலேக் கப்பலாகப் பாவித்து அதன்மேல் உட்காருவது கப்பலில் ஏறுதற்கு ஈடாகும் என்றூர். இக்கப்பலின் மூலமாய் இடையூறுகளாகிய கடலேக்கடக்கின்றான் என்பது பொருள்.

(5) மேகலே கட்டிக்கொள்ள மந்த்ரம்.

பெரியோரைக் காணும்பொழுது அங்க வஸ்த்ரத்தையும், தலேப்பாகையையும் விலக்குகிற வழக்கத்தை அநுஸரித்து, மேகலே கட்டுவதற்கு முன் அவ்விரண்டும் இல்லாதிருந்த யஜமானனுக்கு அத்வர்யு மேகலே கட்டியவுடன் அவ்விரண்டையும் அணியுமாறு செய்கின்றான்.

மூன்று தர்ப்பைகளால் திரித்த மேகலேயை யஜமானனும், கயிருகத் திரித்த (யோக்த்ரம்) தர்ப்பையைப் பத்நியும் கட்டிக்கொள்ள வேண்டுமென ஆபஸ்தம்பர் சொல்கிறூர். சடைபோல் பின்னப் பெற்றது "யோக்த்ரம்."

அங்கிரஸ் என்றரிஷிகள் அன்னரஸத்தைப் பங்கிட்டுக் கொண்டபொழுது மீதியான அன்னரஸம் சரணலசக மாறிற்று. அதனுல், தர்ப்பைக்கு அங்கிரஸ ஸம்பந்தமும் அன்னரஸ ஸம்பந்தமும் சொல்லப்பட்டது. மேகலேயைச் சரீரத்தின்மத்தியில் கட்டுவதால் அன்னரஸத்தை உடலின் நடுவில் வைத்தது போலாம்.

(6) யஜமானன் மான்கொம்பை ஏற்றுக்கொள்ள மந்த்ரம்.

மான்கொம்பில் சணலேச்சுற்றி யஜமானன் கையில் அத்வர்யு கொடுக்க வேண்டும்.

யக்ஞதேவன் தக்ஷிணு தேவியுடன் இருந்தான். இந்தத் தம்பதிக்குஜனிப்பவன் மிக்க தனவந்தனுவான் என்ற செய்தியை யறிந்த இந்த்ரன், தக்ஷிணுதேவியின் கர்ப்பத்தில் புகுந்து பிறகுபிறந்து இந்திரனுஞன். பிறகு,தன்

னைப்போல் பலர் பிறக்காமலிருக்கும்படி தாயின் யோநியை அறுத்து அதனை மான்களுக்குக் கொடுத்தான் ஆதலின், யக்ஞஸாதனமாகிய ஐச்வர்யத்திற்குக் காரணமான தக்ஷிணாதேவியின் யோநியும், யக்ஞ தேவனும், இந்த்ரனும், மான்கொம்பில் ஸம்பந்தப் படுகிறார்கள்.

(7) மான்கொம்பால் மண்கட்டியைப் புரட்டுவதற்கு மந்த்ரம்.

உழவு, எரு முதலியன இல்லாமல் பூஸாரத்தால் மாத்திரம் விளைகிற ஓஷதிகளைக் குறித்துக் கூறியது.

(8) மான்கொம்பினால் தலையைச் சொரிந்து கொள்வதற்கு மந்த்ரம்.

(9) அத்திக்கிளையை ஏற்றுக்கொள்ள மந்த்ரம்.

வனத்தில் வளர்ந்தது வனஸ்பதி யாயிற்று. ஸங்கீதமாகிய ஆநந்தகரமான வாக்கு, வீணை, வேணுமுதலியனவால் வெளியாவதும், அவ்வாத்தியங்கள் மரத்தால் செய்யப்படுவதும் வெளிப்படை. இதுகாரணம் பற்றியே வாக்தேவதை காட்டில் ஒளிந்து கொண்டது; என்றார்.

அத்தகைய இனிமை வாய்ந்த வாக்கின் பொருட்டு இம்மந்த்ரம் கூறப்படுகிறது.

(10) வாக் நியமம் செய்து கொள்ள மந்த்ரம்.

இருகைகளிலும் கட்டைவிரலைத்தவிர்த்துள்ள விரல்களை இரண்டிரண்டாய்ச்சேர்த்து முதல் நான்கு மந்த்ரங்களை உச்சரித்துப், பிறகு கைகளை முஷ்டியாக மூடிக் கொண்டு ஐந்தாவது மந்திரத்தை உச்சரித்து வாக்நியமம் செய்து கொள்ளல் வேண்டும்.

நக்ஷத்ரங்கள் ஒளிவீசுகிற காலமாகிய இரவில் பேசாதிருப்பது, வாக்நியமம்.

## அநுவாகம். 3.

தீக்ஷித கர்த்ருக தேவயஜன ஸ்வீகார மந்த்ரம்.

(தீக்ஷிதன், தேவயஜனத்தை ஸ்வீகாரம் செய்தல்)

1. (இஷ்டார்த்த சித்தியின் பொருட்டு) தேவதையைக் (குறித்துச் செய்யும் கர்மங்களை அநுஷ்டிக்க வேண்டிய) புத்தியை(ப்பெற) மநநம் செய்கிறோம். இது ஸுகத்துக்குக் காரணமானது. ப்ரம்ஹவர்ச்சஸ் அடைவதற்கு அவசியமானது. யக்ஞத்தை நடத்திவைக்கச் சக்தியுள்ளது இந்தப் (புத்தி) கார்யம்முடியும் வரையில் எங்கள் வசத்திலிருக்கட்டும்.

2 மனதோடு பிறந்தவர்களும், மனதுடன் கலந்து நிற்பவர்களும், கார்யத்தில் கைதேர்ந்தவர்களும் தக்ஷ (ப்ரஜாபதிக்குப்)பிறந்தவர்களுமான தேவர்கள் எங்களை ரக்ஷிக்கட்டும். எங்களைக் காக்கட்டும். அவர்களுக்கு நமஸ்காரம். அவர்களுக்கு ஸ்வாஹா.

3 அக்னியே, நீர் நன்றாய் விழித்திரும். நாங்கள் பயமில்லாமல் தூங்குவோம் எங்களுக்கு க்ஷேமத்திற்கும் நாசமடையாமலிருப்பதற்கும் மறுபடி விழித்துக் கொள்வதற்கும் ஸாமர்த்யத்தைக் கொடும்.

4 அக்னியே, நீர் மனுஷ்யர்களுக்குள் வந்திருந்து வ்ரதத்தை பாதுகாக்கும் தேவர். நீர் எவ்விதத்திலும் யக்ஞங்களில் ஸ்துதி பெறுகிறீர்.

5. எல்லாத் தேவர்களும் என்னைச்சூழ்ந்துநிற்கிறார்கள். பூஷதேவன் (ஹிரண்ய) த்ரவ்யத்தோடும், ஸோமன் வஸ்த்ரத்தோடும், (கோ, முதலிய மற்ற ஐசுவர்யங்களைக் கொடுக்கும்)ப்ரேரகரான தேவன், அவைகளை (வஸ்த்ரங்களை)க்கொடுக்க(வரட்டும்). ஸோமனே, (இந்தகர்மாவுக்கு வேண்டியது)

---

## பிழை திருத்தம்.

பிரபாடகம். 1. அநுவாகம் 5 மந்திரம் 13ஐ, ராட்சஸர்களும் வைரிகளும் வெருட்டப் பட்டார்கள் எனப்படித்துக் கொள்க. பிரபாடகம். 1. அநு. 7. ம—ம் 3ல் 'பூமியைத் திடப்படுத்து' என்பதற்குப் பின், ஆயுளைத்திடமாகச் செய், பிரஜையைத் திடப்படுத்து. என்னும் வாக்கியங்களைக் கூட்டிப் படிக்க.

பிரபாடகம். 1. அநுவாகம் 9. மந்திரம் பத்தின் இடையில் ஆதித்யர்கள் என்பதற்கு முன், 'ருத்ரர்கள் திருஷ்டுப் சந்தஸால் உன்னைச் சுற்றிக் காக்கட்டும்' என்பதைச் சேர்த்துக் கொள்ளுக.

இவற்றை எடுத்துக் காட்டிய புத்தூர் O. S. விசுவநாத கநபாடிகளுக்கு அன்பார்ந்த வந்தனமளிக்கிறோம். இனியும் ஆண்டாண்டு நேரும் பிழைகளை ஆண்டாண்டுபிழை திருத்தமாகக் காட்டிவருவோம் மானேஜர்

பிர. 1, அநு. 9, ம-ம்.1, ஸ்ப்யம் என்பது கதிரமரத்தால்ஒரு முழ நீளத்தில் செய்த கட்கம் என்று காத்யாயனச் ரௌதஸூத்ரம்.1, 3, 33; 39 கூறும்,

இவ்வளவு கொடும். ஸம்பூரணத்தால், என்னை நிரப்பிமேன் மேலும் கொண்டுவாரும்.—என்னைவிட்டு ஆயுஸ் நீங்காமலிருக்கட்டும்—(நீ)ஸுவர்ணம், எனது போகத்தின் பொருட்டு இரு; (நீ)வஸ்த்ரம், எனது போகத்தின்பொருட்டு இரு; நீ பசு, எனது போகத்தின்பொருட்டுஇரு.

நீ குதிரை, எனது போகத்தின் பொருட்டு இரு; நீ ஆடு, எனது போகத்தின்பொருட்டு இரு; நீ மேஷம், எனது போகத்தின் பொருட்டு இரு.

(6) உன்னை. வாயுவுக்கு, வருணனுக்கு உன்னை, நிர்ருதிக்கு உன்னை, ருத்ராருக்கு உன்னை.

(7) திவ்ய தீர்த்தங்களே, தீர்த்தங்களின் பேரனை அக்நியே,) ஹவிஸுஸுக்குக்காரணமானதும், இந்த்ரியசக்தியைத் தருவனவும். விசேஷமான ஆனந்தத்தை அளிப்பதுமானஉங்கள் அலையைத்தாண்டமாட்டேன், மணலால்அணைபோட்டு அதன்மேல் செல்லுகிறேன்,

8. (ரதத்தைப்பார்த்து) ப்ரசஸ்தமான (இந்த நித்யாக்நிஹோத்ரசாலையிலிருந்து)இன்னும்ப்ரசஸ்தமான(ஸோமதேவதையைச்சார்ந்த தேவயஜநத்திற்கு) ஏகு.— ப்ரஹஸ்பதி உன்முன்போவர். ப்ருதிவியில் ச்ரேஷ்டமான இடத்தில் கொண்டு சேரு.— (ரதாபிமானியான சூர்யனைப்பார்த்து)உனதுமுழுவீரத்தன்மையோடு . சத்ருக்களை (யாகசாலைக்கு) வெகு. தூரத்தில் துரத்திவிடு.

9 ப்ருதிவியிலுள்ள. யாகசாலைக்கு இதோவந்தோம். இதிலேயேவந்து பூர்வத்தில் எல்லாத்தேவர்களும்திருப்தி அடைந்தார்கள். (இதிலே) ருக், ஸாமங்களிலும், யஜுர்வேத மந்த்ரத்தாலும் (ஸோமயாகத்தை) செய்துமுடித்துத் தநஸம்ருத்தியாலும், ச்லாக்கியமான உணவுகளாலும் சுகிப்போம்.

---

மேலே கண்ட அநுவாகத்திற்கு ஆறுவது காண்டம் முதல் ப்ரபாடகத்தில் நாலாவது அநுவாகத்தில் ப்ராஹ்மணம் நிரூபிக்கிறதால் இந்தக் காண்டத்தையும் அந்தந்த அநுவாகத்தின் கீழே மொழி பெயர்த்தெழுதுகிறோம். கத்தில், காண்டம், ப்ரபாடகம், அநுவாகம், இவைகளை இலக்கத்தால்

காட்டி அந்தந்தப் பஞ்சாதியின் இலக்கத்தையும் அங்கங்கே [] இந்தக் கேட்டுக்குள் அச்சிட்டிருப்பதையும் காணலாம்.

Vi 1-4 தேவதா விஷயமான புத்தியை மநநம் செய்வோம், என்றார் இதனால்) யக்ஞத்தையே ம்ருதுவாகச் செய்கிறார். ஸுபாரா (நன்றாகக் கரையை அடைவிப்பதாக) எங்கள் வசத்திலிருக்கட்டும். (ஸர்வயக்ஞத்தையும் ப்ரகாசப்படுத்துகிற) நல்ல உஷஸ்காலத்தையே அடைகிறான். [4]

ப்ரம்ம வாதிகள், (மந்த்ரார்த்தங்களையும் ப்ரயோக க்ரமங்களையும் விசாரணை செய்யும் வித்வான்கள்)'' தீக்ஷையைச் செய்துகொண்டவன் க்ருகத்தில் ஹோமம் செய்ய வேண்டுமா செய்ய வேண்டியதில்லையா? என்று விசாரிக்கிறார்கள். (ஏனெனில்) ஹவிஸ்ஸால் தீக்ஷிதன் ஹோமம் செய்தால் யஜமானனையே ஹோமம் செய்வதாகும். செய்யாவிடில் ப்ரதிதினம் அனுஷ்டான ரூபமான யக்ஞ க்ரமம் விட்டுப்போம் (2-ம் மந்திரம்) மனதோடு பிறந்தவர்களும் மனதுடன் கலந்துநிற்பவர்களுமான தேவர்கள் என்றார் மனதோடு பிறந்தவர்களும் மனதுடன் கலந்துநிற்பவர்களுமானதேவர்கள் ப்ராணன்களே யாவர். அவைகளிலேயே மறைவாக ஹோமம் செய்கிறான். ஆனதால் ஹோமம் செய்ததுமல்ல செய்யாததுமல்ல.

தூங்கும் தீக்ஷிதனை ராக்ஷஸர்கள் கொல்ல ப்ரியப்படுவார்கள். அக்நிதான் [5] இராக்ஷஸர்களைக் கொல்பவர் (3-ம் மந்திரம்) 'அக்நியே, நீர் நன்றாய் விழித்திரும் நாங்கள் பயமில்லாமல் தூங்குவோம்' என்றார். இராக்ஷஸர்களை நாசம்செய்ய அக்நியைக் காவலாக வைத்துவிட்டுத் தூங்குகிறான்: எந்த தீக்ஷிதன் தூங்குகிறானோ அவன் வ்ரதத்தைப்பங்கப்படுத்துகிற கார்யத்தைச் செய்தவனாகவே ஆகிறான். (4-ம் மந்திரம்) அக்நியே நீர் வ்ரதத்தைபாதுகாக்கும் தேவர் என்றார் அக்நியே தேவர்களுக்கு வ்ரதத்தை காப்பவர் அவரே இந்த வ்ரதத்தை பரிஷ்காரம் செய்கிறார். 'மனுஷ்யர்களுக்குள் தேவர்,' என்றார் ஏனெனில் இவர் தேவனாக இருந்துகொண்டு [6] மனிதர்களுள் வ்ரதபதியாவார்.)'' நீர் யக்ஞங்களில் ஸ்துதி பெறுகிறீர்'' என்றார். இவரைத்தான் யக்ஞங்களில் ஸ்துதி செய்கிறார்கள்.

(5-ம் மந்திரம்) தூங்கும் தீக்ஷிதனிடமிருந்து இந்த்ரிய சக்தியும் தேவதைகளும் போய்விடுகின்றன. 'எல்லாத் தேவர்களும் என்னைச் சூழ்ந்து நிற்கிறார்கள்' என்றார் இவனை இந்த்ரியத்தோடும் தேவதைகளோடும் சேர்த்தே வைக்கிறான். இந்த யஜுஸ்ஸைச் சொல்லாவிடில் எவ்வளவு பசுக்களோடு தீக்ஷைசெய்துகொண்டானோ அவ்வளவு பசுக்கள் தானுண்டாகும். ''ஸோமனே, இவ்வளவு கொடு [7] மேன்மேலும் கொண்டு வாரும்'' என்றார் கணக்கில்லாத பசுக்களையே அடைகிறான், 'நீ ஸுவர்ணம்' எனது போகத்தின் பொருட்டு இரு என்றார் இவைகளை (ஹிரண்யம் முதலிய தக்ஷிணைகளைத்) தேவதைக்குத் தகுந்தபடி வாங்கிக் கொள்ளுகிறான்.

(6-ம் மந்திரம்) ''வாயுவுக்கு உன்னை வருணனுக்கு உன்னை,'' என்று இப்படி அதனைக்காட்டிக் கொடுக்காவிடில் (தக்ஷிணை) அதன் தெய்வங்களுக்

குச் சேராதாம்;தேவதைகளிடமிருந்தும் நீங்குவான். இவைகளைக் காட்டிக் கொடுத்தால்தக்ஷிணை அந்தந்த தேவதைகளை அடையும். தேவதைகளிடமிருந்து நீக்கப்படமாட்டான்.

7-ம் மந்த்ரம். "திவ்ய தீர்த்தங்களே தீர்த்தங்களின் பேரனே. (அக்நியே") என்றுர் உம்மிடத்திலுள்ள பரிசுத்தமானதும், யாகத்துக்குத் தகுதியானதும் தேவதையோடு கூடினதுமான பாதத்தைத் தாண்டமாட்டேன்" என்றே சொன்னுர். "மண்ணுலான அறுகாத நூல்வழியாகப் போகிறேன்" என்றுர் அணையைக் கட்டியே (நதியைக்) கடக்கிருன்.

---

காண்டம்.1 பிரபாடகம் 2 அநுவாகம் 3ற்குப் பிராஹ்மணம் மேலே காட்டப்பெற்றது. இனி யநுவாகத்திற்கு ஸாயணர் குறிப்பு வருமாறு:

இரண்டாவது அனுவாகத்தில் தீக்ஷையை வர்ணித்தார். தீக்ஷிதர் தேவயஜநம் என்ற யாகசாலையை ஸ்வீகாரம் செய்தால்தான் ஸோமம் வாங்குதல் முதலிய யாககார்யங்கள் அங்கே செய்ய சாத்தியமாகும் என்று இந்த மூன்ருவது அனுவாகத்தில் தேவயஜந ஸ்வீகாரம் வர்ணிக்கப்படுகிறது,அதன் ஸ்வீகாரத்துக்கு மேல் தேவயஜனத்தில் ஸோமக்ரயம்சொல்வதுஉசிதமானதால் முன்பே, இந்த அநுவாகத்தின் தொடக்கத்தில் வ்ரதபாநம் த்ரவ்யங்களைச் சம்பாதித்தல் இவைகளைச் சொல்வார்.

1-ம்மந்த்ரம் இந்தமந்த்ரத்தால் தீர்த்தத்தை ஆசமநம் செய்ய வேண்டுமென்று பௌதாயநரும், கைகளைச் சுத்தி செய்து கொள்ள வென்று ஆபஸ்தம்பரும்;

'ஸுபாரா' பதப்படி. நன்றுக அக்கரையை அடையும் (புத்தி) எனப் பொருளாணுலும் ப்ராம்மணத்தில் ஸகலயாககார்யத்தையும் தெரியப்படுத்திக் கொடுக்கும் மனே விளக்க மென்பர்.

2-ம் ம-ம்;இதைச் சொல்லி யஜமானனுக்குஅத்வர்யு சமஸம் என்ற பாத்திரத்தில் ஊற்றி வ்ரதம்பாலைக் கொடுக்க, அவர் அதை வலது புறத்தில் வைத்துவிட்டு பிறகு வ்ரதபானம் செய்கிருர்.

கண், காது முதலிய ப்ராணசக்திகளை அபிமானித்த தேவதைகள் க்ஷீரபானம் செய்து விராதாநுஷ்டாநம்செய்தவைங்களை உள்ளும் வெளியும் சுத்தி செய்து காப்பாற்றட்டும். இச்சக்திகள் பிறவியிலே அமையும். வ்யவகார காலங்களில் மனதோடு கலக்கும். ஏனெனில் ஒருவிஷயத்தில் கவனபுதைச் செலுத்தி னவனுக்குக் கண்களால் சமீபத்திலிருக்கும்விஷயங்களும்புலப்படாவாம். மனதின் சகாயம் பெற்ற காலத்துத் தன்தன் விஷயங்களில் கார்யங்களைச் செய்யத் தேர்ந்தவனுவன்;

3-ம் மந்த்ரம். இது படுக்கை மந்த்ரம். யஜமானன் தான் சயனம் செய்யுமுன் இதை ஜபிக்க என்று பௌதாயனரும் ஆஹவநீயாக்நியை வேண்டிக் கொள்ள என ஆபஸ்தம்பரும் கூறுவர்.

4-ம் மந்த்ரம். அத்வர்யு அர்த்த ராத்ரியில் வேகமாய் வந்து, யஜமானனிடத்தில் விழித்துக் கொள்ளும்போது படிக்கும் மந்த்ரம்.

5-ம் மந்த்ரம். இதனால் த்ரவ்யங்களைக் கொண்டுவருபவர்களைப் பார்த்துத்தனக்குத்தடை சொல்ல மாட்டான் என்ற நிச்சயமவனிடத்தில் உளதோ அவனை அனுப்புவார். வருபவனைப் பார்த்து 'ஸோமனே, இவ்வளவு கொடும்' என்றது முதல் ஜபிக்க என பௌதாயனர். "எல்லாத்தே... நிற்கிறீர்கள்" என்று விழித்துக்கொண்டவுடன் ஜபிக்கவும், 'பூஷதேவன் த்ரவ்யத்தோடும் என்று பரிஜநங்களை ஏவவும். நீ ஸுவர்ணம்----என்று அந்தந்தப் பண்டங்களை வாங்கிக்கொள்ளவும் என்று ஆபஸ்தம்பர்.

6-ம் மந்த்ரம். கோக்களில் நஷ்டமாவதும் மரணத்தை அடைவதும் வாயுவுக்கென்றும், நீரிலாவது பாசத்தாலாவது போனவைகளை வருணனுக்கென்றும், கைகால் ஒடிந்தோ குழியில் விழுந்தோ போனவைகளை நிர்ருதிக்கென்றும், பாம்பு, புலிகளால் அடிபட்டவை ருத்ரனுக்கென்றும் பங்கிட்டுச் சொல்வார் என்றது கல்பம்.

7-ம். மந்த்ரம் யஜமானன் போகும் வழியில் நதியால் தடைப்படும் போது இம்மந்திரத்தைச் சொல்லிச் சலத்தில் இறங்கிச் செல்லலாம் அல்லது அணைபோட்டு அதன்மேல் போகலாம், என பௌதாயனர். ப்ரயாணத்தில் 'திவ்ய தீர்த்தங்களே' என்று ஜலத்தில் இறங்கவேண்டும். "மண்ணால்————கிறேன்" என்று சொல்லிக்கொண்டு அக்கரை யேறும் வரை மண் கட்டியைக் கரைக்கவேண்டும் என்பர் ஆபஸ்தம்பர்.

ஸா— ஏதாவது காரணத்தால் தேவயஜநமல்லாத இடத்தில் தீக்ஷை செய்துகொண்டால் அப்போது தனியாக அரணிகளில் அக்நியை ஆரோபித்து தேவயஜநத்துக்குப் போகும் மத்தியில் நதியை அடைந்தால் அதில் இறங்கவேண்டும்.—

"ஹவிஸ்ஸுக்குக்காரணம்",— ஜலத்தாலேதான் பயிர் உண்டாவதும் நெல்லால் ஹவிஸ் ஆவதுமாம் "இந்திரிய சக்தி" ஜலபானத்தாலல்லது இந்திரிய சக்தி உண்டாகாது."விசேஷ ஆனந்தம்" தாகசாந்தி என்ற ஆனந்தத்திற்குத் தீர்த்தமே காரணம்.

8-ம் மந்திரம் ரதத்திலேறி இறங்க வேண்டிய இடத்தில் இறங்கிப்பிறகுமூன்றும்பாகத்தால்உதிக்கும் ஸூர்யனை உபஸ்தானம் செய்கிறான் (பூஜிக்கிறான்) எனபௌதாயநரும் மூன்றும் மந்த்ரங்களையும் ரதத்திலேறிப் போக என்று விநியோகம்என ஆபஸ்தம்பரும் கூறுவார்கள்.

அர்த்தத்தை அநுசஸரித்துப்பார்க்க. 7-ம்மந்த்ரத்திற்கு முந்தியே இதைக்கொள்ள வேண்டும்.

9-ம் மந்த்ரம். யாகம் செய்யவேண்டிய இடத்திலிறங்கி இதோ வந்தோம் என்று சொல்லமந்த்ரம்—கல்பம்.

8,9 மந்த்ரங்களின் பொருள் ஸ்பஷ்டம் என்று ப்ராஹ்மணம் வ்யாக்யானம் செய்யவில்லை 3 1 1-ல் ஔபாநுவாக்ய காண்டத்தில் தீக்ஷிதநியமங்கள் சொல்லிக்கொண்டு வருமிடத்தில் வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. ப்ருஹஸ்பதியின் உபயோகத்தையும் சொல்லுகிருர்.

8-ம் மந்திரம்"அக்நியே தீக்ஷிதனுடைய தேவதை (அக்நிஹோத்ர) ஸ்தாநத்திலிருந்து போகும்போது அக்நி மறைபட்டுப் போனதுபோல் இந்த (தீக்ஷிதனே)மார்க்கத்தில் கொல்லராக்ஷசர்கள் சக்தியுள்ளவராவர் "ப்ரசஸ்தமானஉன்...முன்போவர் என்ருர் தேவர்கள் சக்திதான்பிருகஸ்பதி, அவரையே பிடித்துக்கொள்ளுகிருன் அவர் இவனே (ஜீக்ரமதையாகச்) சேர்ப்பிக்கிருர்.'(3-1-1)

9-ம் மந்த்ரத்திற்கு 3-1-1ல் ப்ராம்மணத்தில் வ்யாக்யானம் செய்து இருக்கிறது.

"ப்ருதிவியிலுள்ள யாகசாலைக்கு இதோ வந்தோம்" என்ருர்"யக்ஞம் செய்கிறவன் யாகசாலை ப்ரதேசத்திற்கே வருகிருன் முன்பு இதிலேயே எல்லாத் தேவர்களும் திருப்தி அடைந்தார்கள்" என்ருர். ப்ராம்மணர்கள் எந்த தேவயஜநத்தை அடைந்திருக்கிருர்களோ அதையே தேவர்களும் வாஸஸ்தானமாக வைத்துக் கொண்டிருக்கிருர்கள். ருக், ஸாமங்களாலும் யஜுர் வேதமந்த்ரத்தாலும் செய்து முடித்து' என்ருர்; ஏனெனில் யக்ஞம் செய்கிறவன் ருக், ஸாமங்களாலும் யஜுஸ்ஸாலும் செய்து முடிக்கிருன்.

"தனஸம்ருத்தியாலும் ச்லாக்கியமான உணவுகளாலும் சுகிப்போம்" என்ருர் ஆசீர்வாதத்தையே கோறுகிருன்.

---

## அநுவாகம் 4.

ஸோமயாகத்தில் உபயோகப்படுகிற ஸோமலதையை வாங்கவேண்டியதற்கு ஸோமக்ரயணி ( ஸோமலதையை

விலைக்கு வாங்கக்கூடிய கோ ) விஷயமான ஹோமாதிகள் சொல்லும் அநுவாகம்:—

1. காந்தியுள்ளோனே, உன்னுடைய சரீரம் இது (ஜுஹு) இது (நெய்) உன் தேஜஸ். சரீரத்தோடு தேஜஸ் சேரட்டும் காந்தியை அடையும். (அல்லது ப்ராம்மணத்தை ஒட்டி இதற்கு அடியில்கண்டபடி பொருள் கூறுவர்.)

அக்கினியே, இந்த(ஆஜ்யமே)உமது சரீரம், இந்த (ஹிரண்யமே) உமது தேஜஸ் காந்தியை அடையும்.

2. (ஸோமக்ரயணியைப்பார்த்து) (வாக்ரூபமான) நீ வேகமுள்ளவள்; மனதால் நியமிக்கப்பெற்றவள், யக்ஞத்திற்கு இஷ்டமானவள்—

இப்படி வீண்போகாமல் ப்ரேரணையைச்செய்யக்கூடிய உன்னை ப்ரேரணை செய்வதற்கு வாக்கியமத்தை அடையக் கடவோம். — ஸ்வாஹா.

3. [ஆஜ்யத்தை அல்லது ஹிரண்யத்தைப் பார்த்து] காந்தியுள்ளவன் நீ; மரணமற்றவன், எல்லாத்தேவர்களுக்கும் ஹவிஸ்ஸாகவும் இருக்கிறாய்.

4. சூரியனுடைய கண்ணையும், அக்நியின் கருவிழியையும் பெற்றிருக்கிறேன். (சூர்யனே), நாநாவர்ணக்குதிரைகளால் போகிறதாலும் (அக்நியே), விசேஷஞான தேஜஸால் விளங்குகிறவனானதாலும், (ரக்ஷஸ்களை ஒழிப்பதற்கு உங்களை அடைந்தேன்.)

5. (வாக்தேவதையின் உருவான ஸோமக்ரயணியைப் பார்த்து) சித் நீயே, மனதுநீயே, புத்தியும்நீயே, தக்ஷிணையும் நீயே யக்ஞத்துக் குரியவனும் நீ, க்ஷத்ரியசக்தி வாய்ந்தவளும் நியே, இருபுறமும் சிரஸுள்ள அதிதிதேவியும் நீயே, போவதிலும் வருவதிலும் எங்களுக்கு ஜயம்பெறச் செய். — மித்திரன்உன்னைப்பாதத்தில்கட்டட்டும், பூஷன் மார்க்கங்களைக் காக்கட்டும், அத்யக்ஷனை இந்த்ரனுக்காக உன்னை (உனது) மாதா அநுமதிகொடுக்கட்டும், பிதாவும்ஒருவயிற்று ஸஹோதரனும் ஸகாவும், மந்தையைச் சேர்ந்தவனும் அப்படியே அநுமதிகொடுக்கட்டும் , தேவியேஇத்

தேவனிடம்வருகு, இந்த்ரனுக்காக ஸோமத்தை அடை, இந்த்ரனுடைய வழியால் ருத்ரன் உன்னைத் திரும்பி வரச்செய்யட்டும், ஸ்வஸ்தி. (க்ஷேமம்). ஐச்வர்யத்தோடு ஸோமனை ஸகாவாகப் பெற்றுத் திரும்பிவா.

ஆறாவது காண்டம், முதல் ப்ரபாடகம் ஐந்தாவது ப்ரச்னத்தில், 1. 2. 4க்கு நிரூபணம் செய்வதற்கு முன்பு, ப்ராயணீயை. (ஸோமயாகத்திற்குபூர்வாங்கமான ஆஹுதிகள் ; ஸோமக்ரயணீ, (ஸோமலதையை வாங்க உபயோகப்படும் கோ) இவைகளைப்பற்றிச் சொல்லுகிறார்:—

தேவயஜனத்தை (யாகம்செய்யவேண்டிய இடத்தைத்) தீர்மானித்துக்கொண்டு திக்குகளை அறியவில்லை ஒருவர் மற்றொருவரிடத்தில் போய் உன்னால் தெரிந்துகொள்வோம். உன்னால் தெரிந்து கொள்வோம் என்றார்கள். அதிதியிடம் சேர்ந்தார்கள், உன்னால் தெரிந்துகொள்வோம் என்றார்கள். அவள் ஓர் வரத்தை வேண்டுகிறேன் என்றாள். 'உங்கள்யாகங்களில் ஆரம்பத்திலும் முடிவிலும் என்னையே தேவதையாக வைக்கவேண்டும்' ஆதலாலே யாகத்தில் ஆரம்ப யாகமும், (ப்ராயணீயயாகம்) உதயனீய, யாகமும் (அவஸான யாகமும்) அதிதி தேவதையைச் சேர்ந்தது.

பஞ்ச தேவதைகளையும் பூஜிக்கிறார், திக்குக்கள் ஐந்தாம். (ஆனதால்) திக்குக்களை அறிவதன் பொருட்டு ஆகுமாம் [1] பங்க்தி என்ற சந்தஸ்பஞ்ச அக்ஷரங்களுள்ளது, யக்ஞம் ஐந்துகளானது. யக்ஞத்தையேஅடைகிறான். பத்யாஸ்வஸ்தியைப்பூஜித்தார்கள், அதனால்கீழ்த்திசையை அறிந்து கொண்டார்கள். அக்னியால் தக்ஷிண திக்கையும் ஸோமனால் மேற்கு திக்கையும் ஸவிதாவால் வடக்கு திக்கையும் அதிதியால் உச்சியையும் அறிகிறார்கள்.

வழியில் (வழிகாட்டுவதில்) ஸமர்த்தையான ஸ்வஸ்தி (தேவதையைப்பூஜிக்கிறான் அவனால் கீழ்த்திசையை அறிந்து விடுகிறான் பத்யாஸ்வஸ்தி பூஜைக்குப் பிறகு அக்னீஷோம (அக்னி ஸோம)தேவதைகளை பூஜிக்கிறான் எனெனில் இவர்கள்தான் யக்ஞத்திற்கு கண்களாம் அவர்களாலேயே பார்க்கிறான் [2] அக்னீஷோமர்கள் பூஜைக்குப் பிறகு ஸவித்ரு தேவதையைப் பூஜிக்கிறான். ஸவித்ரு தேவதையால் தூண்டப்பட்டே பார்க்கிறான்: ஸவித்ரு தேவதை பூஜைக்குப் பிறகு அதிதியை ப்பூஜிக்கிறான் இந்த அதிதி தேவதையே இந்த (பூமி). இதில் நின்று கொண்டே பார்க்கிறான் அதிதி பூஜைக்குப் பிறகு மருத் தேவதாகமான ருக்குக்களை படிக்கிறார் எனெனில் மருத்துக்கள் தான் தேவர்களுடைய ப்ரஜை. ஒழுங்கு பெற்ற தேவப்ரஜைகளைப்பின்பற்றி மனுஷ்ய ப்ரஜைகளை ஒழுங்கு படுத்துகிறான் மருத்தேவதாகமன ருக்குக்களைப் படித்தது ப்ரஜைகளின் ஒழுங்குக்காகவே.

ப்ரஹ்மவாதிகள், ப்ராயணீயம் ப்ரயாஜத்தோடும் அனுயாஜமில்லாமலும் செய்யப்பட வேண்டும். உதயநீயம் அனுயாஜத்தோடும் [3] ப்ரயாஜமில்லாமலும் செய்யப்பட வேண்டும். இப்படிச் செய்வதே ப்ரயாஜங்களாம் இவைகளே அனுயாஜங்கள் அதே யாகத்தின் முறை என்பார்கள்.

ஸா — முதலில் யஜிக்க வேண்டிய ஸமிதாதி பேர்கள் வாய்ந்தன ஐந்து ப்ரயாஜங்கள். கடைசியில் பர்ஹிராதிபேர்கள் வாய்ந்தன மூன்று அனுயாஜங்கள்.

இப்படிச் செய்வது தகாது. ப்ரயாஜங்கள் ஆத்மாவே (தானே) அநுயாஜங்கள் ப்ரஜைகள். ப்ரயாஜங்களை விட்டால் தன்னை விட்டதாகும். அநுயாஜங்களை விட்டால் ப்ரஜைகளை விட்டதாகும். முழுவதும் யக்ஞம் செய்யப்படாதிருத்தலால் யக்ஞம் கெட்டுவிடும் யக்ஞம் கெட யஜமானன் கூடக் கெடுவான் (4) ப்ரயாஜத்தோடும் அனுயாஜத்தோடுமே ப்ராணீயத்தைச் செய்யவேண்டும் (அப்படியே) ப்ரயாஜத்தோடும் அனுயாஜத்தோடுமே உதயநீயத்தையும் செய்ய வேண்டும் தன்னையும் கெடுத்துக் கொள்ள மாட்டான். ப்ரஜையும் யக்ஞமும் யஜமானனும் கெடுவதில்லை. ப்ராயணீய யாக ஸம்பந்தமுள்ள (சரு பாத்திரத்தை அலம்பாமல்) பாத்ரத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும் அன்னத்தில் உதயநீயத்தை ஹோமம் செய்வான். அதுதான் யக்ஞத்தின் முறை (ஸர்த்தி) ப்ராயணீயத்தினுடை யாஜ்யங்களை உதயநீயத்தின் யாஜ்யங்களாகச் செய்வானேல் இந்த உலகை விட்டு (ஸ்வர்க்க) ஆரோஹணம் செய்வன் உடனே மரிப்பன். ப்ராயணீயத்தின் புரோனுவாக்யங்களை உதயநீயத்தின் யாஜ்யங்களாகச் செய்வோன் இந்த லோகத்தில் ப்ரதிஷ்டை அடைகிறான்.

கத்ரூவும் ஸுபர்ணியும் தங்கள் ரூபங்களைக் குறித்து வாக்குவாதம் செய்தார்கள். கத்ரூ என்பவள் ஸுபர்ணியை ஜயித்தாள் மேலும், இந்த இடத்திலிருந்து மூன்றாவது தேவலோகத்தில் ஸோமலதை இருக்கிறது அதைக் கொண்டுவா. அதனால், உன்னை விடுவித்துக் கொள்.'' என்றாள். கத்ரூ என்பவள்தான் இது. (பூலோகத்தைக் காட்டி) ஸுபர்ணி என்பவள் இது. (வானத்தைக் காட்டி) சந்தஸ்கள் ஸுபர்ணியின் புத்ரர்கள் அவள் (ஸுபர்ணி) ''இதற்காகவே மாதா பிதாக்கள் புத்ரர்களைப் பெற்று வளர்க்கிறார்கள். இந்த இடத்திலிருந்து மூன்றாவது தேவலோகத்தில் ஸோமலதை இருக்கிறது அதைக் கொண்டுவா. என ஸுபர்ணி எனக்குச் சொல்லியிருக்கிறாள் அதனால் உன்னை விடுவித்துக் கொள். (1) என்று சொன்னாள் கத்ரூ. ஜகதி என்ற பதினான்கு அக்ஷரங்களுள்ள சந்தஸ் உயரக் கிளம்பிற்று. அது (ஸோமலதை) பெறாமல் திரும்பியது. அதற்கு இரண்டு அக்ஷரங்கள் குறைந்தன. பசுக்களோடும், தீக்ஷையோடும் திரும்பியது. ஆகையால், சந்தஸ்களுக்குள் ஜகதி பசுக்களை மிகுதியாக உடையவள் ஆகையால் பசுவுடையவனைத் தீக்ஷையானது அண்டியிருக்கிறது. பதின்மூன்று அக்ஷரங்களுள்ள திருஷ்டுப் சந்தஸ் கிளம்பிற்று. அதுவும் பெறாமல் திரும்பியது. அதற்கும் இரண்டு அக்ஷரங்கள் குறைந்தன அது தக்ஷிணைகளோடும் தப

ஸோமம். திரும்பியது [2] ஆகையால், த்ருஷ்டுப்பினுடைய ஸ்தானமாகிய மத்தியான்ஹ ஸவனத்தில் தக்ஷிணைகள் கொண்டுவரப்படுகின்றன. ஒருவன் தன் சொத்தைக்கொடுக்கிறதுதான் ஸரியான தபஸென்பார்கள். நாலு அக்ஷரங்களுள்ள காயத்ரீச்சந்தஸ் (அஜத்தோடு) கிளம்பிற்று அது தன் ஜ்யோதிஸால் அஜைத் தடுத்துக்கொண்டது. ஆதலால் ஆட்டுக்கு அஜம் என்று பெயர். (அஜ் என்ற பகுதிக்கு தடுத்துக்கொள் என்பதுபொருள்). அந்த காயத்ரீசந்தஸ் ஸோமத்தையும் நான்கு அக்ஷரங்களையும் கொண்டுவந்தது: (இப்படி) எட்டு அக்ஷரங்களுள்ளதாயிற்று [3]

Vi-1-6. ப்ரம்மவாதிகள் 'எந்தக்காரணத்தால் சந்தஸ்களுக்குள் சிறியதான (குறைந்த அக்ஷரங்களுள்ள) காயத்ரீ யக்ஞமுகமான (ப்ராதஸ்ஸவனத்தை) ப்பெற்றது? என்றார்கள். இந்த லோகத்திலிருந்து ஸோமத்தைத் கொண்டுவந்ததால்தான் யக்ஞமுகத்தை அடைந்தது. இதனாலேயே (சந்தஸ்களுள்) அதிக தேஜஸோடு கூடினதாக இருக்கிறது இரண்டு கால்களாலும் இரண்டு ஸவனங்களையும் முகத்தால் (-வாயால்) ஒன்றையும் பிடித்துக்கொண்டுவந்தது. முகத்தால் பிடித்துக் கொண்டிருந்ததை அது உறிஞ்சிற்று. ஆதலால் இரண்டு ஸவனங்கள் (காலை ஸவனமும் மாலை ஸவனமும்) சுத்தஸோமத்தாலாகும். ஆதலாலே மூன்றாம் ஸவனத்தில் ஸோமத்தின் கசண்டைப்பிழிகிறார்கள். அதை உறிஞ்சினதாக எண்ணுகிறார்கள் [4] பாலை (அந்தஸோமம்) ரஸவத்தாக ஆவதற்கு விடுகிறார். இதனால் அதைச் சக்தியுள்ளதாகச் செய்கிறார். எடுத்துக்கொண்டு வரப்பட்ட ஸோமத்தை விச்வாவஸு என்ற கந்தர்வன் திருடிக்கொண்டு போய்விட்டான், மூன்று இரவுகளாகத்திருடப்பட்டிருந்தன. ஆதலால் வாங்கி மூன்று நாளைக்கு ஸோமத்தை (அப்படியே) வைத்து விடுகிறார்கள. அந்தத் தேவர்கள், 'கந்தர்வர்கள் ஸ்த்ரீ ஆசையுள்ளவர்கள், ஒருஸ்திரீயைக் கொடுத்துத் திருப்பிவிடுவோம்.' என்றார்கள். அவர்கள் வாக்கை ஒருவயது ஸ்த்ரீயாக மாற்றி அவளைக்கொடுத்துத் திருப்பிக கொண்டார்கள். அவள் சிவந்த மான் ரூபத்தைத்தரித்துக் கந்தர்வர்களிடமிருந்து ஓடிவிட்டாள் [5 இதுதான் சிவந்தமான் உண்டான காரணம். தேவர்கள் 'உங்களிடமிருந்தும் ஓடிவிட்டாள். எங்களிடமும் வரவில்லை. நாமிருவரும் கூப்பிடுவோம்' என்றார்கள். கந்தர்வர்கள் ஒரு மந்த்ரத்தைச் சொன்னார்கள். தேவர்கள் பாடினார்கள். அவளும் பாடிக்கொண்டிருந்த தேவர்களது ஸமீபத்தில் வந்தாள். ஆதலால் பாடுகிறவனிடத்தில் ஸ்த்ரீகள் ஆசைப்படுகிறார்கள். இதை அறிந்தவனிடத்திலும் ஸ்த்ரீகள் ஆசையை அடைகிறார்கள். ஆகையால் ஒரு குலத்தில் இப்படித் தெரிந்த மனிதன் இருந்தால் அதில்தான் கன்யகைகளைக் கொடுப்பார்கள். வேறு எவ்வளவு குணங்கள் அமையினும் (இப்படித்தான் கொடுப்பார்கள்.) [6]

ஒருவருஷக் கிடாரிப் பசுக்கன்றைக்கொண்டு ஸோமத்தை வாங்குகிறான் இதை ஸர்வமான வாக்காலும் வாங்குகிறான். ஆகையால் மனிதர்கள் ஒருவயதிற்குப் பிறகு பேசுகிறார்கள். கோணற் கொம்பு இல்லாததும் காது அறுகாததும் ஒரு கண்ணுடையதல்லாததும் சொறி இல்லாததும் அங்கஹீனமில்லாததுமான பசுவைக் கொண்டு வாங்குகிறான். எல்லா அவயவமும் வாய்ந்த பசுவைக் கொண்டே வாங்க வேண்டும். வெள்ளைப் பசு

வைக்கொண்டு வாங்கினால் யஜமானன் வெள்ளைக்குஷ்டமுள்ளவனாகிறான். கருப்பு ஆனால் அநுஸ்தரணீ (அதாவது ஒருவன் மரிக்கும் போது கொல்லப்படும் பசு) ஆகிவிடும். யஜமானன் ஆயுஸ்ஸை இழந்து விடுவான். இரண்டுநிறமும் கலந்ததானால் விரோதியை ஹத்திசெய்யக் கூடியதாயினும் அவன் சத்ருவை ஜயிக்கலாம். அவனையும் சத்ரு ஜயிக்கலாம். சிகப்பு நிறமானதும் மஞ்சள் நிறமான கண்ணுடையதுமான பசுவைக் கொண்டு வாங்குகிறான். இதே ஸோமத்தின் ரூபம். அதன் தெய்வத்தைக் கொண்டே வாங்குகிறான்.

Vi-1-7-(1-2-4) ஸோமக்ரயப்ரகாரம்.

அது ஹிரண்யமாக (தங்கமாக) ஆயிற்று. ஆதலால் ஜலங்களால் ஹிரண்யத்தை சுத்தம் செய்றார்கள் ப்ரஹ்மவாதிகள் "எக்காரணத்தால் எலும்பில்லாதரேதஸ்ஸிலிருந்து ப்ரஜைகள் எலும்புகளுள்ளனவாகவே பிறக்கின்றனர்?" எனக்கேட்கிறார்கள். ஹிரண்யத்தை நெய்யில் வைத்து ஹோமம் செய்யும் காரணத்தாலேயே எலும்பில்லாததிலிருந்து ப்ரஜைகள் எலும்புகளுள்ளனவாகவே பிறக்கின்றனர். க்ருதம் (உருக்கின நெய்) என்ற இதுவே அக்நியின் ப்ரியமான இடம். இந்த ஹிரண்யமே, தேஜஸ், ப்ரகாசம் பொருந்தியவரே, இதே உம் சரீரம். இது உமது தேஜஸ். என்று இந்த அக்நியை தேஜஸுள்ளவனாகவும் சரீரத்தோடு கூடினவனாகவும் செய்கிறான் [1] பரிஷ்காரம் செய்கிறான்.

ஹிரண்யத்தைக்கட்டாமல் வைத்தால் ப்ரஜைகளின் கருக்கள் நழுவிவிடும். கர்ப்பம் தரித்து நிற்பதற்கே கட்டிவைக்கிறான். ப்ரஜைகள் உண்டாவதற்காக அவிழ்க்கக்கூடாதபடி முடித்துப்போடுகிறான்.

ஸோமத்தை க்ரயத்துக்கு வாங்கி உதவும் பசு வாக்கே. 'வேகத்தோடு கூடியவன்' என்றான். எதை மனதால் வேகமுள்ளதாகச்செய்கிறானோ அதையே வாக்கால் சொல்லுகிறான். 'மனதால் நியமிக்கப்பெற்றவன்', என்றார், மனதால்தான் வாக்கு க்ரஹிக்கப்படுகிறது. 'விஷ்ணுவுக்குப்பிரியமுள்ளவள்,' என்றார். [2] விஷ்ணுவே யக்ஞம். யக்ஞத்திற்கு ப்ரியமுள்ளதாகவே செய்கிறான். 'அத்தகைய அமோகமாய் எவும் சக்திவாய்ந்த உன் தூண்டுதலால்' என்றார். சூரியனால் ப்ரேரேபணை யடைந்த வாக்கையே அடைகிறான்.

அந்தந்தக் காண்டம் (ப்ரகாணம்) செய்யப்படும்போது யக்ஞத்தை ராக்ஷஸர்கள் கெடுக்க எண்ணுகிறார்கள். அக்நி, ஸூர்யன் இவர்களதுவழியே ராக்ஷஸர்கள் கெடுக்கவொண்ணாத மார்க்கம். 'ஸூர்ய தேவதாகமான கண்ணையும் அக்நி தேவதாகமான கருவிழியையும்' என்றார். எது இராக்ஷஸர்களால் பாதிக்கப்படாத வழியோ, அதிலேயே போகிறான். [3]

ஸோமத்தை க்ரயத்திற்கு வாங்க உதவிய பசு வாக்தேவதையே. 'நீயே சித்தம், நீயே மனஸ்' என்றார். அவளைக் [கற்பிக்கிறான்] சிட்ஷிக்கிறான். ஆதலால் ப்ரஜைகள் சிஷ்டர்களாக (கல்விபெற்றவர்களாக) உண்டாகிறார்கள்.

'சித் நீ' என்றார். எதை மனதால் சிந்திக்கிறானோ அதையே வாக்கால் சொல்லுகிறான். 'மனஸ்நீ' என்றார். ஏனெனில் மனதால் எதை அறிகிறானோ அதையே செய்கிறான் 'நீயேத்யானம்' என்றார். ஏனெனில் எதை ஒருவன் மனதால் தியானம்செய்கிறானோ அதையே வாக்கால் சொல்லுகிறான். 4] தக்ஷிணை நீ'; என்றார். ஏனெனில் இதுதான் (கோவைக்காட்டி )தக்ஷிணை 'நீ யக்ஞத்தைச்சேர்ந்தவன், என்றார். ஏனெனில் இந்த (கோவையே) யாகத்துக்குத் தகுதியாகச் செய்கிறார், 'க்ஷத்திரியாம்சத்தைச் சேர்ந்தவள்,' என்றார். ஏனெனில் அவள் க்ஷத்ரியாம்சத்தைச்சேர்ந்தவள் தான். 'இருபுறமும்தலையையுடைய அதிதிதேவதை,' என்றார், யக்ஞங்களில் ப்ராயணீயமும் உதயநீயமும் அதிதிதேவதாகமானதாலேயே அவ்வாறு சொன்னார். அது கட்டப்படாமலிருந்தால் கட்டுக்கு அடங்காதது ஆகும். காலில் கட்டினால் அபாக்ருத்தியத்துக்குத் தகுதியான பசுவாகும். யஜமானனும் ஆயுள் இழந்தவனாவான். [5] அதன் காதுகளைப்பிடித்துக்கொண்டால் வ்ருத்ரஹனுக்குச்சொந்தமாகும். யஜமானன் அங்யனை இம்சிப்பான், அல்லது, அங்யன் யஜமானனை இம்சிப்பான். 'மித்ரன் காலில் உன்னைக்கட்டட்டும் என்றார் மித்திரன் தேவர்களுக்கு மங்களத்தைச் செய்பவன் ஏனெனில், அவன் உதவியாலேயே காலில் (அந்தப்) பசுவைக் கட்டுகிறான். 'பூஷன் வழிகளைக்காக்கட்டும் என்றார், பூஷன் என்பவரே இந்த உலகம். ஏனெனில் இந்த (உலகைப்) பெறுவதற்கு இந்தப் பசுவையே இந்த (உலகத்துக்குத்) தலைவியாகச் செய்கிறான் 'அத்யக்ஷனை இந்த்ரனுக்கு என்றார் இந்த்ரனையே அத்யக்ஷனாகச் செய்கிறான். [6] 'உன்னை மாதாவும் உன் பிதாவும் அநுமதிக்கட்டும் என்றார்' அநுமதிபெற்றே இதனை வாங்குகிறான். 'ஏ.தேவீ, தேவதைகளிடத்தில் போ' என்றார். இவள் தேவியே (ஆவாள்) ஸோமனே தேவன். 'இந்த்ரனுக்கு ஸோமத்தை' என்றார்' இந்திரனுக்காகவே ஸோமம் கொண்டுபோகப்படுகிறது. இந்த யஜுஸைச் சொல்லாவிடில் ஸோமத்தை வாங்குவதற்கான பசு ஓடிப்போய்விடும் "ருத்ரன் உன்னை இவ்விடத்திற்கு நடத்திவரட்டும்", என்றார்.ருத்ரன் தேவர்களுக்குள் க்ரூரராம். [7] அதனை இவ்விடம் நடத்திவருவதற்கு ருத்ரனை அதற்குப் பின்னால் ஸ்தாபிக்கிறார். 'ருத்ரஸ்ய' என்ற யஜுர்மந்த்ரத்தை ஜபிக்கும் பொழுது கொடூரமான கார்யத்தைச் செய்வது போலாம். 'மித்ரனுடைய வழியால்' என்றார் இது சாந்தியின் பொருட்டு 'ஸோமக்ரயணியால் வாங்கப்பட்டது வாக்கினால் வாங்கப்பட்டதே ஆகும். ஐச்வர்யத்தோடு ஸோமனைத்தோழனாகக்கொண்டு மறுபடியும் வா என்றார்' வாக்கைக்கொடுத்து வாங்கி, மறுபடியும் தன் சரீரத்தில் வாக்கை ஸ்தாபித்துக்கொள்ளுகிறான். எவன் ஒருவன் இவ்வாறு அறிகிறானோ அவனுடைய வாக்கு ஒருக்காலும் அழியாது.

Vi-1-8. (1-2-5) ஸோமக்ரயணியின் அடிச்சுவடுகளிலுள்ள மண்ணை எடுக்க. மந்த்ரத்தின் நிரூபணம்.

ஆறு அடிகள் பின்தொடருகிறார்; வாக் (தேவதை) ஆறுநாளைக்கு மேல் பேசுகிறதில்லை. ஸம்வத்ஸரத்தின் வழியில் (அளவில்) எவ்வளவு வாக்கோ அவ்வளவு வாக்கைப் பெறுகிறான். ஏழாவது அடியில் ஹோமம் செய்கிறான், சக்வரீக்கு ஏழுகால்கள். சக்வரீயே பசுக்கள், பசுக்க

ஜோயே பெறுகிறான். ஏழு, நாட்டுப் பசுக்கள். ஏழு, காட்டுப் பசுக்கள். இவ்விரண்டு வர்க்கங்களையும் அடைய ஏழுசந்தஸ்கள் உள்ளன. 'நீதான் ......... நீதான் ருத்ரை' என்றார். இவன் உருவத்தையும், இவன் மஹிமையையும் விரித்துச் சொன்னார். [1] "ப்ருஹஸ்பதி இந்த ஸோமமான இடத்தில் சாந்தவஹிக்கச் செய்யட்டும்" என்றார். தேவர்களுள் ப்ருஹஸ்பதிதான் ப்ரஹ்மசக்தி(மந்த்ரம்) ப்ரஹ்மத்தாலேயே இவனுக்குப் பசுக்களை அடைவிக்கிறான். 'ருத்ரன், வஸுக்களோடு அனுமதி யளிக்கட்டும்.' என்றார் இது ரக்ஷணைக்காக.

இனி இந்நான்காம் அநுவாகத்திற்கு ஸாயணர் குறிப்பு வருமாறு:

மூன்றும் அநுவாகத்தில் தேவயஜநத்தை ஸ்வீகாரம் செய்தார். அந்த யாகசாலையிலேயே ஸோம யாகத்திற்கு உபயோகமாகும் ஸோமத்தை வாங்க ஸோமக்ரயணீ விஷயமான ஹோமாதிகளை இந்த 4-வது அநுவாகத்தில் சொல்வார். 'த்ருவை' என்ற ஆஜ்யபாத்ரத்திலுள்ள ஆஜ்யம், ப்ராயணீயைசம்பந்தமானது. இதாலேஸோமக்ரயணியைப்பார்த்துக்கொண்டுஹோமம்செய்யவேண்டியது.

2 (6 1-5) 'பஞ்ச, தேவதைகளையும் பூஜிக்கிறார்' — அதிதி ப்ரதான தேவதை. மற்ற நாலு பேர்கள் அங்கதேவதைகள்.—

(2) மனுஷ்யர்களுக்குள் வைச்யர்கள் போலவே, தேவர்களுள் 499 பெயர்கள், ஏழுகணங்களான மருத்துக்கள் தனத்தை ஸம்பாதிப்பவர்கள்.

கத்ரு, ஸுபர்ணீ என்ற ஸபத்நிகள், தோல்வி யடைந்தால் தாஸியாக வேண்டியதென்று பணயம் வைத்து 'என்ஸௌந்தர்யந்தான் சிலாக்கியமானது' என்று வாக்வாதம் செய்தார்கள் அப்போது மத்தியஸ்தர்கள் கத்ருவுக்கு ஜயத்தைச் சொன்னார்கள் ஸபத்நியை தாஸியாக அடைந்து, தானே விடுவிப்பதற்கு உபாயம் சொன்னாள்.

(மூன்றுவது லோகம்) மஹஸ், ஜனோலோகம், தபோ லோகம், ஸத்யலோகம் என த்யு சப்தத்தால் சொல்லப்படும்.

காயத்ரீ முதலிய சந்தஸ்களுக்கு ஸ்வேச்சையால் சரீரத்தை எடுத்துக் கொள்ளும் சக்தி உண்டு ஆகையால் புத்ராளகச் சொன்னேன்.

ஆதியில், ஜகதி பெரியவளுதலால் முயற்சி செய்தாள். பதினான்கு அக்ஷரங்களுள்ள ஜகதி த்யுலோகம் போய் ஸ்வான, ப்ராஜன் முதலிய ஸோம ரக்ஷகர்களுடன் சண்டை செய்து ஸோமத்தை அடையாமல் அக்நீஷோமீயம், ஸவநீயம் அநூபந்த்யம் (யூபஸ்தம்பத்தில் வதத்திற்காகக் கட்டப் படுவது) என்ற பசுக்களோடும் இஷ்டியைச் சாதிப்பதுமான தீக்ஷையையும் பிடித்துக் கொண்டு திரும்பி வந்தாள்.

தபஸ்-ஆகாரத்தை விலக்கல், முஷ்டிபந்தம், வாக்யமனம், மெண்ணை யால்அப்யங்கம், க்ருஷ்ணாஜிநத்தால் மூடிக்கொள்ளுதல், முதலிய க்லேசங்களை ஸஹித்தலே.

த்ருஷ்டிப்-மாத்யந்தின ஸவநத்திற்கு இதுவே தேவதை. சரீர ப்ரயாஸத்தைக் காட்டிலும் தக்ஷிணைக்காகத் தனத்தைக் கொடுப்பதாலுண்டானமனதில் ப்ரயாஸம் அதிகமானதான தாலும் தனம் பிறன் ஜீவிக்கக் காரணமானதாலும் தானமே மகாதபஸ் எனப் பெரியோர் மதம்.

காயத்திரி முந்திப் போனவர்கள் ஸ்காயமில்லாமற்போனதால் அபஜயமடைந்தார்களென்று அஜையோடு கூடக் கிளம்பிற்று.

யக்ஞமுகம் என்றதால் மிகுந்த தேஜஸ் ஏற்பட்டது.

1-ம் மந்த்ரம். த்ருவையில் ஆஜ்யத்தை நிரப்பி ஸ்ருக்கில் நான்கு தடவை நெய்யை எடுத்துப்போட்டுக், கயிற்றால் ஹிரண்யத்தை சுருக்கிட்டுக் கட்டித் தர்ப்பையால் மூடிந்து ஸ்ருக்கில் போட; 2-ம் மந்த்ரம் நாபீ ஸ்ருக் தண்டத்தில் நெய்யை எடுத்து ஆகவநீயத்தில் ஹோமம் செய்ய: 3 ம் மந்த்ரம் சாலைக்கு முன் நின்று யஜமானனை ஆஜ்யத்தைப் பார்க்கச் செய்விக்க என பௌதாயனரும்; ஸோமக்ரயணியைப் பார்த்துக்கொண்டு முன் மந்த்ரத்தால் ஹோமம் செய்து, 'காந்தியுள்ளதாயிருக்கிறாய்' என்று, நெய்யிலிருந்து ஹிரண்யத்தை எடுக்கவும், விசுவேதேவர்களுடைய அவிஸ்ஸென்று, ஆஜ்யத்தை பார்க்கவும்' என ஆபஸ்தம்பரும் கூறுவர்.

4-ம் மந்த்ரம் இந்த ஹிரண்யத்தை நடுவில் வைத்து ஆதித்யனைப் பார்க்க மந்த்ரம் 5-ம் மந்த்ரம். இந்த ஸோமக்ரயணியைச் சாலையில் முன்பு வடக்கு முகமாய் ஓட்டிக்கொண்டுவரவும், அதை 'சித்தாகிறாய்' என வேண்டுதல்:— என்று பௌதாயநரும், சித்து நீ, மனதுநீ, என்று, ஸோமக்ரயணியை வேண்டிக்கொள்ளுதலும், 'மித்ரன் உன்னை காலில் கட்டட்டும்' எனக் காதைப்பிடித்துக்கொண்டு காலில் கட்டவும், பூஷதேவன் உன் வழியைக்காக்கட்டும் என வலது முன்காலைப் பார்க்கவும் என ஆபஸ்தம்பரும் கூறுவர்.

ஸோமக்ரயணீ வாக் தேவதையின் உருவம் என்பர். சித்தம், மனஸ், புத்தி என அந்தக்காணத்தின் விருத்திகள் மூன்றும். தேகாதியிலிருந்து அசேதனத்தைவிலக்கிச் சேதனத்தை உண்டாக்கி வெளி வஸ்துக்களில், சந்தேகமற உண்டாகும் ஸர்வஸாமான்யமான ப்ரக்ஞானத்தைக் கொடுக்கும் விருத்தியைச் சித்தம் என்றார். இந்தப் பதார்த்தம் இப்படியா அப்படியா என விசாரணை செய்யும் தொழிலுடையது மனஸ். இப்படியே இருக்கவேண்டும் என நிச்சயத்தைத்தருவது புத்திவிருத்தி:— தக்ஷிணை என்றால் நல்லதாய்த் தானம் செய்யக்கூடிய த்ரவ்யம். 'யக்ஞத்தைச் சேர்ந்தது'- ஸோமக்ரயத்திற்கு உபயோகப்பட்டு யாகத்துக்கு உபயோகப்படுதலால்; ஸோமதேவதை தேவக்ஷத்ரியனானதால், அதை வாங்கிக்கொடுக்கும் ஸோமக்ரயணியை 'க்ஷத்ரியா' எனச்சொன்னார்.

## அநுவாகம் 5.

க்ரயப்ரதேசம் கச்சந்த்யா: ஸோமக்ரயண்யா: பதஸம்க்ரஹஸ்யாபிதாநம். — ஸோமத்தை விலைக்கு வாங்குகிற பிரதேசத்தைக்குறித்துப்போகும் ஸோமக்ரயணியின் பதத்தைப் பிடித்துக் கொள்ளல்.

1-ம் மந்த்ரம் நீயே. வஸ்வீ, ருத்ரை, அதிதி, ஆதித்யையும் நீ, நீயே சுக்ரை (-காந்தியுள்ளவள்,) சந்த்ரை (-ஸந்தோஷத்தைச் செய்துவைப்பவள்)

2-ம் மந்த்ரம். (ஸோமக்ரயணியைப்பார்த்து,) இந்தஸுகமான இடத்தில் ப்ருஹஸ்பதி உன்னை ஸந்தோஷிக்கச் செய்யட்டும். வஸுக்களோடு ருத்ரன் உனக்கு அநுமதி அளிக்கட்டும்.

3-ம் மந்த்ரம்-(நெய்யைப்பார்த்து) ப்ருதிவியின் சிரஸ்-ஸ்தானமாயும், தேவதைகளுக்கு யாகஸ்தானமாயும் இருக்கிற இப்பசுவின் குளப்படியில் உன்னைக்கொட்டுகிறேன். — ஸ்வாஹா.

4-ம் மந்த்ரம் இரக்ஷஸ் நாசம் செய்யப்பட்டார்கள். சத்ருக்கள் நாசம் செய்யப் பட்டார்கள். இதோ ரக்ஷஸ்ஸின் கழுத்துக்களை வெட்டுகிறேன். எவன் எங்களை விரோதிக்கிருனே எவனை நாங்கள் விரோதிக்கின்றோமோ, இதோ அவர்களுடைய கழுத்துக்களையும் வெட்டுகிறேன்.

5-ம் மந்த்ரம் இதில் (பாததூளிரூபமான) தனம் இருக்கட்டும். உம்மிடத்தில் (யஜமானனிடத்தில்) இது. இது உன்னிடத்தில் (யஜமானன் களத்ரத்தினிடத்தில்.)

6- ம் மந்த்ரம். தேவியே, (ஸோமக்ரயணியைப பார்த்து) ஊர்வசியோடு கூட நன்றாகப் பார்.

7-ம் மந்திரம் த்வஷ்டாவின் அநுக்ரகத்தைப் பெற்றவனும், நல்ல ரேதஸ்ஸோடு கூடினவனும் பதியின் நல்ல ரேதஸ்ஸைப் பெற்றவனுமான (நான்) உமது வீக்ஷண்யத்தைப் பெற்றுச் சூரனை புத்ரனை அடைவேனாக.

8-ம் மந்திரம். நான் ஐசுவரிய புஷ்டியினின்று நீங்காமலிருப்பேனாக.

விநியோகம். 1-ம் மந்த்ரத்தால், ஸோமக்ரயணியைப் பின்பற்றிக் கொண்டுபோய் அதன் ஆறு அடிச்சுவடுகளில் தன் பாதத்தை வைக்கவும். 2-ஆல் ஏழாவது அடியிலுள்ள அடிமண்ணைக்கைகளில் எடுக்கவும். 3-ஆல் அந்த அடியில் ஹிரண்யத்தை வைத்துச் சுற்றி நெய்யைத் தெளித்து ஹோமம் செய்யவும். 4-ஆல் அதை எடுத்து ஹிரண்யத்தாலாவது க்ருஷ்ணமிருகத்தின் கொம்பாலாவது கோபதத்தைச்சுற்றிக் கிழிக்கவும். 5-ஆல் ஏழாவது அடியிலுள்ள தூளியை ஸ்தாலியில் நெய்யொட்டினதோடுகூடப் போட்டு, யஜமானனிடத்தில் கொடுக்கவும். யஜமானன் பத்நியிடத்தில் கொடுக்கவும்.6-ஆல் ஸோமக்ரயணியை விட்டுப் பத்நியைப் பார்க்கச் சொல்லுதல். 7-ஆல் பத்நி யஜமானனைப் பார்க்கவும். 8-ல் ஸோமக்ரயணியைப் பார்க்கும் மந்த்ரம்.

---

1-2-5-க்கு வேண்டிய ப்ராஹ்மணங்கள். கா 6-ப்ரபா- 1 அநுவாகம் 8:—

ஆறு அடிகள் கூடப்போகிறான்: வாக் ஆறு நாளைக்குமேல் பேசுகிறதில்லை. ஸம்வத்ஸர அளவில் எவ்வளவு வாக்கோ அவ்வளவே அவன் பெறுகிறான். ஏழாவது அடியில் ஹோமம் செய்கிறான். சக்வரிக்கு ஏழு அடிகள். சக்வரீ பசுக்கள். பசுக்களையே அடைகிறான். ஏழு நாட்டுப் பசுக்கள் ஏழு காட்டுப்பசுக்கள் இரண்டு வாக் பசுக்களையும் அடைய ஏழுச் சந்தஸ்களுண்டாம். "நீயேவஸ்வீ, நீயே. ருத்ரை", என்றார் இதன்ரூபமே இதன் மஹிமையைச் சொல்லும். "இந்த ஸுகமான இடத்தில் ப்ருகஸ்பதி உன்னை ஸம்ஸ்காரிக்கச் செய்யட்டும்," என்றார். ப்ருஹஸ்பதியே, தேவர்களுக்கு ப்ரஹ்ம சக்தியாம். இந்த சக்தியாலேயே பசுக்களை அடைகிறான். "வஸுக்களோடு ருத்ரன் உனக்கு அநுமதி அளிக்கட்டும்," என்றார். இது ரக்ஷணத்துக்கே.

பூமிக்கு சிரஸ்தானமாயும் தேவதைகளுக்கு யாகஸ்தானமாயுமுள்ள இடத்தில் உன்னை ஊற்றுகிறேன், என்றார். இந்த தேவ யஜனமே ப்ருதிவியின் தலை. இடையின் (யக்ஞத்தின்) ஸ்தானத்தில்' என்றார். ஏனெனில், இந்த ஸோமக்ரயணியனுடைய பாதமே இடையின் ஸ்தானம். 'நெய்யோடுகூடியது ஸ்வாஹா' என்றார். [2] எனெனில், இதனுடைய பாதத்திலிருந்தே நெய்யானது பிழிந்துவிடப்பட்டது. ஆதலால் இப்படிச் சொல்லுகிறார். அத்வர்யு அக்நியில்லாத இடத்தில் ஆஹுதிசெய்தால் அந்த அத்வர்யு குருடனுவான், ரக்ஷஸ்கள் யக்ஞத்தைக் கெடுத்துவிடுவார்கள் ஹிரண்யத்தை வைத்து ஹோமம் செய்கிறார். அக்நியுள்ள இடத்திலேயே ஹோமம் செய்ததாகும். அத்வர்யு அந்தகனுகமாட்டான். யக்ஞத்தையும் ரக்ஷஸ்கள் கெடுப்பதில்லை. ஒவ்வொரு அங்கமும் செய்யப்படும் பொழுது யக்ஞத்தை ரக்ஷஸ்கள் கெடுக்க இச்சிக்கிறார்கள். ரக்ஷஸ் சூழ்ந்துகொள்ளப்பட்டான், சத்துருக்கள் சூழ்ந்துகொள்ளப்பட்டார்கள்,' என்றார் ரக்ஷஸ்களைத் தொலைப்பதற்காக. [3] "இப்படி நான் ரக்ஷஸ்களுடைய கழுத்துகளை அறுக்கிறேன். யார் எங்களை த்வேஷிக்கிறார்களோ, எவனை நாங்கள் த்வேஷிக்கின்றோமோ," என்றார். இரண்டு புருஷர்கள். எவனை யஜமா

னன் த்வேஷிக்கிறதோ அவன் ஒருவன். எவன் யஜமானனை த்வேஷிக்கிறானோ அவன் ஒருவன். இந்த இருவருடைய கழுத்துக்களை இடைவிடாமல் வரிசையாக வெட்டுகிறான் ஸோமக்ரயணியின் பாதந்தான் பசுக்கள். செய்வதால் நினைந்த (பாத தூளியை) ஊற்றுகிறார். பசுக்களையே பெறுகிறார். 'ஐச்வர்யம் நமக்கு என்று ஊற்றுகிறார். தன்னையே ஆத்வர்யு [illegible] பசுக்களிடமிருந்து பிரியாதவராகச் செய்துகொள்கிறார். 'உமக்கு ஐச் [illegible] என்று யஜமானனுக்குக்கொடுக்கிறார். (இதனால்) யஜமானனிடத் [illegible] ஐச்வர்யத்தை ஸ்தா[illegible]க்கிறார். 'உனக்கு ஐச்வர்யம்' என்று (யஜமானன் [illegible]டம் கொடுக்கிறார். ஏனெனில், பத்நி என்பவள் தன்னு[illegible] [illegible] பவள். வீட்டில் வைப்பது எப்படியோ அப்படி [illegible] த்வஷ்டாவின் ஸஹாயமுள்ளவளாக உன்னைச்சேர்க்கிறேன் என்[illegible] த்வஷ்டாவே பசுக்களுக்கும் மிதுனங்களுக்கும் உருவத்தை [illegible] [illegible]த்தையே பசுக்களிடம் வைக்கிறான் இம்மையின் பயனுக்காக [illegible] வளர்க்கப்படுகிறது. ஆஹவநீயம், மறுமையின் பயனுக்காக. கார்ஹபத்யத்தில் போடுவானானால் இவ்வுலகில் பசுக்கள் உடையவனாவான். ஆஹவநீயத்தில் போடுவானானால் அவ்வுலகில் பசுக்கள் உடையவனாவான். இரண்டிலும் போடுகிறான். இரண்டு உலகங்களிலும் (இந்த யஜமானனைப்) பசுமானாகச் செய்கிறான்.

---

## அநுவாகம் 6.

### ஸோமோபஸ்தானம்—

1 (ஸோமத்தைப்பார்த்து,) உனது. குருத்து குருத்துடன் சேரட்டும். கணு, கணுவுடன் (சேரட்டும்.) உனது கந்தம் (யஜமானனது.) காமத்தைப் பூர்த்திசெய்து ரக்ஷிக்கட்டும். (உனது) ரஸம் (தேவர்களின்) திருப்தியின் பொருட்டு அழியாமல் இருக்கட்டும். நீ அமாத்யன். (யஜமானனுடனும் தேவர்களுடனும் எப்போதும் கூட இருப்பவன்.) உன்னைப் பெறுவது ஹிரண்யத்தால் தான் ஆகும்.

2. [illegible] உலகங்களை நடத்துபவரும் வேதார்த்தம் தெரி[illegible] [illegible]வர்களுக்கு யாகரூபனும், ரத்நங்களைத்தரிப்பவரும், எல்லோருக்கும் ப்ரியரானவும், எல்லோராலும் மநநம் செய்யப்படுபவருமான தேவனை ஸ்தோத்ரம் செய்கிறேன். மேலுலகில் நினைக்கமுடியாத எவனது ஒளிவிளங்குகிறதோ அந்த தேவன் ஹிரண்யபாணியாக க்ருபையால்என்னிடம் வந்து ஸோமத்தை அளவிடட்டும்.

3. (ஸோமத்தைப்பார்த்து) ப்ரஜைகளுக்காக, உன்னைச் சேர்த்துப்பிடிக்கிறேன். ப்ராணனுக்கு (மூச்சுவங்குவதற்கு) உன்னைக் (கட்டுகிறேன்), மூச்சுவிடுவதற்கு உன்னைத் தளரவிடுறேன். ப்ரஜைகள் மூச்சுவிட்டபிறகு நீமூச்சுவிடு நீமூச்சுவிட்டபிறகு ப்ரஜைகள் மூச்சுவிடட்டும்,

விநியோகம். 1-ஆல் ஹிரண்யத்தோடுகூடிய கையால் ஸோமத்தைத் தொடவும் 2-ஆல்ஸோமத்தை அளக்க(3) ஆல் வஸ்த்ரத்தில் சேர்த்துக்கட்டிக் கோடியால்சுற்றி முடித்துபேபாட்டுப் பிறகு தளர்த்திவிட்டு ஒரு அங்குலம் அளவு இடைவெளிவிட்டு யஜமானனைப் பார்க்கச் செய்ய மந்த்ரங்கள்.

1-2-6-க்கு வேண்டிய ப்ராம்மணங்கள். 6-1-9-ல் உள்ளன: ஸோமோன்மானம். ப்ரம்ம வாதிகள் ஸோமங்களிலிருந்து அதில் விழுந்திருக்கும் புல் பூண்டு முதலியவைகளைக் களைந்து எடுக்க வேண்டியதா இல்லையா என விசாரித்தார்கள். ஏனெனில் ஸோமனே ஓஷதிகளுக்கு ராஜா. அதில் விழுந்ததெல்லாம் அதனால் விழுங்கப்பட்டதாம். களைந்து எடுத்தால் வாயிலிருந்து விழுங்கியதை வமநம் செய்வது போலாம். களை எடுக்காவிடில் விழிகளில் விழுந்தது அங்குமிங்கும் ஓடுவது போலாம். அத்வர்யுவும் பசியால் பீடிக்கப் படுபவனாவான். யஜமானனும்பசியால் பீடிக்கப்படுபவனாவான். ஸோமத்தைவிற்பவனே ஸோமத்தை சுத்தமாக்கு என்றுசொல்ல வேண்டும். இப்படி இருந்தாலும் அப்படி யிருந்தாலும் இரண்டு பாதகங்களையும்ஸோமம்விற்பவனே அடைகிறான். ஆனதால் ஸோமம் விற்பவனே பசித்தவனாகிறான்.

உபவேசனுடைய புத்ரனாகிய அருணன் ஸோமத்தை வாங்கும்போதே மூன்றாவது ஸவநத்தைப் பெறுவேன் என்றான். பசுக்களின் தோலில் ஸோமத்தை அளக்கிறான். பசுக்களையே அடைகிறான். பசுக்கள் தான் ஸவநம் (ஸவனமெனில் ஸோமத்தைப் பிழிதல் என்று பொருள் (Pressing.) சாவற்றவனாகட்டும் என்று எண்ணினால் தோலில் மயிரில்லாத உள்பக்கத்தில் அளக்க வேண்டும். மயிர் இல்லாத பக்கமே, பசுவைச் சாராதது. பசுவற்றவனாகவே ஆகிறான். பசுவுள்ளவனாகட்டுமென எண்ணினால் மயிர் உள்ள பக்கத்தில் அளக்க வேண்டும். இதுவே பசுவினது உருவம். உருவத்தாலேயே அவன் பசுக்களை அடையச் செய்கிறான். பசுமானாக ஆகிறான். ஜலத்தின் ஸந்நிதியில் வாங்குகிறான், அதனால் இதைரஸமுள்ளதாகவே வாங்குகிறான். நீ கூட இருப்பவனென்றான் கூட இருப்பவனாகவே இதைச் செய்கிறான் 'உன்னைப் பெறுவது ஹிரண்யத்தாலேதான் பெறலாம் வண்டியுடன் எதிர்சென்று போகிறான். அதன் மகிமையைக் குறித்தே போகிறான். வண்டியுடன் எதிர் போகிறான் ஆதலால் ஸமவெளியிலுள்ள உயிரெல்லாம் வண்டியில் ஏற்ற வேண்டிய தாயிற்று. இதைச் சிரஸ்ஸால் சுமக்கிறவிடம்மலை ஆனதாலேயே மலையில் வளர்ந்ததுதலையில் சுமக்கப்பட வேண்டும். நடத்துகிற தேவனை என்று அதிச்சந்தஸ் என்ற சந்தஸ் வாய்ந்த ருக்கால் அளக்கிறான். அதிச்சந்தஸே எல்லாச் சந்தஸ்களும் எல்லாச் சந்தஸ்களாலும் அதை அளக்கிறான் இந்த அதிச்சந்தஸ் ஸென்பது

சந்தஸ்களுடைய சரீரமாம்; அதிச்சந்தஸைல் அளப்பதால் சமானர்களுக்குள் இதை ஸர்வச்ரைக்கியமாகச் செய்கிறான் ஒன்றொன்றாக விட்டு விட்டு அளக்கிறான் சிரமம் அன்னியில் (ஒரு விரலை ஒரு தடவை மாத்திரம் அளவில் உபயோகித்தலால்) அளக்கிறான். ஆனால் விரல்கள் வெவ்வேறு சக்தி பெற்றன.

கட்டை விரலை எல்லாவற்றிலும் வைக்கிறான் ஆனதால் மற்ற விரல்களுக்கொப்பான சக்தி பெற்றிருக்கிறது. ஆதலால் எல்லாவற்றையும் அநுசரிக்கிறது எல்லா விரல்களையும் சேர்த்து அளப்பானேல் விரல்கள் சேர்ந்து பிறக்கும். ஒன்று ஒன்றாக விட்டு விட்டு அளக்கிறான் ஆதலால் (சேராமல் விரல்கள் தனித்தனியாகப் பிறக்கின்றன. யஜுஸ் மந்த்ரத்தோடு ஐந்து தடவை அளக்கிறான். பங்க்தி ஐந்து அக்ஷரங்களுள்ளது யக்ஞம் ஐந்தானது.

யக்ஞத்தையே அடைகிறான். ஐந்து தடவை (மந்த்ரமில்லாமல்) அளக்கிறான். பத்து ஆகும். விராஜ் என்பது பத்து அக்ஷரங்களுள்ளது விராட்டே அன்னம். விராஜ்என்றதாலேயே அந்நத்தை அடைகிறான். யஜுஸ் மந்திரத்தால் அளக்கிறதால் சென்றதையெல்லாம் அடைகிறான். மந்த்ரமில்லாமல் அளக்கிறதால் வருவதை அடைகிறான்.

அவன் எவ்வளவு அளக்கிறானோ அவ்வளவு ஸோமம் மாத்ரம் இருந்தால் யஜமானனுக்குத்தான் போதுமானதாகும். ஸதஸ்யர்களுக்கும் இல்லாமல் போகும். “ப்ரஜைகளுக்காக உன்னை,” என்று துணியைச் சேர்த்து இழுக்கிறான். ஸதஸ்யர்களுக்கும் விபாகம் செய்கிறான். வஸ்த்ரம் எல்லாத் தேவஸம்பந்தமுமுள்ளது. எல்லாத்தேவதைகளோடுமே சம்பந்தப்படுத்துகிறான். ஸோமமே பசுக்கள் “உன்னை ப்ராணனுக்காக” என்று கட்டுகிறான். பசுக்களிடத்தில் ப்ராணனை வைக்கிறான். வ்யானனுக்காக உன்னை என்று தளர்த்தி விடுகிறான். பசுக்களில் வியானனையே வைக்கிறான். ஆதலால் தூங்குகிறவனை விட்டு ப்ராணன் விடுவதில்லை.

## அநுவாகம். 7.

### ஸோமக்ரயம்.

(ஸோம விக்ரயம் செய்பவனைப் பார்த்து,) நான் உனது ஸோமத்தை வாங்கிக் கொள்ளுகிறேன் அது சரீரத்தைக் கொடுப்பது, விசேஷமான ரஸத்தோடு கூடியது, இந்த்ரிய புஷ்டியைத் தருவது, சத்ருக்களை நாசம் செய்வது. தேஜஸோடு கூடின ஸோமத்தைத் தேஜஸுள்ள ஹிரண்யத்தாலும், ஸுக ஸ்வரூபமான ஸோமத்தை ஸுகரூபமான ஹிரண்யத்தாலும் அழிவற்ற ஸோமத்தை அழிவற்ற ஹிரண்யத்தாலும் வாங்குகிறேன். (இதன்றி

யில் முன்னரே நல்ல பசுவும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

2. எங்களிடமே ஹிரண்யம் இருக்கட்டும்.

3. (ஆட்டைப் பார்த்து) நீயே தபஸின் சரீரம். ப்ரஜாபதியின் தேஹம், ஆயிரம் பரம்பரையை வ்ருத்திசெய்யும் உனது கடைசியான குட்டியால் வாங்குகிறேன். நான் உனது பங்கு. உனது (குட்டிகளான) தனம் எங்களிடத்திலிருக்கட்டும்.

4 எங்களிடத்தில் ஜ்யோதிஸ்ஸும்

5. ஸோமம் விலைக்குக் கொடுத்தவனிடத்தில் தமஸ்ஸும் (இருளும்.)

6. (ஸோமத்தைப் பார்த்து) நல்ல மித்ரர்களை அளிக்கும் (ஸோமனே,) எங்களுக்கு மித்ரனாக வருக. இந்த்ரனுடைய வலது துடையில் வந்திரு. இதுவும் உன்னைப் போல் அழகு வாய்ந்தது, சுகத்தை அளிப்பது.

7. ஏ ஸ்வாந, ப்ராஜ, அங்காரியே, பம்பாரியே, ஹஸ்த, ஸுஹஸ்த, க்ருசாநு இதோ ஸோமத்தின் விலைகள். இவைகளைக் காப்பாற்றுங்கள் உங்களை ஒருவரும் ஹிம்ஸிக்காமலிருக்கட்டும்.

விநியோகம் 1 ஆல் ஸோமக்ரயத்திற்கு முன்பு ஜபிப்பதும், ஸ்வர்ணத்தால் வாங்கவும் 2 ஆல் ஸ்வர்ணத்தை ஸோமத்தைக்கொண்டுவந்தவனிடம் கொடுக்க. 3 ஆல் ஆட்டைப்பார்த்துக்கொண்டு, வாங்கும் ஸமயத்தில் சொல்ல மந்த்ரம். 4 ஆல் யஜமானனிடத்தில் வெண்மையான கம்பளி மயிரைக்கொடுக்க. 5 ஆல் விற்பவனைக் கருப்புக்கம்பிளிமயிரால் அடிக்க 6 ஆல் ஸோமத்தை வாங்கிக்கொள்ளவும், யஜமானன் வலது துடையில் வைக்கவும். 7-ல் ஸோமத்தைவாங்க உதவிய கோக்கள் முதலியவற்றைக் காட்ட மந்த்ரங்கள்.

1-2-7 உள்ளமந்த்ரங்களுக்கு Vi-1-10-ல் அடியில் கண்டபடி ப்ராமணங்கள்: [அன்யை: ஸோமக்ரயாபிதானம்] 'பதினாறு பங்குகளில் ஒன்றுலாவது எட்டுப் பங்குகளில் ஒன்றுலாவது உன்னிடமிருந்து வாங்குகிறேன்,' என்று வியாபாரம் செய்ய முயன்றால்

ஸோமத்தைக் கோவின் விலை பெறுததாகச் செய்வான். யஜமானனையும் கோவின் விலைபெறுதவனுகச் செய்வான். அத்வர்யுவையும் கோவின்விலை பெறுதவனுகச் செய்வான். கோவின் மஹிமையைக் குறைத்தவனுகமாட்டான். ஒரு கோவால்வாங்குகிறேன்,' என்று சொல்ல வேண்டும். ஸோமத்தைஒரு கோவிலை பெறுமானதாகவே செய்கிறுன். யஜமானனையும் அத்வர்யுவையும் ஒரு கோவிலை பெறுமானவர்களாகச் செய்கிறுன். கோவின்மஹிமையையும் குறைப்பதில்லை. ஆட்டைக் கொடுத்து வாங்குகிறுன் தபஸுடனேயே வாங்குகிறுன். ஹிரண்யத்தால் வாங்குகிறுன், காந்தியுள்ளதையே வாங்குகிறுன். கறவைமாட்டால் வாங்குகிறுன் கலப்பதற்குப் பாலுடன்தான்வாங்குகிறுன். இடபத்தால் வாங்குகிறுன். இந்த்ரனுலேயே வாங்குகிறுன். வண்டியிழுக்கும் காளையால் வாங்குகிறுன். காளையே சுமப்பவன். சுமப்பவனுலேயாகத்தைச் சுமப்பவனை வாங்குகிறுன். மிதுனம் (இரட்டை) அடைவதற்கே மிதுனத்தால்வாங்குகிறுன். வஸ்த்ரத்தால் வாங்குகிறுன், எல்லாத் தேவதைகளோடு சம்பந்தப் பட்டது வஸ்த்ரம். எல்லாத் தேவதைகளாலும் இதைவாங்குகிறுன். இப்படிப் பத்து ஆகும். விராட் பத்து அக்ஷரங்களாலானது அன்னம்விராட், விராட்டாலே நல்ல அன்னத்தை அடைகிறுன். [2]

தபஸின் சரீரம், ப்ராஜபதியின் தேகம் என்றுர். அத்வர்யு பசுக்களுக்குஉபசாரம் செய்து த்ருப்தி செய்து வைக்கிறுர். தான் நசித்துப்போகாமலிருக்க. எவன் இப்படி அறிவானே, அவன் ஸ்ரீயை அடைவான். 'காந்தியுள்ளதைக் காந்தியுள்ளதால் வாங்குகிறேன்' என்றது யஜுஸ் படியே. தேவர்கள் எந்த ஹிரண்யத்தால் ஸோமத்தை வாங்கினுர்களோ அதைப் பலாத்காரமாகப் பிடுங்கிக் கொண்டார்கள். 'யார்தான் தேஜஸை விற்பார்கள்' என்றுர்கள். எந்த ஹிரண்யத்தால் ஸோமத்தை வாங்கினுர்களோ அதைப் பலாத்காரமாகப் பிடுங்கிக் கொள்ள வேண்டும், (இதனுல்) தேஜஸ்ஸைத் தன்னிடத்தில்வைத்து கொண்டதாக ஆகும்.' எங்களிடத்தில் ஜோதிஸ்ஸும், ஸோமவிற்பனைக்காரனிடத்தில் இருளும்' என்றுர், உண்மையாகவே,யஜமானனிடத்தில்ஜோதிஸ்ஸும்ஸோமவிற்பனைக்காரனிடத்தில் இருளுமே வைத்து விடுகிறுன். "கம்பளத்தைச் சேர்த்துச் சுருக்கிடாமல் அடித்தால் ஸர்ப்பங்கள் அவ்வருஷத்தில் கடிக்கும். "கடிக்கும் பாம்புகளின் கழுத்துக்களை இதோ சுருக்கிடுகிறேன்." என்றுர் ஸர்ப்பங்கள் அந்த வருஷம் கடிப்பதில்லை. இருட்டால் (கறுப்புக் கம்பிளி மயிரால்) ஸோமம் விற்பவனை அடிக்கிறுன்.

"ஸ்வான, ப்ராஜ," என்றுர். அந்தலோகத்தில் இவர்கள்ஸோமத்தைக் காத்தார்கள். அவர்களிடமிருந்து ஸோமத்தைப் பிடித்துக் கொண்டார்கள். ஸோமத்தை வாங்கின கோக்கள் முதலியவற்றை அவர்களுக்குத் தொட்டுக் காட்டாவிட்டால் ஸோமத்தை வாங்காததாகிவிடும். அந்த லோகத்தில் அவர்கள் ஸோமத்தை ரக்ஷிக்க மாட்டார்கள். ஸோமத்தின் விலைகளைத் தொட்டுக் காட்டுவதால் உண்மையாகவே ஸோமத்தை வாங்குகிறுன். அந்த லோகத்திலும் ஸோமத்தை இரக்ஷிக்கிறுர்கள்.

## அநுவாகம். 8.

ஸோமஸ்ய சகடோரோபணம்.

1. மரணமற்றவர்களான தேவர்களோடுகூடவே (இந்த) ஸோ-

மத்தோடு எழுந்திருக்கிறேன். ஆயுஸ்ஸையும் ரோகாதிக ளற்ற நல்லவாழ்வையும் அளிப்பதும், ஓஷதிகளின் ரஸ மானதும், பர்ஜந்யத்தின(மழையா)ல் வளருவது மானது,
2. விசாலமான அந்தரிட்சத்தில் (வெளியில்) செல்லுக.

3. (க்ருஷ்ணாஜினத்தைப் பார்த்து,)நீ. அதிதியின் ஸ்தானம் (ஸோமத்தைப் பார்த்து,) அதிதியின் ஸ்தாநத்தில்இரும். ச்ரேஷ்டனை இந்த (ஸோமன்) மேலுலகு விழாதபடி, தாங்கினார். அந்தரிக்ஷத்தை இவ்வளவென்று அளந்தார். பூமியின்விஸ்தாரத்தையும் அளவிட்டார். ஸர்வபுவநங்களை யும் வ்யாபித்து நின்றார். இது ஸமஸ்தங்களும் எல்லாவற் றையும் சூழ்ந்துநிற்கும். வருணனென்ற ஸோமராஜாவினு டைய நியதமான வ்ரதங்கள்

4. வருணனென்ற (பெயரை அடைந்த இந்தஸோமதேவனே) வ்ருக்ஷமத்தியங்களில் அவகாசத்தையும், குதிரைகளிடம் வேகத்தையும், கோக்களிடத்தில் பாலையும், ஹ்ருதயத் தில் ஸங்கல்பத்தையும், ப்ரஜைகளிடத்தில் ஜடராக்நியை யும், தேவஉலகத்தில்சூர்யனையும், பர்வதத்தில் ஸோமல தையையும் ஸ்தாபித்தார்.

5. எல்லோரும் பார்க்கும்படி, ஸ்ருஷ்டியான ஸர்வஜகத்தை யும் அறியும் அந்தஸூர்யதேவனைக் கிரணங்கள் (கொடிக ளைப்போல்) உயரத் தூக்கிச்செல்கின்றன,

6. காளைகளே, வாருங்கள், நீங்கள் பாரத்தைத்தாங்கிஇழுக்க வல்லீர்கள், வண்டிஇழுப்பதில் க்யாதிபெற்றவர்கள், (வண் டியிலுள்ள) (ஸோமனென்ற) வீரனுக்குப் பாதகம்செய்யா தவர்கள், அன்னத்துக்குக் காரணமானவர்கள்.

7. (நுகத்தடியில் உள்ள கட்டுமுளையைப்பார்த்து, (காளையை ஓடாதபடி) தடுத்துக்கொள்ளும் முளையானாய். (பூட்டாங் கயிற்றைப்பார்த்து,) நீயும் வருணனென்ற காளையைஓடா மல்தடுத்துவிடு. கயிறும் வண்டியின்மீது நீட்டிப்பிடிக்கப் பட்டது.

குறிப்பு:—

1-2-7-ல் ஸோமத்தை வாங்கினவகை சொல்லி 1-2-8-ல் வாங்கின

ஸோ... ப்ராசீனவம்சத்தில் சேர்ப்பிப்பதற்காக வண்டியில் எற்ற மந்... சொல்லுகிறார்.

ஸோமஸ்ய சகடாரோபணம்.

கல்ப விநியோகங்கள். 1-ல், ஸோமத்தைத் தூக்கிஎழுந்திருக்கவும் 2-ஆல் வண்டியை நோக்கிப் போகவும் 3 ஆல் வண்டியில் க்ருஷ்ணாஜினத்தை விரிக்கவும் இதன் மேல் ஸோம முடியை வைக்கவும் 4-ஆல் வஸ்த்ரத்தால் ஸோமத்தை மூடவும் 5-ல் க்ருஷ்ணாஜினத்தால் ஸோமத்தைக் கட்டவும் 6-ல் வண்டியில் காளைகளைப் பூட்டவும் 7-ல் கட்டு முளையைப் போடவும், பூட்டான் கயிற்றைக் கட்டவும், மூக்குக் கயிற்றை மேலே வீசவும் மந்த்ரங்கள்.

1-2-8 க்கு வேண்டிய ப்ராம்மணங்கள் Vi-1-11-ல் காணலாம்:— வாங்கிக் கட்டிவைத்த ஸோமம் வருணன்† சம்பந்தமானது நல்ல மித்ரனை அளிக்கும் (ஸோமனே) எங்களுக்கு மித்ரனாக வருக எனச் சாந்தியாகச் சொன்னார். 'இந்த்ரனுடைய வலது தொடையில் வந்திரு' என்றார் தேவர்கள் தாம் வாங்கின ஸோமத்தை இந்திரனுடைய வலது தொடையில்* வைத்தார்கள். இந்த யஜமானனே இந்த்ரன் அதனால் தான் இப்படிச் சொன்னார்.

ஆயுஸ்ஸையும் ரோகாதிகளற்ற நல்ல வாழ்வையும் அளிப்பதான ஸோமத்தோடு என்றார் தேவதைகளைப் பிடித்துக் கொண்டே [1] எழுந்திருக்கிறான். விசாலமான அந்தரிக்ஷத்தில் செல்லுக என்றார், எனெனில் இந்த ஸோமனுக்கு (இப்போது) அந்தரிக்ஷமே தேவதையாகக் கொண்டது. 'நீ அதிதியின் ஸ்தாநம். அதிதியின் ஸ்தானத்திலிரும்' என்றார். இது யஜுஸ்படிதான். வருண சம்பந்தமானதை மித்ர ஸம்பந்தமாகச் செய்ததால் இந்த (ஸோமனை) ஸம்ருத்தி ஹீனனாகச் செய்து விடுகிறான். வருணருக்கால் சேர்த்து வைக்கிறான் (அதனால்) தன்தேவதையாலேயே இந்த (ஸோமனை) ஸம்ருத்தி உள்ளவனாகச் செய்கிறான், வஸ்த்ரத்தால் சுற்றி மூடிவைக்கிறான், வஸ்த்ரம் ஸர்வதேவதைகளோடு கூடினது. ஸர்வதேவதைகளோடு சேர்த்து வைக்கிறான். [2] இது ரக்ஷஸ்களைத் துரத்துவதற்காகவே. வ்ருக்ஷமத்யங்களில் அவகாசத்தைச் செய்தார் என்றார் எனெனில் வ்ருக்ஷமத்யங்களிலேயே அவகாசத்தைச்செய்தார். 'குதிரைகளிடம் வேகத்தை' என்றார் குதிரைகளிடத்தில் வேகத்தையே (வைத்தார்.) பசுக்களிடத்தில் பாலை என்றார் பசுக்களிடத்திலேயே பாலை வைத்தார்.

†பாசமென்றது வருணனதாதலால் கட்டப்பட்ட ஸோமத்தை வாருணன்' வருண சம்பந்தமானது என்றார்.* தொடையில் வைப்பது பூர்வாசாரமெனச் சொன்னபடி.

'ஹ்ருதயத்தில் ஸங்கல்பத்தையும்,' என்றார். ஹ்ருதயத்தில் தான் ஸங்கல்பம், 'ப்ரஜைகளிடத்தில் அக்நியை வருணன்;' என்றார் வருணன் ப்ரஜைகளிடத்தில்தான் அக்நியையும், தேவ உலகத்தில் சூரியனையும்

வைத்தான். [3] "ஸோமனைப் பர்வதங்களிலும்," என்றுர் அம்மிக்கற்கள் பர்வதங்கள். அவைகளில் ஸோமத்தை எவன் யாகம் செய்கிருனே அவன் வைக்கிருன். அதனுல் இப்படிச் சொன்னுர் "ஸ்ருஷ்டியான ஸர்வஜகத்தையும் அறியும்" என்ற சூரிய ருக்கால், ரக்ஷஸ்களைத் தூரத்த க்ருஷ்ணஜினத்தைக் கட்டுகிருர். "காளைகளே, வாருங்கள் நீங்கள் பாரத்தைத் தாங்கி இழுக்க வல்லீர்கள்," என்றுர் இது யஜுஸ் படிதான்.

## அநுவாகம். 9.

சகடாரோபிதஸ்ய ஸோமஸ்ய ப்ரா(ச்)சீன வம்சம் பிரதிகமநம்—வண்டியில் ஏற்றப்பெற்ற ஸோமத்தை ப்ரா(ச்)சீன வம்சமென்ற யாகசாலைக்குக் கொண்டுபோதல்.

1. பூமியிலுள்ளவர்களுக்கெல்லாம் பதியே, (ஸோமனே) எல்லாஸ்தானங்களுக்கும் போம். வழிமறிக்கும் திருடனொருவனும், உம்மைத் தெரிந்துகொள்ளாமலிருக்கட்டும்; எதிராளிகள் (திருடர்கள்) உம்மைத்தெரிந்து கொள்ளாமலிருக்கட்டும், கொல்லும்தன்மையுள்ள செந்நாய் உம்மைத் தெரிந்துகொள்ளாமலிருக்கட்டும், விசுவாவஸு என்ற கந்தர்வன் உம்மைப்பாராமலிருக்கட்டும்.

ஒருபருந்தாக (மாறிஎங்கள்யஜமானன் க்ருஹத்துக்குப்) பறந்துபோம். தேவர்களால்(தேவர்களுக்கொப்பானருத்விக்குக்களால்) எங்கள்யஜமானன்க்ருஹம் பரிஷ்காரம் செய்துவைத்திருக்கிறது. யஜமானனுக்கு ச்ரேயஸ்ரூபமான யாகத்தை அடைவிக்கிறீர். மேலும் நாங்கள் அநுஷ்டானமென்ற மார்க்கத்தை அடைந்திருக்கிறோம். (இம்மார்க்கம்) ச்ரேயஸ்ஸை அடைவிக்கும். பாபமில்லாதது. இந்தவழியாலேயே எல்லா த்வேஷிகளும் நாசமடைகிருர்கள். ஐச்வர்யத்தையும் அடையலாம்.

2. (ஸோமனை சூர்யனுக எண்ணி ஸ்துதிக்கிருர்,) மித்திரனென்றசூர்யனுக்கு நமஸ்காரம். தன் கிரணங்களால் ஜகத்தைச் சூழ்ந்திருக்கும் ஸர்வக்ஞனுக்கு. நமஸ்காரம் (சூர்யனுக்கு) நமஸ்காரம். தவருதபலத்தைக் கொடுக்கும் கர்மாவைச்செய்து மகாதேவனுக்கு ஸேவையைச் செய்யுங்கள். ஸ்துதியைக்கூறுங்கள். இவர் தூரத்தில் பார்க்கப்படுபவர். தேவனுகப்பிறந்தவர், (பகலுக்கு) அடையாளமானவர், தேவலோகத்துக்குப் பிள்ளைபோன்றவர், என்று ஸூர்யனுக்கு (ஸ்துதியைக்கூறுங்கள்.)

ஸோமத்தை ப்ராசீனவம்சத்தில் சேர்ப்பிப்பதற்காக வண்டியில் ஏற்ற மந்த்ரங்கள் சொல்லுகிறார்.

ஸோமஸ்ய சகடாரோபணம்.

கல்ப விநியோகங்கள். 1-ல், ஸோமத்தைத் தூக்கிஎழுந்திருக்கவும் 2-ஆல் வண்டியை நோக்கிப் போகவும் 3 ஆல் வண்டியில் க்ருஷ்ணாஜினத்தை விரிக்கவும் இதன் மேல் ஸோம முடியை வைக்கவும் 4-ஆல் வஸ்த்ரத்தால் ஸோமத்தை மூடவும் 5-ல் க்ருஷ்ணாஜினத்தால் ஸோமத்தைக் கட்டவும் 6-ல் வண்டியில் காளைகளைப் பூட்டவும் 7-ல் கட்டு முளையைப் போடவும், பூட்டான் கயிற்றைக் கட்டவும், மூக்குக் கயிற்றை மேலே வீசவும் மந்த்ரங்கள்.

1-2-8 க்கு வேண்டிய ப்ராம்மணங்கள் Vi-1-11-ல் காணலாம்:— வாங்கிக் கட்டிவைத்த ஸோமம் வருணன்† சம்பந்தமானது நல்ல மித்ரனை அளிக்கும் (ஸோமனே) எங்களுக்கு மித்ரனாக வருக எனச் சாந்தியாகச் சொன்னார். 'இந்த்ரனுடைய வலது துடையில் வந்திரு' என்றார் தேவர்கள் தாம் வாங்கின ஸோமத்தை இந்திரனுடைய வலது துடையில்* வைத்தார்கள். இந்த யஜமானனே இந்த்ரன் அதனால் தான் இப்படிச் சொன்னார்.

ஆயுஸ்ஸையும் ரோகாதிகளற்ற நல்ல வாழ்வையும் அளிப்பதான ஸோமத்தோடு என்றார் தேவதைகளைப் பிடித்துக் கொண்டே [1] எழுந்திருக்கிறான். விசாலமான அந்தரிக்ஷத்தில் செல்லுக என்றார், ஏனெனில் இந்த ஸோமனுக்கு (இப்போது) அந்தரிக்ஷமே தேவதையாகக் கொண்டது. 'நீ அதிதியின் ஸ்தானம். அதிதியின் ஸ்தானத்திலிரும்' என்றார். இது யஜுஸ்படிதான். வருண சம்பந்தமானதை மித்ர ஸம்பந்தமாகச் செய்ததால் இந்த (ஸோமனை) ஸம்ருத்தி ஹீனனாகச் செய்து விடுகிறான். வருணருக்கால் சேர்த்து வைக்கிறான் (அதனால்) தன்தேவதையாலேயே இந்த (ஸோமனை)ஸம்ருத்தி உள்ளவனாகச் செய்கிறான், வஸ்த்ரத்தால் சுற்றி மூடிவைக்கிறான், வஸ்த்ரம் ஸர்வதேவதைகளோடு கூடினது. ஸர்வதேவதைகளோடு சேர்த்து வைக்கிறான். [2] இது ரக்ஷஸ்களைத் தூரத்துவதற்காகவே. வ்ருக்ஷமத்யங்களில் அவகாசத்தைச் செய்தார் என்றார் ஏனெனில் வ்ருக்ஷமத்யங்களிலேயே அவகாசத்தைச்செய்தார். 'குதிரைகளிடம் வேகத்தை' என்றார் குதிரைகளிடத்தில் வேகத்தையே (வைத்தார்.) பசுக்களிடத்தில் பாலை என்றார் பசுக்களிடத்திலேயே பாலை வைத்தார்.

†பாசமென்றது வருணனதாதலால் கட்டப்பட்ட ஸோமத்தை வாருணன் வருண சம்பந்தமானது என்றார்.* துடையில் வைப்பது பூர்வாசாரமெனச் சொன்னபடி.

'ஹ்ருதயத்தில் ஸங்கல்பத்தையும்,' என்றார். ஹ்ருதயத்தில் தான் ஸங்கல்பம், 'ப்ரஜைகளிடத்தில் அக்னியை வருணன்;' என்றார் வருணன் ப்ரஜைகளிடத்தில்தான் அக்னியையும், தேவ உலகத்தில் சூரியனையும்

வைத்தான். [3] "ஸோமனைப் பர்வதங்களிலும்," என்ருர் அம்மிக்கற்கள் பர்வதங்கள். அவைகளில் ஸோமத்தை எவன் யாகம் செய்கிருனே அவன் வைக்கிருன். அதனுல் இப்படிச் சொன்னுர் "ஸ்ருஷ்டியான ஸர்வஜகத்தையும் அறியும்" என்ற சூரிய ருக்கால், ரக்ஷஸ்களைத் தாத்த க்ருஷ்ணஜினத்தைக் கட்டுகிருர். "காளைகளே, வாருங்கள் நீங்கள் பாரத்தைத் தாங்கி இழுக்க வல்லீர்கள்," என்ருர் இது யஜுஸ் படிதான்.

## அநுவாகம். 9.

சகடாரோபிதஸ்ய ஸோமஸ்ய ப்ரா(ச்)சின வம்சம் பிரதிகமநம்—வண்டியில் ஏற்றப்பெற்ற ஸோமத்தை ப்ரா(ச்)சின வம்சமென்ற யாகசாலைக்குக் கொண்டுபோதல்.

1. பூமியிலுள்ளவர்களுக்கெல்லாம் பதியே, (ஸோமனே) எல்லாஸ்தானங்களுக்கும் போம். வழிமறிக்கும் திருடன் ஒருவனும், உம்மைத் தெரிந்துகொள்ளாமலிருக்கட்டும்; எதிராளிகள் (திருடர்கள்) உம்மைத்தெரிந்து கொள்ளாமலிருக்கட்டும், கொல்லும்தன்மையுள்ள செந்நாய் உம்மைத் தெரிந்துகொள்ளாமலிருக்கட்டும், விசுவாவஸு என்ற கந்தர்வன் உம்மைப்பாராமலிருக்கட்டும்.

ஒருபருந்தாக (மாறிஎங்கள்யஜமானன் க்ருஹத்துக்குப்) பறந்துபோம். தேவர்களால்(தேவர்களுக்கொப்பானருத்விக்குக்களால்) எங்கள்யஜமானன்க்ருஹம் பரிஷ்காரம் செய்துவைத்திருக்கிறது. யஜமானனுக்கு ச்ரேயஸ்ரூபமான யாகத்தை அடைவிக்கிறீர். மேலும் நாங்கள் அநுஷ்டானமென்ற மார்க்கத்தை அடைந்திருக்கிறோம். (இம்மார்க்கம்) ச்ரேயஸ்ஸை அடைவிக்கும், பாபமில்லாதது. இந்தவழியாலேயே எல்லா த்வேஷிகளும் நாசமடைகிருர்கள். ஐச்வர்யத்தையும் அடையலாம்.

2. (ஸோமனை சூர்யனுக எண்ணி ஸ்துதிக்கிருர்,) மித்திரனென்றசூர்யனுக்கு நமஸ்காரம். தன் கிரணங்களால் ஜகத்தைச் சூழ்ந்திருக்கும் ஸர்வக்ஞனுக்கு. நமஸ்காரம் (சூர்யனுக்கு) நமஸ்காரம். தவருதபலத்தைக் கொடுக்கும் கர்மாவைச்செய்து மகாதேவனுக்கு ஸேவையைச் செய்யுங்கள். ஸ்துதியைக்கூறுங்கள். இவர் தூரத்தில் பார்க்கப்படுபவர். தேவனுகப்பிறந்தவர், (பகலுக்கு) அடையாளமானவர், தேவலோகத்துக்குப் பிள்ளைபோன்றவர், என்று ஸூர்யனுக்கு (ஸ்துதியைக்கூறுங்கள்.)

3. நீ வருணனுடைய ஆதாரமானவன். வருணன் ஆதாரத்துக்கு ஆதாரமானவன். வருணனுடைய பாசம் எடுத்துவிடப்பட்டது.

விநியோகம். 1-ல் ஸோமத்தை ஏற்றிக் கொண்டிருக்கும் வண்டிக்கு எதிரே போய் ப்ரதக்ஷிணம் செய்து ஒரு பருந்தாக மாறி என்று அத்வர்யு ஸோமராஜாவை வேண்டல். மார்க்கத்தை அடைந்திருக்கிறோம் என்று அத்வர்யுவும் யஜமானனும் வலது அல்லது இடதுபுறமாகக்கூடப்போதல் 2-ஆல் சாலேக்கு எதிரே நின்றுகொண்டு வண்டியில் வரும் ஸோமராஜனைப் பார்த்து வேண்டல். 3-ஆல் ஸோமவண்டியைச் சாலைக்கு நேராக வடக்கில் நுகத்தடி இருக்கும்படி இறக்கிப் பிடித்துக்கொண்டு கட்டுமுளைகளையும் தும்புகளையும் எடுத்தல்.

Vi-1-11 இதற்கு ப்ராம்மணம் பூமியின் பதியே, யேகுக என்றார் ஏனெனில் பூதங்களுக்கெல்லாம் இவரே பதியாம். எல்லா ஸ்தானங்களுக்கும் என்றார் ஏனெனில் எல்லா ஸ்தானங்களுக்குமே இவர் போவார். உம்மை வழிமறிக்கும் திருடன் தெரிந்து கொள்ளாமலிருக்கட்டும் என்றார் விசுவாவஸு என்ற கந்தர்வன். ஸோமத்தை எடுத்துக் கொண்டு வரும்போது அதைத் திருடினதால் (மறுபடி) திருட்டுப் போகாமலிருப்பதற்காக இப்படிச் சொன்னார். ஸோமன் வாங்கப்பட்டுக் கட்டப்பட்டு வருகிறது வருணனே. இவன் யஜமானனிடம் வருகிறான். மித்ரனுக்கும் சூர்யனுக்கும் ஸர்வக்ஞனுக்கும் என்று சொன்னார், இது சாந்தியின் பொருட்டு. (ருத்விக்குக்கள்) ஸோமத்தைக் கொண்டு வருகிறார்கள் ஸோமன் அக்கியோடு சேர்ந்து ப்ரதிஷ்டை அடைகிறான். இப்படிச் சேர்ந்த இருவர்களும் யஜமானனைக் குறித்து அடைந்தார்கள்; இதை அறிந்தே) முன்பே தீக்ஷிதனானவன் யாகத்திற்காகத்தன் சரீரத்தையே எடுத்துக்கொண்டு (யாக) பசுவாகக் கொண்டுவருகிறான் அக்நிஸோமதேவர்களுக்காகப்பசுவைப்பலியாகக் கொடுப்பதால் தன்னை விடுவித்துக் கொள்பவனாவான். ஆதலால் அந்தப்பசுவைத் தின்னலாகாது. ஏனெனில் அதாலல்லவா புருஷனை விடுவித்துக் கொண்டான்.

ஆனாலோ, அக்நி ஸோம தேவதைகளுக்காக இந்த்ரன் வ்ருத்ரனை அடித்தான் என்றார்கள்.

அக்நிஸோமர்களுக்காக பிடிக்கிறானே அது யஜமானனுடைய சத்ருவை நாசம் செய்வதாகும் ஆகையால் ஹவிஸ்ஸைச் சாப்பிடவேண்டியதுதான்.

வருணன் ருச்சால் நமஸ்காராதி உபசாரம் செய்கிறான். அதன் தேவதைக்கே உபசாரம் செய்ததாகும்.

## அநுவாகம். 10:.

ப்ராசீநவம்ச, ஸமீபகதஸ்ய ஸோமஸ்ய ஸத்காரார்த்தம் ஆதித்யேஷ்டி:— ப்ராசீனவம்ச ஸமீபத்தை அடைந்த ஸோமனை மரியாதை செய்து ஆதித்யம் செய்து வைத்தல்.

1 (ஹவிஸ்ஸைப் பார்த்து) அதிதிரூபனை அக்கியின் பூஜாத் ரவ்யம் ஆகிறாய். (அந்த) உன்னை விஷ்ணு(என்றஸோமனுக் கு)க்கொடுக்கிறேன். ஸோமனுக்கு பூஜாத்ரவ்யமாகிறாய். விஷ்ணுவுக்குன்னை. அதிதிக்கு பூஜாத்ரவ்யமாகிறாய். உன் னை விஷ்ணுஎன்ற ஸோமனுக்குக் கொடுக்கிறேன். உன்னை தனஸம்ருத்தியைக் கொடுக்கும் அக்னிக்கு (உன்னை விஷ் ணுவுக்கு) உன்னை ஸோமனைச் சுமந்த ச்யேனனுக்கு--விஷ் ணுவுக்கு உன்னை.

2 (ஸோமனே.) உமது எந்த ஸ்தானங்களை அவிஸ்ஸால்பூஜிக்
கின்றோமோ அவைகளெல்லாம் யாகத்தைச் சூழ்ந்துஇரட்
சிக்கட்டும், ஸோமனே, விசேஷமாக எங்களுக்கு வீடுகளை
அபிவிருத்தி செய்து கொண்டும், இந்த யாகத்தின் கரை
யைச் சேர்ப்பிக்கிறவராயும்,நல்லவீரர்களான (புத்ரபௌத்
ரர்களைக்) கொடுத்துக் கொண்டும் இந்த வீரர்களைக்கொல்
லாமலும் (இந்தப்ராசீநவம்ச) க்ருகத்துக்குள் பிரவேசியும்.
3 அதிதியின் ஆஸனமாகிறாய். (உட்காரும் பலகையின் மேல்
க்ருஷ்ணாஜினத்தைப் போட்டு அதைப் பார்த்து) அதிதி
யின் ஆஸனத்தில் உட்காரும்.

4 (ஸோமத்தைப் பார்த்து.) வருணபாசத்தை நிவாரணம்
செய்கிறவர். (யக்ஞரூபமான) வ்ரதத்தை எடுத்துக் கொண்
டவர். (கட்டி இருப்பதால்) வருணசம்பந்தமுள்ளவர். உங்
கள் சுகத்திற்குக் காரணமான தேவர்கள் சகாயத்தால் தே
வர்கள்(யாக) கர்மாவின் விச்சேதம் இல்லாமலிருக்கட்டும்.
5 (ஆஜ்யத்தைப் பார்த்து) ப்ராணனுக்காக உன்னை (இந்த
பாத்திரத்தில்) எடுத்துக் கொள்ளுகிறேன். நாநாவிஷயங்க
ளில் செல்லும் மனதிற்காக) உன்னை எடுத்துக் கொள்ளு
கிறேன். சரீரத்தை நசிக்காமலிருக்குமாறு வைத்திருக்கும்
(ஜடராக்னிக்காக) உன்னைஎடுத்துக்கொள்ளுகிறேன். சக்தி
ஸ்வரூபத்திற்காக உன்னை எடுத்துக்கொள்ளுகிறேன்.
(எட்டாவது தாதுவான சக்தியை நிலை நிறுத்தும் சுவப
வமுள்ள) ஓஜஸ்ஸுக்காக உன்னை எடுக்கிறேன்.

6 (தாநூநப்த்ரம் என்ற ஹோமத்திற்கு வேண்டிய ஆஜ்யத் தைப்பார்த்து)(இதற்கு முந்தி ஒருவராலும்) அவமதிப்பை யடை யாதவர்,இனிமேலும் அவமதிக்கப்படக்கூடாத தேவர்களின் ஓஜஸ்

லாகிறீர் ஒருவருக்கொருவர் விரோதமென்ற ஹிம்ஸைகளிலிருந்து இரட்சிக்கிறீர். நீரோ விரோதத்திற்கு விஷயமாகாதவர்.

7 தீக்ஷைக்குப் பதியான தேவன் என் தீக்ஷையை அனுமதிக்கட்டும். உபஸத்தென்ற கர்மாவின் பதி என் தபஸ்ஸை அனுமதிக்கட்டும். நான் (தானூநப்த்ர மென்ற ஹோமாஜ்யத்தைத் தொட்டு) சபதத்தைச் செய்திருக்கிறேன என்னைச் சரியான (யக்ஞ கர்மாவின்) மார்க்கத்தில் நிறுத்தும்.

குறிப்பு:—

(1) ஆதித்யம் செய்வதற்கான ஹவிஸ் கொடுப்பதற்கு மந்த்ரங்கள் சொல்லப்படுகின்றன.

இந்த மந்த்ரத்திலுள்ள "விஷ்ணவே" என்றதற்குப் பிறகு "ஜுஷ்டம் நிர்வபாமி" என்று சேர்த்து ஐந்து மந்த்ரங்களாக்க வேண்டும் என்றுகல்பம் கூறுகின்றது.

ராஜாவுக்குச் செய்கிற மரியாதை பரிவாரங்களுக்கும் செய்யப்படுவது போல் ஸோமனை உத்தேசித்த ஸத்காரங்கள் அவன் ஸம்பந்தமான தேவதைகளுக்கும் அமைகின்றன.

(2) யஜமானன் ஸோமராஜாவுடன் கிழக்குப்புறமாகப்ரவேசிப்பதற்கு மந்த்ரம்.

(3) ஆஸந்தி என்ற நாற்காலியில் மான்தோலைப் பரப்பவும், மான்தோலின் மேல் ஸோமலதையை வைப்பதற்கும் மந்த்ரம்.

(4) ஸோமனை வரிப்பதற்கும், வஸ்த்ரம்சாத்துவதற்கும் மந்த்ரங்கள்.

(5) தானூநப்த்ர ஹோமம் செய்வதற்காக ஆஜ்யம் எடுப்பதற்குஐந்து மந்த்ரங்கள் கூறப்படுகின்றன.

"க்ருண்ஹாமி" என்று ஐந்து முறை கூறப்பட்டிருந்தாலால் அந்தர்வேதியில் வைக்கப்பட்டிருக்கிற பாத்திரத்தில் நெய்யை த்ருவையிலிருந்து ஐந்து முறை எடுத்துஊற்ற வேண்டும். தனூநப்த்ரம் என்றது ஜாடராக்நியாகும். அதற்குச் செய்யும் ஹோமமே தானூநப்த்ரமாம்.

(6) தானூநப்த்ராஜ்யத்தை எல்லா ருத்விக்குக்களும் தொடுவதற்கு மந்த்ரம்.

(7) யஜமானன் ஆஜ்யத்தைத் தொடுவதற்கு மந்த்ரம்.
ப்ராம்மணம் Vi—2—1 ஆதித்யேஷ்டி அபிதானம்

இரண்டு (காளைகளையும்) பூட்டவிழ்த்து ஆதித்யம் க்ரஹித்தால் யக்
ஞத்தைக்கெடுத்ததாகும். இரண்டு காளைகளையும் பூட்டவிழ்க்காமல் (செய்த
லசால்) (க்ருகத்துக்கு) வராதவனுக்கு ஆதித்யம் செய்கிறது போலாம். ஒரு
காளையைப் (பூட்டை விட்டு) அவிழ்க்க வேண்டும். மற்றொன்று அவிழ்க்கப்
படாமலிருக்க வேண்டும். ஆதித்யம் (அப்போது) கொடுப்பார். அது யக்ஞம்
கெடாமல் செய்யும். (யஜமானன்) பத்நீ (ஸோமனைக் கொண்டு வந்த) வண்
டியைத் தொடுகிறாள் ஏனெனில்பத்நீதான் வீட்டிலுள்ள தனதான்யங்களுக்
குப்பாத்யமுள்ளவள். பத்நியின் அநுமதியுடன் ஆதித்யம் செய்கிறான். பத்நி
யே யக்ஞகார்யத்திற்குத்துணையியாக ஆகிறாள். இந்தப்பத்நியினால்யக்ஞத்தை
தொடுதலே யக்ஞம் விச்சேதமில்லாமலிருக்கக் காரணமாகும். (ஸா—மந்த்
ரங்களுக்கு வ்யாக்யானம் செய்கிறார்). ராஜா எவ்வளவு அநுசர்களுடன்
வந்தாலும் அவ்வளவு பேர்களுக்கும் ஆதித்யம் செய்யப்படும். சந்தஸ்ஸுக்க
ளே ஸோமராஜனுடைய அநுசரர்களுவார்கள். அக்நிக்கு ஆதித்யமாவாய்'
விஷ்ணுவுக்கு உன்னை என்றார் இப்படியேதான் காயத்ரீக்கு (ஆதித்தியம்
செய்கிறார் ஸோமனுக்கு ஆதித்யமாவாய், விஷ்ணுவுக்கு உன்னை,' என்றார்
இப்படியே தான் த்ருஷ்டுப்புக்கு ஆதித்யம் செய்கிறார். அதிதியின் ஆதித்ய
மாவாய் விஷ்ணுவுக்கு உன்னை என்றார் இப்படியேதான் ஜகதீக்கு (ஆதித்
யம்) செய்கிறார் தனஸம்ருத்தி செய்விக்கும் அக்நிக்காக விஷ்ணுவுக்குஉன்
னை என்றார். இப்படியேதான் அனுஷ்டுப்புக்கு ஆதித்யம்) செய்கிறு. ஸோ
மனைக் கொணர்ந்த ச்யேனனுக்கு யருடன்) விஷ்ணுவுக்கு உன்னைஎன்க
றார் காயத்ரீக்குத்தான் இதனால் செய்கிறார்.

[ஸா—ஸோமனுடைய ப்ருத்யர்கள் அக்நிமுதலானவர்களைச் சொன்
னதாலேயே காயத்ரீ முதலான சந்தஸ்களையும் சொன்னபடியாம் அக்நி முத
லிய பேர்களைச் சொல்லிக் காயத்ரீ முதலியவைகளைக்குறிப்பிட்டு ஆதித்யத்
தை அந்தந்தத் தேவதைகளுக்குச்சம்பந்தப் படுத்துவதில் இந்தப்ராஹ்மணம்
தான்ப்ரமாணம்]

[ஆதித்யம் கொடுக்க வேண்டிய அளவை அடியில் விதிப்பர்.]

ஐந்து தடவை கொடுப்பார், பங்க்தி ஐந்து அக்ஷரங்களாலானது, யக்
ஞம் ஐந்தாலானது, யக்ஞத்தையே அடைகிறான்.

[ஸா—ஆதி அந்தங்களில் காயத்ரீ தேவதைக்கு இரண்டு தடவை
குறித்ததற்கு ப்ரச்ந, உத்தரமாக விளங்குகிறார்.]

ப்ரம்ம வாதிகள் சொல்வார்கள், 'என்ன காரணத்தால் காயத்ரீக்கு
ஆதித்யத்தின் இருபக்கங்களிலும் கொடுக்கப்படுகிறது,' என்று; எதனால்
என்றால், இதுவே ஸோமத்தைக் கொண்டு வந்தது. இந்த காயத்ரீக்கு ஆதித்

யத்தில் இருபக்கங்களிலும், (முன்னாலும் பின்னாலும்) கொடுக்கப்படுகிறது.
[ஸா—விதிப்பார். ஆதித்யமேசிரஸ்ஸுமேல்விசேஷமான அங்கம்.]
ஆதித்யம் என்பதுவே யக்ஞத்தின் சிரஸ்ஸேயாம். புரோடாசம் ஒன்பது கபாலத்தில் வைக்கவேண்டும், ஆதலால் சிரஸ்ஸும் ஒன்பது கபாலத்தால் (மண்டை ஓட்டுச்சில்லுகளால்) தேய்த்துவிடப்பட்டிருக்கிறது.

[ஸா— சொன்னதையே, திரும்பச் சொல்லி ப்ரசம்ஸைசெய்கிறார்.]
'புரோடாசம் ஒன்பது கபாலமாகும்' அந்தமூன்று கபாலங்களும் த்ருவ்ருத் தென்ற ஸ்தோமங்களுடன் கணக்கு சமமாக இருக்கிறது. தேஜஸ் த்ருவிருத்தாகும். தேஜஸ்ஸையே யக்ஞத்தின் சிரஸ்ஸில் வைக்கிறார் [ஸா— த்ருவ்ருத்தென்று ஸ்தோமத்தில் மூன்று ஸூக்தங்கள். ஒவ்வொரு ஸூக்தத்திலும் மும்மூன்று ரிக்குக்கள். இதனால் நவகபாலத்தின் கணக்கை ஒக்கும். த்ருவ்ருத் ப்ரஜாபதியின் முகத்தினின்று அக்நியுடன் பிறந்ததால் தேஜஸ் பெறும். அதனால் யக்ஞ சிரஸ்ஸான ஆதித்யமும் தேஜஸ் பெற்றது என்றவாறு இதையே திரும்பச் சொல்லி ப்ரசம்ஸை செய்கிறார்]

புரோடாசம் ஒன்பது கபாலமாகும்' மும்மூன்று கபாலங்கள் மூன்றுகணக்குள்ள ப்ராணனுக்குச் சமமாம் ப்ராணன்மூன்று கணக்குள்ளதாம். யக்ஞத்தின் சிரஸில் மூன்றுகணக்குள்ள ப்ராணனையே முறையாக வைக்கிறார்.

ஸா—[மேல், கீழ், மத்யமென்றது மூன்று கணக்கான ப்ராணன். ஒன்பது சித்ரங்களில் ஸஞ்சாரம் செயலால், ஒன்பது எண்ணிக்கை கொண்டது ப்ராணன்.]

'அச்வவால மென்ற காசதர்ப்பங்களே, ப்ரஜாபதியினுடைய இந்தா கண் மயிர்களாம் (eyelashes). கரும்பின் இலைகளே இமைகளாம். காசதர்ப்பங்களை ப்ரஸ்தரமாகச் செய்து கரும்பு இலைகளை இமைகளாக அமைப்பதாலேதான் ப்ரஜாபதியின் கண்ணாகி விடும்.

ஸா—[ஸோமன் சிறகு பலாசமானது போலும். ஜலத்தில் சுத்தமான அம்சம்தர்ப்பமானதுபோலும் ப்ரஜாபதியின் இமையும்கண்மயிரும்காசதர்ப்பாயும் கரும்பாயும்ஆயின என்றுவேறு இடங்களில் கூறுவர்.]

தேவர்கள் தான் ஆஹுதிகளைச் செய்தார்கள். அவைகளை அஸுரர்கள் ஓசையில்லாமல் தின்று விட்டார்கள் அந்த தேவர்கள் கார்ஷ்மர்ய விருக்ஷத்தைப் பார்த்தார்கள். இது வேலைக்குத் தகுதியானது. இதால் வேலை செய்யலாமென்று கார்ஷ்மர்ய விருக்ஷத்தால் பரிதிகளைச் செய்தார்கள். இவைகளால் தானே ரக்ஷஸ்களை அடித்தார்கள். ஆதலால் பரிதிகள் கார்ஷ்மமயமானால் இராக்ஷதர்கள் அடித்தோட்டப்படுவார்கள்.

[ஸா—தக்ஷிண, உத்திர பரிதிகளோடு மத்யபரிதியைச்சேர்க்கவிதித்தார்.]

இராக்ஷஸர்கள் நடுவில் போகாமலிருப்பதற்கு சேர்க்கிறார். முன்னால் (கிழ்ப்பக்கத்தில்) வைப்பதில்லை. ஆதித்யனே உதித்து இராக்ஷஸர்களை வெருட்டிவிடுகிறான். இரண்டு சமித்துக்களை செங்குத்தாய்ச் சொருகுவார். மேலே இருந்து இராக்ஷஸர்களை வெருட்டிவிடுவார்கள். ஒன்றையஜுஸோடும் மற்றொன்றை மந்த்ரமில்லாமலும்வைப்பார் இதுஜோடியாகஇருப்பதற்கே.

ஸா—[தக்ஷிணத்தில் வைப்பது மந்த்ரத்தோடும் உத்தரத்தில் வைப்பது மந்த்ர மில்லாமலும்]

இரண்டையே வைக்கிறான். யஜமானனும் இரண்டு பாதங்களுள்ளவன் ப்ரதிஷ்டை அடைவதற்கு இது.

ப்ரம்ம வாதிகள் கேட்டார்கள், 'இவர்கள் (யாகநிர்வாஹகர்கள்) அக்நியும்ஸோமனும். ஸோமனுக்கு ஆதித்யமேன்? அக்நிக்கு ஏனில்லை' அக்நியைக் கடைந்து (மந்தனம் செய்து) (ஆஹவநீயாக்நியில் போடுகிறதாலேயே அக்நிக்கு ஆதித்யம் செய்யப்படுகிறது.

ஸா—[அக்நியை மந்தனம்செய்யக் காலத்தை விதிப்பார்.]

அல்லது அக்நியை ஸர்வதேவதைகளென்பர்.

ஹவிஸ்ஸை வைத்து விட்டு அக்நியைக் கடைவதால் வைக்கப்பட்ட அவிஸுக்காகவே ஸர்வ தேவதைகளையும் உண்டாக்குகிறான்.

தாநூநப்த்ரேஷ்டி-அபிதானம்

தேவஸுரர்கள் சண்டை போட்டார்கள். தேவர்கள் ஒருவருக்கொருவர் கலகப்பட்டுக் கொண்டார்கள். ஒருவரைவிட மற்றொருவர் பெரியவர் என்று ஒத்துக்கொள்ளாமல் ஐந்து கூட்டமாகப்பிரிந்தார்கள் வஸுக்களோடு அக்நியும், ருத்ரர்களோடு ஸோமனும், மருத்துக்களுடன் இந்த்ரனும், ஆதித்யர்களுடன் வருணனும், விசுவேதேவர்களுடன் ப்ருகஸ்பதியும் (சேர்ந்தார்கள்). அவர்கள் ஆலோசித்தார்கள்: நாம் ஒருவருக் கொருவர் கலகப்பட்டுக் கொண்டு சத்துருக்களான அஸுரர்களுக்கல்லவா ப்ரயோஜனம் செய்து வைக்கிறோம்? எவர்கள் (நமக்கு) ப்ரியசரீரங்களோ அவர்களைச் சேர்த்து வைப்போம். நம்மில் எவன் முதல் முதல் இன்னொருவனுக்கு த்ரோஹம் செய்கிறானோ அவன் அவர்களிடமிருந்து போய்விடவேண்டும். — (இந்தே

கர்கள் சபதம் செய்து கொண்டது போல்) எவன் சபதம் செய்து கொண்டவர்களுள் முதலில் த்ரோஹம் செய்கிறானோ அவன் நாசத்தை அடைகிறான்.

[ஸா . தாநூநப்த்ருஎன்ற ஜடராக்நிவிஷயமான சபதகர்மாவிற்குக் காரணமாகிய தாநூநப்த்ரமான ஆஜ்யத்தை எடுக்க விதிக்கிறார் ]

தாநூநப்த்ரத்தைச் சேர்த்துப் பிரிப்பதால் சத்துருநாசத்திற்காக ஆகிறது.தான் ஐசுவரியவனாகிறான். சத்ரு நாசமாகிறான்.

ஐந்து பாகம் செய்கிறான். ஐந்து கூட்டமாகவேதான் அவர்கள்பிரிந்தார்கள். பிறகு ஐந்தக்ஷரங்களுள்ளது பங்க்தி. யக்ஞம் ஐந்தாலானது. யக்ஞத்தையே அடைகிறான்.

[ஸா—மந்த்ர வியாக்யாநம்]

"ஆபதிக்காக உன்னை எடுக்கிறேன்" என்றார், ஆபதி என்பது ப்ராணனே ப்ராணனுக்கே ப்ரியம் செய்கிறான். சுற்றி ஓடுபவனுக்கு என்றார் சுற்றி ஓடுபவன் மனமே. மனதையே ப்ரியப்படுத்துகிறான் தாநூநப்தாவுக்குஎன்றார், ஏனெனில் இந்த சரீரங்களையேதான் பங்கிட்டிருந்தார்கள். சக்தி ஸ்வரூபத்திற்காக என்றார்,சக்திக்காகத்தான் அவைகளைப் பங்கிட்டார்கள். சக்தியை நிறுத்தும் ஓஜஸ்ஸுக்காக என்றார், ஏனெனில் தங்கள் சக்தியைநிறுத்தும் ஓஜஸ்ஸையே பங்கிட்டார்கள்.

"அவமதிப்பை அடையாதவர், அவமதிக்கமுடியாதவர்."

என்றார்: அது அவமதிப்பை அடையாததுதான். அவமதிக்க முடியாததும்தான். 'தேவர்களின் ஓஜஸ்ஸென்றார் அது தேவர்களின் ஓஜ்ஸ்ஸே-ஹிம்ஸைகளிலிருந்து ரக்ஷிக்கிறவர் ஹிம்ஸைக் குள்ளாகாதவர் என்றார் அது ஹிம்ஸையிலிருந்துரக்ஷிக்கும்,ஹிம்ஸைக்குள்ளாகாததுமேயாகும். தீக்ஷைக்குப்பதியானவர் எனது தீக்ஷையை அநுமதிக்கட்டும் என்றார் அது யஜுஸ்ஸுப்படித்தான்.

---

## அநுவாகம். 11.

ஸோமகரணக கரிஷ்யமாண யாகவிக்ந கார்ய—அஸுரபராபாவார்த்த-உபஸத்-வர்ணநம்.

(ஸோமத்தால் செய்யப்படப்போகிற யாகத்திற்கு விக்நம் செய்யும் அஸுரர்களை ஜயிப்பதற்கு உபஸத்தைவர்ணிப்பது.)

1 ஸோமனே, உனது ஒவ்வொரு ருத்தும் (காய்ந்தவைகளும், வற்றிப் போனவைகளையும்)வ்ருத்தி அடையட்டும்.

ஸோம மென்ற தனத்தையே ப்ரூக்யமானவும் சோபனமானவுமான தனமாக அடையும் இந்த்ரனுக்காக—ஸோம, உனக்காக இந்த்ரன் உத்ஸாகத்தை அடையட்டும்-நீயும் இந்த்ரனுக்காக விருத்தியடை-(உனது) ஸகாக்களான (ருத்விக்குக்கள்) தனத்தாலும், ப்ரஜ்ஞையாலும் விருத்தி அடையட்டும் ஸோம தேவனே, உமக்குச் சுபம் உண்டாகட்டும். உமது ப்ரஸாதத்தாலே அபிஷவத்தை ஸோமத்தின் பிழிதலை அடைவோனாக.

2 [த்யாவாப் ருதிவீ (மண்விண்ணுக்கு அபிமாநியான தேவதையே] தயவாகப்பக்தர்களிடம் இச்சையையுடையோனே தனத்திற்காகவும் அன்னத்திற்காகவும் பகத்திற்கும் (ஐச்வர்யாதி ஆறு குணங்கள் சித்திப்பதற்கும்) யக்ஞத்தைசமூமுக்கும். எங்களுக்கு யக்ஞத்தை விசேஷமாகச் செய்யும்.

3 வ்ரதபதியே, அக்நியே; நீர் (ஸர்வவ்ரதங்களுக்கும் பதியானவர். (வ்ரதமநுஷ்டிக்கும்) என் சரீரத்தை (மனதால்) உம்மிடத்தில் அர்ப்பித்திருக்கிறேன். (வ்ரதத்தைக்காக்கும்) உமது சரீரமானது என்னிடத்தில் (மனதால்) ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது, நம்மிருவர் வ்ரதங்களும் சேர்ந்து ப்ரவர்த்திக்கட்டும்.

4 அக்நியே, எந்த உமது சரீரம் க்ரூரமானதோ அதாலேயே எங்களை இரட்சியும். அந்த சரீரத்திற்கு ஸ்வாஹா.

5 அக்நியே, உமது இரும்பில் தங்கும் சரீரம், மிகப் பெரியது, தொடமுடியாதது. (அப்படியே) வெள்ளியில் தங்கும் சரீரமும், தங்கத்தில் தங்கும் சரீரமும், அதனால் உக்ரமான வார்த்தையையும், மனதைப் புண்படுத்தத் தக்கதான வார்த்தையையும் நாசம் செய்துவிட்டேன், உமக்கு ஸ்வாஹா.

---

குறிப்பு:—

முன்பு பத்தாவது அநுவாகத்தில் ஆதித்யேஷ்டியைச் சொன்னார் அதில் ஸோமன் ப்ராக் வம்சத்தில் வைக்கப்பட்டது. இந்த ஸோமனைக்

கொண்டு செய்யப்படப் போகிற யாகத்திற்கு விக்நம் செய்யும் அசுரர்களை ஜயிப்பதற்கு உபஸத் என்ற ஹோமத்தை வர்ணிப்பதற்கு முன்பு அதிதியான ஸோமனைக் கட்டிஉபத்ரவம் செய்ததற்குப்பரிகாரமாக உபசாரம் செய்யப்படுகிறது. முதல் மந்த்ரத்தைச் சொல்லி, உஷ்ணமான தீர்த்தத்தைத் தொட்டு எழுந்து நின்று, கட்டைஅவிழ்த்து, ஹிரண்யத்தை வைத்து ஸோமராஜாவை த்ருப்தி செய்யவேண்டும். இரண்டாவதில், ஆதித்யேஷ்டியில் வைத்த ப்ரஸ்தரம் (தர்ப்பை) அக்நியில் போடாமல் ப்ரஸ்தரத்தை வேதிக்குத் தெற்குப் பாகத்தில் வைத்து அந்த ப்ரஸ்தரத்தில் வலதுகைகளை நிமிர்த்திக்கொண்டு இடதுகைகளை அவைகளின் கீழ் வைத்து எல்லோரும் சொன்னதும் செய்ததும் அபராதம் என்று நமஸ்கார, உபசாரம் செய்யவேண்டும்.

பகம் என்றது, பூர்ணமான ஐச்வர்யம், தர்மம், யசஸ், ஸ்ரீ, ஞானம், வைராக்யம், என்னும் ஆறு குணங்களுமாம்.

மூன்றாவது:— இதனால் ஆகவநீயாக்நியைத் தொழுதல் இப்பொழுதேஅவாந்தரதீக்ஷை (—நடுவில்வேறொருதீக்ஷை) ஆரம்பம்.

நான்காவது:- மேகலையை முடித்துப்போட்டுச் சிறியதாக்க வேண்டும். இருமுஷ்டிகளையும் இறுகமூடிக்கொள்ளவேண்டும் க்ஷீரத்தையும் உதகத்தையும் உஷ்ணமாக வைத்துக்கொள்ளவேண்டும் சமஸம் என்ற மர அகப்பையைப் போட்டுவிடவேண்டும். இதே மந்த்ரத்தால் வ்ரதப்பாலையும் சாப்பிடவேண்டும்.

ஐந்தாவதால்— ஆஜ்யஸ்தாலியை ஸ்ருவம் என்ற காண்டியினால் நிரப்பி முதல் உபஸத் ஹோமத்தை 'இரும்பில் தங்கும்' என்று ஹோமம் செய்யவேண்டும். முறையே, இரண்டாவது, மூன்றாவது உபஸத் ஹோமங்களை, வெள்ளியில் தங்கும், ஸ்வர்ணத்தில் தங்கும்' என்ற பதங்களைக் கூட்டிச் செய்யவேண்டும்.

Vi—2—2 உபஸத்தோமாபிதாநம்:—

ஸா— [இந்த மந்த்ரத்தை வ்யாக்யாநம் செய்யத் தொடங்குவார்:—]

ப்ராம்மணம் "தேவர்கள், க்ருதத்தையே (நெய்) வஜ்ரமாகச் செய்து ஸோமனை அடித்தார்கள். தாநூநப்த்ர (ஹோமம்) செய்யும்போது இதன் (ஸோமத்தின்) சமீபத்துக்கு (வருவது) போல் வருகிறார்கள்.

[ஸா— முன்பு ஒருசமயம் தங்கள் வைபவத்தால் நெய்யை வஜ்ரமாகச். செய்துகொண்டு ஸோமனை தேவர்கள் அடித்ததால் ஸோமனுக்கு நெய்யிடத்தில் பயம் ஏற்பட்டது. ருத்விக்குக்கள் தாநூநப்த்ர ஆஜ்யத்தால் ஹோமம் செய்வதற்கு ஸோமத்தின் சமீபத்தில் வரும்போது ஆஹவநீயாக்நியின் தக்ஷிணபாகத்தில் ஸோமம் இருப்பதால், அவர் பயப்படாமலிருக்க அவரைத் தேறுதல் செய்யவேண்டியதாகிறது. இதைக்குறித்துவிட்டு மந்த்ரத்தை வ்யாக்யாநம் செய்கிறார்.]

ப்ராம்மணம். 'ஸோமதேவனே உனது ஒவ்வொரு குருத்தும் வ்ருத்தி அடையட்டும்' என்றார். அதில் ஏதாவது உலர்ந்தாவது குறைந்தாவது போனால் இதனால் அதைச் சுத்தமாக்குவார் "உனக்காக இந்த்ரன், உத்ஸாகமடையட்டும். இந்த்ரனுக்காக நீயும் விருத்தி அடை." என்றார் இந்த்ரனையும் ஸோமனையும் (இருவரையும்) வ்ருத்தி செய்கிறார். "உமது ஸகாக்கள் தனத்தாலும் ப்ரக்ஞையாலும் வ்ருத்தி அடையட்டும்" என்றார். ருத்விக்குகளே அவர் சகாக்கள். ருத்விக்குக்களால் அவர்களையே வ்ருத்தி அடையச் செய்கிறான். "உமக்கு சுபமுண்டாகட்டும் (உமது ப்ரஸாதத்தாலே) அபிஷவத்தை அடைவேனாக", என்றார் இந்த ஆசீர்வாதத்தைச் சொல்லிக் கொள்ளுகிறார்.

[ஸா — மந்த்ரத்தில் சொன்ன நமஸ்காரத்திற்கு நிமித்தத்தைக் குறிப்பார் — ஸோமனை வ்ருத்தி செய்பவர்கள் இந்தலோகத்திலிருந்து நழுவுகிறார்கள். விருத்தி அடைந்த ஸோமன் அந்தரிக்ஷத்திற்குத் தெய்வமாம். "இச்சையை உடையோனே, தனத்திற்காகவும், அன்னத்திற்காகவும், ஐச்வரியத்திற்காகவும்" என்றார். மண், விண்ணுலகங்களுக்கே நமஸ்காரம் செய்து இந்த உலகில் ப்ரதிஷ்டையை அடைகிறான்,

[ஸா — ஸோமனை நாபிவரையி லுயரமுள்ள ஒருநாற்காலியில் இருக்கச் செய்தலால் அந்தரிக்ஷ தேவதையாம். அந்த தேவனை த்ருப்தி செபவர்களும் அப்படியே ஆவர் ஆனதால் இந்த லோகத்திருந்து நழுவுவரென்றே நமஸ்காரம் செய்கிறார். "வ்ரதபதியே, அக்கியே" என்ற மந்த்ரத்தின் அர்த்தம் தெளிவென்று, அவாந்தர தீக்ஷையை விதித்தார்:—]

ப்ராம்மணம்- தேவர்களும் அஸுரர்களும்சண்டைபோட்டார்கள். தேவர்கள் பயந்து அக்கியில் ப்ரவேசித்தார்கள். ஆதலால் அக்கியே ஸர்வதேவதைகள் என்பார்கள். அவர்கள் அக்கியையே துணையாகக்கொண்டு அஸுரர்களை ஜயித்தார்கள். அவாந்தர தீக்ஷையை அடைகிறவன் அக்கியிலேயே ப்ரவேசிக்கிறது போலாம். சத்ருருக்கள் நாசத்தின் பொருட்டாகுமாம். தானும் செல்வத்தை அடைகிறான், சத்ருருவும் அபஜயத்தை அடைகிறான்.

[ஸா — யோகசாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறபடி. ஸம்யமவிசேஷத்தால் பரகாயப்ரவேசசக்தி பெற்ற தேவர்கள் அக்கிசரீரத்தில் புகுந்தார்கள். அவாந்தரதீக்ஷை தபஸ்ஆனதால், அக்கிஸமமாம். அதை அடையவேண்டியது.

ப்ரா- தன்னையும், அவாந்தர- தீக்ஷையால் ப்ரஜையையும் காப்பாற்றிக்கொள்ளுகிறான்.

[ஸாயணர் அவாந்தர தீக்ஷையை விதிப்பார்:—]

ப்ரா — மேகலையை (அரைஞாணை) இன்னும் இறுக்கிக் கட்டுகிறான் ப்ரஜையே,தன்னைக்காட்டிலும் நெருங்கினதாம். காய்ச்சின பாலைக்

கொண்டு செய்யப்படப் போகிற யாகத்திற்கு விக்நம் செய்யும் அசுரர்களை ஜயிப்பதற்கு உபஸத் என்ற ஹோமத்தை வர்ணிப்பதற்கு முன்பு அதிதியான ஸோமனைக் கட்டி உபத்ரவம் செய்ததற்குப்பரிகாரமாக உபசாரம் செய்யப்படுகிறது. முதல் மந்த்ரத்தைச் சொல்லி, உஷ்ணமான தீர்த்தத்தைத் தொட்டு எழுந்து நின்று, கட்டை அவிழ்த்து, ஹிரண்யத்தை வைத்து ஸோமராஜாவை த்ருப்தி செய்யவேண்டும். இரண்டாவதில், ஆதித்யேஷ்டியில் வைத்த ப்ரஸ்தரம் (தர்ப்பை) அக்நியில் போடாமல் ப்ரஸ்தரத்தை வேதிக்குத் தெற்குப் பாகத்தில் வைத்து அந்த ப்ரஸ்தரத்தில் வலதுகைகளை நிமிர்த்திக் கொண்டு இடதுகைகளை அவைகளின் கீழ் வைத்து எல்லோரும் சொன்னதும் செய்ததும் அபராதம் என்று நமஸ்கார, உபசாரம் செய்யவேண்டும்.

பகம் என்றது, பூர்ணமான ஐச்வர்யம், தர்மம், யசஸ், ஸ்ரீ, ஞானம், வைராக்யம், என்னும் ஆறு குணங்களுமாம்.

மூன்றாவது:— இதனால் ஆகவநீயாக்நியைத் தொழுதல் இப்பொழுதே அவாந்தரதீக்ஷை (—நடுவில்வேறொருதீக்ஷை) ஆரம்பம்.

நான்காவது:- மேகலையை முடித்துப்போட்டுச் சிறியதாக்க வேண்டும். இருமுஷ்டிகளையும் இறுகமூடிக்கொள்ளவேண்டும் க்ஷீரத்தையும் உதகத்தையும் உஷ்ணமாக வைத்துக்கொள்ளவேண்டும் சமஸம் என்ற மர அகப்பையைப் போட்டுவிடவேண்டும். இதே மந்த்ரத்தால் வ்ரதப்பாலேயும் சாப்பிடவேண்டும்.

ஐந்தாவதால்— ஆஜ்யஸ்தாலியை ஸ்ருவம் என்ற காண்டியினால் நிரப்பி முதல் உபஸத் ஹோமத்தை 'இரும்பில் தங்கும்' என்று ஹோமம் செய்யவேண்டும். முறையே, இரண்டாவது, மூன்றாவது உபஸத் ஹோமங்களை, வெள்ளியில் தங்கும், ஸுவர்ணத்தில் தங்கும்' என்ற பதங்களைக் கூட்டிச் செய்யவேண்டும்.

Vi—2—2 உபஸத்ஹோமாபிதாநம்:—

ஸா— [இந்த மந்த்ரத்தை வ்யாக்யாநம் செய்யத் தொடங்குவார்:—]

ப்ராம்மணம் "தேவர்கள், க்ருதத்தையே (நெய்) வஜ்ரமாகச் செய்து ஸோமனை அடித்தார்கள். தாநூநப்த்ர (ஹோமம்) செய்யும்போது இதன் (ஸோமத்தின்) சமீபத்துக்கு (வருவது) போல் வருகிறார்கள்.

[ஸா— முன்பு ஒருசமயம் தங்கள் வைபவத்தால் நெய்யை' வஜ்ரமாகச் செய்துகொண்டு ஸோமனை தேவர்கள் அடித்ததால் ஸோமனுக்கு நெய்யிடத்தில் பயம் ஏற்பட்டது. ருத்விக்குக்கள் தாநூநப்த்ர ஆஜ்யத்தால் ஹோமம் செய்வதற்கு ஸோமத்தின் சமீபத்தில் வரும்போது ஆஹவநீயாக்நியின் தக்ஷிணபாகத்தில் ஸோமம் இருப்பதால், அவர் பயப்படாமலிருக்க அவரைத் தேறுதல் செய்யவேண்டியதாகிறது. இதைக்குறித்துவிட்டு மந்த்ரத்தை வ்யாக்யாநம் செய்கிறார்.]

ப்ராம்மணம். 'ஸோமதேவனே உனது ஒவ்வொரு குருத்தும் வ்ருத்தி அடையட்டும்' என்றார். அதில் எதாவது உலர்ந்தாவது குறைந்தாவது போனால் இதனால் அதைச் சுத்தமாக்குவார் "உனக்காக இந்த்ரன், உத்ஸாக மடையட்டும். இந்த்ரனுக்காக நீயும் விருத்தி அடை." என்றார் இந்த்ரனையும் ஸோமனையும் (இருவரையும்) வ்ருத்தி செய்கிறார். "உமது ஸகாக்கள் தனத்தாலும் ப்ரக்ஞையாலும் வ்ருத்தி அடையட்டும்' என்றார். ருத்விக்குகளே அவர் சகாக்கள். ருத்விக்குக்களால் அவர்களையே வ்ருத்தி அடையச் செய்கிறான். "உமக்கு சுபமுண்டாகட்டும் (உமது ப்ரஸாதத்தாலே) அபிஷவத்தை அடைவேனாக", என்றார் இந்த ஆசீர்வாதத்தைச் சொல்லிக் கொள்ளுகிறார்.

[ஸா — மந்த்ரத்தில் சொன்ன நமஸ்காரத்திற்கு நிமித்தத்தைக் குறிப்பார் — ஸோமனை வ்ருத்தி செய்பவர்கள் இந்தலோகத்திலிருந்து நழுவுகிறார்கள். விருத்தி அடைந்த ஸோமன் அந்தரிக்ஷத்திற்குத் தெய்வமாம். "இச்சையை உடையோனே, தனத்திற்காகவும், அன்னத்திற்காகவும், ஐச்வரியத்திற்காகவும்" என்றார். மண், விண்ணுலகங்களுக்கே நமஸ்காரம் செய்து இந்த உலகில் ப்ரதிஷ்டையை அடைகிறான்,

[ஸா — ஸோமனை நாபிவரையி லுயரமுள்ள ஒருநாற்காலியில் இருக்கச் செய்தலால் அந்தரிக்ஷ தேவதையாம். அந்த தேவனை த்ருப்தி செபவர்களும் அப்படியே ஆவர் ஆனதால் இந்த லோகத்திருந்து நழுவுவரென்றே நமஸ்காரம் செய்கிறார். "வ்ரதபதியே. அக்நியே" என்ற மந்த்ரத்தின் அர்த்தம் தெளிவென்று, அவாந்தரதீக்ஷையை விதித்தார்:—]

ப்ராம்மணம்- தேவர்களும் அசுரர்களும்சண்டைபோட்டார்கள். தேவர்கள் பயந்து அக்நியில் ப்ரவேசித்தார்கள். ஆதலால் அக்நியே ஸர்வதேவதைகள் என்பார்கள். அவர்கள் அக்நியையே துணையாகக்கொண்டு அஸுரர்களை ஜயித்தார்கள். அவாந்தர தீக்ஷையை அடைகிறவன் அக்நியிலேயே ப்ரவேசிக்கிறது போலாம். சத்ருருக்கள் நாசத்தின் பொருட்டாகுமாம். தானும் செல்வத்தை அடைகிறான், சத்ருருவும் அபஜயத்தை அடைகிறான்.

[ஸா— யோகசாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறபடி. ஸம்யமவிசேஷத்தால் பரகாயப்ரவேசசக்தி பெற்ற தேவர்கள் அக்நிசரீரத்தில் புகுந்தார்கள். அவாந்தரதீக்ஷ தபஸ்ஆனதால், அக்நிஸமமாம். அதை அடைய வேண்டியது.

ப்ரா- தன்னையும், அவாந்தர- தீக்ஷையால் ப்ரஜையையும் காப்பாற்றிக்கொள்ளுகிறான்.

[ஸாயணர் அவாந்தர தீக்ஷையை விதிப்பார்:—]

ப்ரா— மேகலையை (அரைஞாணை) இன்னும் இறக்கிக் கட்டுகிறான் ப்ரஜையே, தன்னைக்காட்டிலும் நெருங்கினதாம். காய்ச்சின பாலைக்

குடிக்கிறான். உஷ்ணமான ஜலத்தால் துடைத்துக் கொள்ளுகிறான். அக்னி சீதத்தால் அணையும் அல்லவா? உஷ்ணஜலத்தால், அக்னியை மூட்டலாம்

எல்லோரும் தன்னை சிரமப்படுத்திக் கொண்டாவது குழந்தைகளைப் பரிபாலனம் செய்வார்கள், ஆகையால் நெருங்கினதாம் என்றார். சீதமான பாலும், ஜலமும் உதராக்னியை மந்திக்கும். அது அப்படியாகாமல் எரிந்து கொண்டிருக்கவே கொடுக்கும் பாலையும் துடைக்கும் நீரையும் உஷ்ணமானது என்றார். மேலே ருத்ரியா சப்தத்தின் அபிப்ராயத்தை விளக்குவார்.

'எந்த உமது சரீரம் க்ரூரமானதோ,' என்றார் தன்தேவதையோ டேயே பாலை சாப்பிடுகிறான். இப்படி போஜனம் செய்வது ஒருயோகியிலிருந்துஉண்டான அக்னியுடன் சேர்வதற்கும்,(உக்ரமான அக்னியின்) சாந்திக்காகவும்.

இதையார் விடுவார் என்றார்கள். ருத்ரன், ருத்ரரே க்ரூரமானவர் அவரே விடட்டும் என்றார்கள். அவர்சொன்னார் நானே பசுக்களுக்கெல்லாம் அதிபதி ஆவேன என்று வரத்தை வரித்தார். ஆதலாலேயே ருத்ரன் பசுக்களுக்கு அதிபதியானார். அதை ருத்ரன் விட்டார் மூன்று புரங்களையும் அது துளைத்து இந்த இடங்களிலிருந்து அஸுரர்களைத் துரத்தி விட்டது.

[ஸா—முன்பு அக்னியால் அபஜயமடைந்த அஸுரர்களுக்குப் பூமி அந்தரிக்ஷ, ஸ்வர்க்கங்களில் தங்கள் ரக்ஷணத்திற்காக மூப்புரங்கள் கோட்டைகளாக இருந்தன. அவைகளில் பூமியிலுள்ளது உலோகத்தால் ப்ராகாரம்அமைந்தது. அந்தரிக்ஷத்திலுள்ளது வெள்ளிப்ராகாரமுடையது. ஸ்வர்க்கலோகத்திலுள்ளதற்கு தங்கப்ராகாரமாம் இக்கோட்டைகளை ஜெயிக்க அக்னிக்குச் சாத்யமாகாமல் யுத்தத்தை நிறுத்தி முற்றுகை போட்டார்கள். காலமாகஆக துர்க்கத்தில் அன்னபானக்ஷயந்தாலாவது, உடைத்து உட்புகுதலாலாவது ஜயமுண்டாகுமென்றார்கள். தெரிந்தவர்களென்பது வேதாத்யயனம் செய்த ப்ராமணர்கள். தெரியாதவர்களென்பது சூத்ரர்கள் முதலியவர்கள், காலதாமதமாகக் கூடாதென்றும் யுத்தம் செய்தே ஜயமடையலாமென்றும் ஒரு அம்பைத்தயாரித்தார்கள். அக்னி, ஸோமன், விஷ்ணு இவர்களைச்சேர்த்து ஒரு பாணமாக்கி ஜயிக்க முயன்றார்கள் மூன்று தேவதாஸ்வரூபமான பாணத்தை விட்டு ஸ்த்ரீ பாலர்களோடு எல்லா அசுரர்களையும் வதம் செய்ய ஆற்றல் உள்ளவன் ருத்ரனென்று அவனிடம் அம்பைக் கொடுத்து விடச்சொன்னார்கள்.

[ஸா— உபஸத் ஹோமங்களை விதித்துச் சொல்வார்—:]

ப்ராம்மணம்—"அந்தஅஸுரர்களுக்குமூன்று புரங்களிருந்தன; எல்லாவற்றிலும் தாழ்வானது இரும்பாலானது, அடுத்தது வெள்ளியாலானது, அதற்கடுத்தது ஸ்வர்ணத்தாலானது, அவைகளை தேவர்களால் ஜயிக்கமுடியவில்லை. அவைகளைச் சூழ்ந்து முற்றுகைபோட்டு ஜயிக்கமுயன்றார்

கள். ஆகையாலேயே, இதைத் தெரிந்தவர்களும் தெரியாதவர்களும் சொல்வார்கள்'' சூழ்ந்து முற்றுகை போட்டே, மகாபுரத்தை ஜயிக்கலாம் என்று ஒரு அம்பைத்தயார்செய்தார்கள். அக்நியைப் பாணத்தின் அடிப்பக்கமாகவும் ஸோமனை, (பாணத்தின் நுனியிலுள்ள) உலோகமாவும் விஷ்ணுவை, (அதன்) கூராகவும் ஆக்கினார்கள்.

'உபஸத்' என்ற ஆஹுதிகளை ஹோமம் செய்கிறது சத்ருக்கள்வெருட்டப்படுவதற்காகவே.

முதலில்வேறு ஆஹுதியை ஹோமம் செய்யக் கூடாது. முதலில் வேறு ஆஹுதியைச் செய்தால் வேறொன்றை முகமாகச் செய்ததாகும்.

ஸா— அக்நியை. ருத்ரபாணத்தில் அங்கமாக (முனை ஆகக்)கொண்டு இருத்தலால் அதை முகம் என்றார். ப்ரயாஜாதி ஹோமங்களில்வந்நிக்கு முகமென்பது இல்லை.

ஸ்ருவம் என்ற அகப்பையினால் யக்ஞத்தை ப்ரகடனப் படுத்த ஆகாரம் செய்கிறான். திரும்பிவராமல் வேதி, ஆஹவநீயங்களின் மத்யத்தைத் தாண்டி (ஸா—தக்ஷிண திக்கில் வடக்குமுகமாக நின்று வரிசையாக அக்நி ஸோமன், வருணன் இவர்களுக்கு மூன்று ஆஹுதிகளை,, —)ஹோமம் செய்யவேண்டும். (அப்போது) மறுபடி திரும்பி வரமுடியாதவர்களாக வைரிகளைச் செய்து இந்த (மூன்று) லோகங்களிலிருந்தும் வெருட்டிவிடுகிறார்கள். மறுபடி (நான்காது தடவை) (உத்திரகிக்நக்கு) வந்து உபஸத்தை ஹோமம் செய்யவேண்டும் [அப்போது வைரிகளை இந்த லோகங்களிலிருந்து வெருட்டி ஸ்வர்க்கம்போய் வைரிஸ்தானத்தை (புரத்ரயத்தை) அடைகிறான்.

தேவர்களோ, காலையில் செய்த உபஸத் (முற்றுகை)தால் பகலிலிருந்து அஸுரர்களை வெருட்டினார்கள்) ஸாயங்காலம் செய்த உபஸத்தால் இரவிலிருந்து (அவர்களை வெருட்டினார்கள்ஸாயம், காலை இரண்டு காலங்களிலும் யஜமானன் உபஸத்துகள் செய்யவே பகல் இரவு இரண்டுகாலங்களிலும் சத்ருக்களை வெருட்டுகிறார்கள். காலமே யாஜ்யா அனுவாக்யைகளை ஸாயம் புரோநுவாக்யைகளாகச் செய்யவேண்டும். ரஸம் (சக்தி) போய்விடாமலிருப்பதற்காக (இந்த விந்யாஸம்) மூன்று உபஸத்துகளை அனுஷ்டிக்கவேண்டும். லோகங்கள் மூன்றும். இந்த லோகங்களுக்கு ப்ரீதியைச் செய்கிறான்.

ஸா— மூன்று தினங்களிலும் இரண்டு காலங்களிலும் அனுஷ்டானத்தை விதிப்பார்:—

ப்ரா— சேர்ந்து ஆறுகும், ருதுக்கள் ஆறும். ருதுக்களையே ப்ரீதி அடையச் செய்கிறான்.

ஸா— இதே இடத்தில் இரண்டுநாள் முதற்கொண்டு அநேகநாள் செய்யப்படும் அஹீன-ஸோம யாகத்தில் உபத்தினங்களைக் கணக்குச் செய்வார்.

ப்ரா— அஹீநஹோம யாகத்தில் பன்னிரண்டு அனுஷ்டிக்க வேண்டும். ஸம்வத்ஸரம் பன்னிரண்டு மாதங்கள். ஸம்வத்ஸரத்தையே ப்ரீதியடையச் செய்கிறான்.

ஸா— பன்னிரண்டு தினங்களிலும் இரண்டு காலங்களிலும் அனுஷ்டானம் செய்வதைச் சொல்லுவார்.

ப்ரா— சேர்ந்து மொத்தம் இருபத்திநான்சாகும். இருபத்திநாலும் அர்த்த மாதங்கள். அர்த்தமாதங்களையே ப்ரீதிஅடையச் செய்கிறான்.

ஸா— இவ்வுபஸத்தினங்களில் அவாந்திர தீக்ஷையில் குடிக்க வேண்டிய விரதபான விஷயமாக ஸ்தனத்தின் ஸங்கியை சொல்வார்.

ப்ரா— இந்த உலகில் ஸம்ருத்தியைப்பெறவேண்டுமென்பவன் தார்நுனி போன்ற அவாந்தர தீக்ஷையை அநுஷ்டிக்க வேண்டும். முதலில் ஒன்று. பிறகு இரண்டு, பிறகு மூன்று பிறகு நான்கு இதுவே தார்நுனி. அவாந்தரதீக்ஷை இவ்வுலகத்திலேயே இவனுக்கு ஸம்ருத்தி உண்டாகும்.

ஸா— ஸோமக்கிரயதினத்தில் மாலை ஒரு காம்பு, மறுநாள் காலையில் இரண்டு காம்புகள், அன்றுமாலை மூன்று அதற்கு மறுநாள் காலை நான்கு காம்புகள் என்று மாட்டைக் கறக்கவேண்டும். பரலோக விஷயமாக ஸம்ருத்தியை வேண்டுபவனுக்கு இதற்குமாறாகவாவதை விதிப்பார்.

ப்ரா— மறுமையில் ஸம்ருத்தியை வேண்டுபவன் ஆரம்பத்தில் பெரியதும் வரவரக்குறைவுமான அவாந்தர தீக்ஷையை அனுஷ்டிக்க வேண்டும். முதலில் நான்கும், பிறகு மூன்றும் பிறகு இரண்டும் பிறகுஒன்றும் என்பதுவே பரோவரீயஸீ அவாந்தரதீக்ஷை. மறுமையிலேயே ஸம்ருத்தியை அடைகிறான்.

ஸா— அசக்தனுக்கு க்ஷீர வ்ரதத்திற்கு மேல் அல்பாஹாரம்செய்யலாம், என்றார்.

Vi-2-4 ப்ரா— உபஸத்தை அனுஷ்டிப்பவர்கள் ஸ்வர்க்கத்தையே அடைகிறார்கள். அவர்களுள் ஏதாவது ஆகாரம் சாப்பிடுபவன் பின்னால்விட்டுவிடப்படுகிறான். வ்ரதத்திற்குப் பிறகு சாப்பிடுவதில்லை என்று எண்ணினால் சோபனமான வஸ்துவை உட்கொண்டமாதிரியே ஆகும். மாகமாதத்தில் ப்ரயாகையில் ஸ்நாநம் செய்ய வேண்டிப் போகிறவர்களுக்குள் ஒருவன் நடக்க முடியாமலிருந்தால் அவனுக்கு ஸ்நாநம் கிடைக்காது. அவனும் மறுநாள்

புண்யதீர்த்தத்திற்கு போய்த் தீர்த்தத்தில் வஸிப்பவர்களோடு கூடவஸித்து மிருந்த நியமத்தைச்செய்துகொள்ளலாம் 'அப்படியே ஒருதடவை உணவு உட்கொண்டு, வேறொன்றையும் உட்கொள்ளலாகாது. தயிரை உட்கொள்ளலாம். தயிரே பசுக்களின் உருவம், இந்த உருவத்தால் பசுவை யடைகிறான்.

[ஸா— இனி, ஸோம தேவதாகமான வேதியைக் கட்ட ஆரம்பிப்பார்.]

Vi—2—4. யக்ஞதேவர் தேவர்களிடமிருந்து ஓடி, விஷ்ணுரூபத்தை எடுத்து பூமியில் நுழைந்துவிட்டார் அவரை தேவர்கள் கைகளால் பிடிக்கப்பார்த்தார்கள். இந்த்ரன் (எங்கே போனாலும் பின்னோடிப்போய் அவருக்கு) முன்னே போய் நின்றான். அவர், 'இதார்எனக்கு முன்னே முன்னேபோய் நிற்கிறான்' என்றார். "போகமுடியாத கோட்டைக்குள் புகுந்து விரோதியை அடிப்பவன்" என்று (தன்சக்தியை இந்த்ரன் ப்ரகடனம் செய்தார்.) (என் சக்தியைப் பரீக்ஷிப்பவன் நீயார் என்ற இந்த்ரனுக்கு (யக்ஞன் துர்க்கத்திலிருந்து (கோட்டை) (விரோதியைக்) கொண்டுவருவோன்' என்றான் 'துர்க்கத்தில்(விரோதியை) அடிப்பவனென்றுநீர்அழைக்கப்படுகிறீர் அழகானதைத் திருடினது இந்த வாராஹம் (பன்றி) எழுமலைகளுக்கு அப்பால் அடையவேண்டிய (வேத்யம்) அஸுரர்களுடைய வித்தத்தை வைத்துக்கொண்டிருக்கிறது. துர்க்கத்தில் அடிப்பவனென்றால் அதைக்கொல்'என்றார். இந்த்ரன் தர்ப்பக்கட்டையைப் பிடுங்கி எழுபர்வதங்களையும் பேதித்து அதை அடித்தான். அவர் (யக்ஞர்) சொன்னார், "நீர் துர்க்கத்திலிருந்து கொண்டுவருவோன் என்று சொன்னீரே, இதைக்கொண்டு வாரும். இவர்களுக்கு யக்ஞதேவனே அந்த யக்ஞத்தைக் கொண்டுவந்தது. அடையவேண்டிய அஸுரர்களது தனத்தை அடைந்ததாலேயே ("அவிந்தத") வேதிக்கு வேதி என்ற பெயர், என்று ஒரு அபிப்ராயமாம்.

அஸுரர்களுக்கே இந்த (உலகு) முதலில் உண்டாயிருந்தது. உட்கார்ந்து இருப்பவன் எவ்வளவு ப்ரதேசம் பார்க்கலாமோ அவ்வளவே தேவர்களுக்கு. தேவர்கள், 'இதில் நமக்கும் பங்கு இருக்கட்டும்' என்றார்கள். நாங்கள் எவ்வளவு கொடுக்க வேண்டும்,' என்றார் இந்த ஸாலாவ்ருகீ(என்ற ம்ருகம்) மூன்றுதடவை எவ்வளவு சுற்றி ஓடுமோ அவ்வளவு கொடுங்கள் என்றார். இந்திரன் ஸாலாவ்ருகீ உருவத்தை எடுத்து இந்த உலகை மூன்று தடவை சுற்றினான். அப்படி இந்த உலகைத் (தேவர்கள்) அடைந்தார்கள். அதனால் வேதிக்கு வேதி என்ற பெயர் வந்தது. இது எல்லாமே வேதிதான். இவ்வளவிலேயே செய்யக் கூடுமென்று இடத்தை அளந்து யாகம் செய்கிறார்கள். பின் பக்கத்தில் முப்பது அடி குறுக்காகவும் கிழக்குப் பக்கம் முப்பத்தாறும் முன் பக்கம் குறுக்கே இருபத்து நான்கு அடியுமாம். மொத்தம் பத்துக்களாகும். விராட் பத்தக்ஷரங்களாலாயதாம். விராட் அன்னமாம். விராட்டாலேயே அன்னாதிகளை அடைகிறான்.

[ஸா—சொன்ன அளவைகளைக் கூட்டித் தொண்ணூறாகும். இப்படி வேதி ப்ரமாணத்தை மத்யம உபஸத்திநத்தில் காலை உபஸத் ஹோமத்திற்குப் பிறகு செய்யவேண்டியது.

(பூமியை) த்தோண்டுகிறான். இதில் அசுத்தமானதை எல்லாம்போக்குவான் (ஸா—எச்சில் முதலிய அசுத்தம்) தோண்டுகிறான. ஆதலால் ஔஷதிகள் (செடி கொடிகள்) நாசமடைகின்றன. பர்ஹிஸ்ஸை (தர்ப்பை) ப்பரப்புகிறான். ஆதலால் ஓஷதிகள் மறுபடி உண்டாகின்றன. பர்ஹிஸ்ஸுக்குமேலே உத்தர பர்ஹிஸை (மேல் பர்ஹிஸ்) பரப்புகிறான். பர்ஹிஸ்ஸென்பது ப்ரஜையே, மேல்பர்ஹிஸ்ஸே யஜமாநன். (இதனால்) யஜமானனை (யாக கர்மாவைச் செய்கிறவனை) யாகம் செய்யாதவனைக் காட்டிலும் மேலானவனாகச் செய்கிறான். ஆதலால் யஜமானன் யஜமானனல்லாதவனைக் காட்டிலும் மேலானவனாகவே ஆகிறான்.

வ்ரதநிரூபணம்.

VI—2—5 சக்தி இல்லாதவன், ஒருவன் பாரத்தைச் சுமக்க யத்நம் செய்தால் (எழுந்திருக்கக்கூட) முடியாதவனாகிறான். ஒரு நாளில் முடியும் யாகத்தில் பன்னிரண்டு உபஸத்துக்களும், அநேக நாள் யாகத்திற்கு மூன்றும் ஆனால் விபரீதமாகும். ஒருநாள் யாகத்தில் மூன்று உபஸத்துகளாம். அநேகநாள் யக்ஞத்தில் பன்னிரண்டுமே யக்ஞம் வீர்யமுள்ளதாகச் செய்வதற்காக ஆகுமாம். இதுதான் க்ரமம். கன்றாகத (பசுவின்) ஒருஸ்தநமே (தன்) பாகமாகிறது. ஒருஸ்தநத்தைத் தன் க்ஷீரபானத்திற்கு உபயோகப்படுத்துகிறான். பிறகு இரண்டு (ஸ்தநங்கள்) பிறகு மூன்று, பிறகு நான்கு ஸ்தநங்கள் (உபயோகப்படுகின்றன) இதே. அக்னிகூர்மை. (க்ஷுரபவி) என்ற வ்ரதம். இதனால் பிறக்க சத்ருக்களையும் நாசம்செய்கிறான், இப்படிப் பிறக்கப் போகும் சத்ருக்களையும் (நாசம்செய்கிறான்) —ப்ரியதாலேயே பெரியதை அடைகிறான். (—வி[illegible]ப்ரியசாயினும். விருக்ஷம். பெரிதாவதுபோல், அப்படிப்பட்டவன் மஹத்தான பலம் அடைவான், என ஸாயணர். முதலில் நான்கு ஸ்தநங்களை க்ஷீரபான வ்ரதத்திற்கு உபயோகிக்கிறான். பிறகு மூன்று, பிறகு இரண்டு, பிறகு ஒன்று, இதுதான் ஸோஜகனம் என்ற வ்ரதம். தபஸ்ஸுக்குத்தக்கது, ஸ்வர்க்கத்துக்கு ஸாதநமானது. ப்ரஜைகளாலும் பசுக்களாலும் வ்ருத்தி அடைகிறான்.

க்ஷத்ரிய (ராஜந்ய)னுக்குப்பானத்ரவ்யம் யவாகூ என்றசஞ்சி [ஜலம் 15பங்கும், தான்யம் 1பங்குமாக சேர்த்துப்பாதியாகக் காய்ச்சின கஞ்சிக்கு (யவாகூ) என்பார்] யவாகூ க்ரூரமானது. க்ரூரனே ராஜன்யன். வஜ்ரத்தின் ரூபம். இதுவே ஸம்ருத்திக்காகவாம்.

[ஸா—அன்னம் போல் திருப்தி செய்யச் சக்தியற்றதென்று க்ரூரம் என்றார். ராஜன்யன் துஷ்டனை அடக்குவதால் க்ரூரனென்றார். இது

இரண்டும்சேர்ந்து வஜ்ரஸமமாம். அது அநிஷ்டநிவ்ருத்திசெய்யும் என்றே ஸம்ருத்தி என்றார்.]

வைச்யனுக்குத் தயிர் (ஆமிக்ஷா) பானத்ரவ்யம். புரோடசயக்ஞத்தின்ரூபம். இது புஷ்டிக்காகவாம், ப்ராம்மணனுக்குப் பால்(பயஸ்) பானத்ரவ்யமாம். ப்ராம்மணனே தேஜஸ்ஸாம், பாலே தேஜஸ்ஸாம். தேஜஸ்ஸாலேயே தேஜஸ்ஸையும் பாலையும் தன்னிடத்தில் வசிக்கின்றான். மேலும் பாலாலேயே கர்ப்பம் வ்ருத்தி ஆகின்றன இந்த தீக்ஷிதன் கர்ப்பம் போலாம் பால் இவன் பாநத்ரவ்யமாக ஆவதால் தன்னை வ்ருத்தி செய்து கொள்ளுகிறான்.

மூன்று தடவை வ்ரதபானம் செய்பவரானார் மனு. இரண்டு தடவை அஸுரர்கள். ஒருதடவை தேவர்கள். ப்ராதக்காலம், மத்யாந்நம், ஸாயம்காலம் மனுவின் வ்ரதபான காலங்கள். இது புரோடாச யக்ஞத்தின்ரூபம். புஷ்டிக்கானது ப்ராதக்காலமும் ஸாயங்காலமும் அஸுரர்களுடையது. மத்யாந்நமற்றது. இது பசியின் (க்ஷுத்) ரூபம் ஆதலால் அவர்கள் அபஜயமடைந்தார்கள். நடுப்பகலும் நடுநிசியும் தேவர்களுடைய காலமாம். ஆதலால் அவர்கள் புஷ்டியை அடைந்தார்கள். ஸ்வர்க்கலோகத்தையும் அடைந்தார்கள் (முகத்தின்) மத்தியில் தான் அன்னத்தை புஜிக்கிறான் (உதரத்தில்) மத்தியிலேயே அன்னரசத்தையும் வசிக்கிறான். இதனாலேதான் தினத்தின் மத்தியிலும் ராத்திரியின் மத்தியிலும் வ்ரதகாலங்கள் ஆகுமாம். இது சத்ருநாசத்திற்கு ஆகும். தானும் வாழ்வான் சத்ருவும் நாசமாவான்.

தீக்ஷிதனே கர்ப்பமாம். தீக்ஷிதசாலையே யோநியாம். தீக்ஷிதன் தீக்ஷிதசாலையை விட்டுப்போனால் யோநியினின்று கர்ப்பம் நழுவினதுபோலவேயாம். ஆதலால் ஆத்மரக்ஷக்காக வெளியில் போகக்கூடாது. குலரக்ஷகனே அக்னியே தீக்ஷிதன். வெளியில் செல்வானேயானால் வ்யாக்ர (புலி) மாவான். இவனைத் தானே எழுந்து கொல்வதற்குச் சக்தியுள்ளவனுவான். தன்னை ரக்ஷித்துக் கொள்வதற்கு வெளியில் போகக்கூடாது.

வலது பக்கத்தில் படுப்பான். அதே யஜமானனின் ஸ்தானமாம். தனது ஸ்தானத்திலேயே படுக்கிறான் அக்கினியைப்பார்த்துக்கொண்டுபடுக்கிறான். தேவதைகளையும் யக்ஞத்தையும் நேராகக் கொண்டு படுக்கிறதாகும்.

காமயாக பூம்யபிதாநம்.

இவனை உத்தமமான யக்ஞம் அடையவேண்டும். இவன் ஸ்வர்க்கலோகத்தை ஜயிக்கட்டும் (அடையட்டும்) என்று எவனுக்காக விரும்பப்படுகிறதோ: அவனை.புரோஹவிஸ் ஸென்ற தேவயஜனத்தில் (யாகசாலையில்) யாகம்செய்விக்க வேண்டும். அதே புரோஹவிஸ்ஸென்ற தேவயஜனம். எதில் (கிழக்கு முகமாய் உட்கார்ந்து) ஹோதா ப்ராதரநுவாக மென்ற சஸ்த்ரத்தை படித்துக்கொண்டு (ஆஹவநீய) அக்னியையும் நதீ, தடாகம்

களிலிருந்துவந்த) தீர்த்தத்தையும் (கிழக்குதிசையில் உதயமான) ஆதித்யனையும் எதிர்நின்று ஒரேதடவையில் பார்க்கிருனே அதுவே புரோஹவிஸென்ற தேவயஜநமாம்; இவனையே உத்தமமான யக்ஞம் வந்தடையும். ஸ்வர்க்க லோகத்தையும் ஜயிக்கிருன்.

ஆப்தம் என்றதேவ யஜனத்தில் சத்ருக்களுள்ளவனை யாகம் செய்விக்கவேண்டும். பெரிய ராஜமார்க்கத்தையாவது பெரியகுழியையாவது பார்த்து ரதமாவது வண்டியாவது போகஇடையே இடமில்லாமல் தொட்டு நிற்பது ஆப்ததேவயஜன மென்பதாம் இதனால் சத்ருவை இவன் ஜயிப்பான். சத்ருஇவனை ஜயிக்கமாட்டான். பசுவை விரும்பியவனுக்கு ஒருபக்கம் உன்னதமான- தேவயஜனத்தில் யாகம் செய்துவைக்க வேண்டும். அங்கிரஸ்தேவதைகள் ஒருபக்கம் உன்னதமான- தேவயஜனத்திலேயே பசுக்களைசிருஷ்டித்தார்கள். ஏகோந்நத மென்ற தேவயஜனம் எதுவென்றால் (ப்ராசீனவம்சத்திற்கு முன்பு அடுத்திருப்பது ஸதஸ், உத்தரவேதிக்கு மேற்கே அடுத்திருப்பது ஹவிர்த்தானம் என்றவிடம்) ஸதஸ்ஸுக்கும் ஹவிர்த்தானத்திற்கும் மத்தியில் உன்னதமாகச் செய்த இடம். இதன்பலமாகப் பசுவையேஅடைகிருன்.

ஸ்வர்க்கத்தை விரும்பியவனுக்கு மூன்று இடங்களில் உன்னதமான தேவயஜனத்தில் யாகம் செய்துவைக்கவேண்டும் அங்கிரஸ் தேவதைகள் மூன்று இடங்களில் உன்னதமான- தேவயஜனத்திற்ருன் ஸ்வர்க்க லோகத்தைஅடைந்தார்கள்.

(அதன்லட்சணம்)

ஆஹவநீயத்திற்கும், ஹவிர்த்தாநத்திற்கு மத்தியிலேயும், உன்னதமாக இருக்கவேண்டும். அப்படியே ஹவிர்த்தானத்திற்கும், ஸதஸ்ஸுக்கும் மத்தியிலேயும். அப்படியே ஸதஸ்ஸுக்கும் கார்ஹபத்யாக்நியின் மத்தியிலேயும். இதுவே த்ரியுன்னதம் என்ற தேவயஜனம்.. (இதன்பலம்) ஸ்வர்க்க லோகத்தையே அடைகிருன்.

ப்ரதிஷ்டையை விரும்புகிறவனுக்கு ப்ரதிஷ்டிதம் என்ற தேவயஜனத்தில் யாகம் செய்துவைக்கவேண்டும். எது எல்லாப்பக்கமும் ஸமமோ அதுவே ப்ரதிஷ்டிதம் என்ற தேவயஜனம். ப்ரதிஷ்டையே அடைகிருன்.

எங்கே நாநாவிதமான ஓஷதிகள் சேர்ந்து உண்டாகின்றனவோ அதில் பசுவை விரும்பினவனுக்கு யாகம் செய்து வைக்கவேண்டியது. இதே பசுக்களின் ரூபம். ரூபத்தாலேயே இவனுக்குப் பசுக்களையே அடைவிக்கிருன். பசுவுடையவனுகவும் ஆகிருன்:

'நிர்ருதி என்ற (யக்ஞத்தைக் கெடுக்கும்) ரக்ஷஸனுல்இவன் யக்ஞத்தைப் பிடித்துக் கொள்ளுகிறேன்' என்று எவன் விஷயத்தில் விரும்புகிரு

ஞை அவனுக்கு நிர்ருதிக்ருஹீதம் என்ற தேவயஜனத்தில் யாகம் செய்து வைக்கவேண்டும். மேடுபள்ளமில்லாமல் புல்பூண்டு முளையாதஸ்தானமே நிர்ருதிக்ருஹீதமென்ற தேவயஜனம். நிர்ருதி என்ற யக்ஞவிகாதம் செய்யும் ராக்ஷஸனாலே யக்ஞத்தைப் பிடித்து விடுகிறான்.

ப்ங்க்தி போஜனம், விவாஹம், முதலிய விஷயத்தில் எவனைக்குறித்துச் சந்தேகப்படுகிறார்களோ அவன் அந்தப்பாபம் நீங்கவேண்டினால் அவனுக்கு வ்யாவ்ருத்தம் என்றதேவயஜநத்தில் யாகம்செய்துவைக்க வேண்டியது. ஆஹவநீயத்திலிருந்து இழக்கிலும் கார்ஹபத்யத்திலிருந்துமேற்கிலும்தாழ்ந்திருக்கவேண்டும். இதுதான் வ்யாவ்ருத்த தேவயஜநம். பாபிசத்ருவிலிருந்து வேறாக ஆவான். பங்க்திபோஜனத்திலும், விவாஹத்திலும். ஸந்தேகப் படமாட்டார்கள். ஐச்வர்யத்தில் ஆசையுள்ளவனுக்கு கார்யமான தேவயஜனத்தில் யாகம் செய்துவைக்க வேண்டியது. (கார்யம்) என்றால் மண் கல்களால் உன்னதமாகச் செய்த இடம்.) புருஷன் செய்யப்பட்டவனும். (அதாவது.— உபநயநாதி ஸம்ஸ்காரங்களால் புருஷனை உந்நதனாகச் செய்யவேண்டியவனும். ஐச்வர்யத்தையே அடைகிறான்.

## அநுவாகம் 12.

மத்யமோபஸத்திநே—ஸ்வீக்ருத—ஷட்த்ரிம்சத்பத—பரிமித—வேதிப்ரதேச பூர்வபாக உத்தரவேதி அபிதானம். இரண்டாவது உபஸத்தினத்தில்முப்பத்தாறுஅடி அளவுள்ள வேதிப்ரதேசத்தின் கீழ்பாகத்தில் உத்தரவேதியாம். அதை இந்த அநுவாகத்தில் சொல்லுவார்.

1 உத்தரவேதியே, நீ வந்நி ரூபமான வித்தத்தை அடைவித்தவள். வந்நியின் தேஜஸ்ஸை அடைவித்தவள். வந்நியை யாசிக்கும் என்னை ரக்ஷிப்பாயாக. (வந்நி கிடைக்காதோ என்று) பயந்த என்னை ரக்ஷிப்பாயாக.

2 எதனால் ஒருவராலும் அவமதிக்கப்படாத உனது பெயரானது யக்ஞசம்பந்தமானதோ, அந்தநாமாவால் உன்னை (உத்தரவேதியில்) எடுத்து வைக்கிறேன். அதனால் ஹே! அங்கிரஸ்ஸே, அக்நியே, இந்தசாத்வாலமென்ற குழியிலுள்ள மண்ணில் இருக்கிறீர். ஆயுஸ்ஸைக் கொடுக்கும் நண்பன் என்ற பேரோடு (உத்தரவேதிக்கு) வாரும்.

3 ஹே! அக்நியே, அங்கிரஸ்ஸே, இந்த சாத்வாலக்குழியின் இரண்டாவது மூன்றாவது மண்ணுண்டையில் இருக்கிறீர். ஒருவராலும் அவமதிக்கப்படாத உமது பெயரானது யக்

ளு சம்பந்தமானது. அதனால் உன்னை (உத்தரவேதியில்) எடுத்துவைக்கிறேன். ஆயுஸ்ஸைக் கொடுக்கும்(நபன் என்றபெயரோடு உத்தரவேதிக்கு ) வாரும்.

4 ஸிம்ஹரூபத்தோடிருக்கிறாய், பூஜ்யை ஆவாய்.

5 விஸ்தாரத்தை அடையும் உமக்காக யக்ஞபதி விஸ்தாரத்தை அடையட்டும். த்ருடமாவாய், தேவர்களுக்காகச் சுத்தமாவாய், தேவர்களுக்காக சோபையை அடைவாய்.

6 இந்த்ரகோஷனென்ற தேவன் உன்னை வஸுக்களோடு கிழக்கே ரக்ஷிக்கட்டும். மனோஜவாள் உன்னைப் பித்ருக்களோடு தெற்கே ரக்ஷிக்கட்டும். ப்ரசேதஸ உன்னை ருத்ரர்களுடன் மேற்கே ரட்சிக்கட்டும். விச்வகர்மா ஆதித்யர்களோடு உன்னை வடக்குப்பக்கம் ரட்சிக்கட்டும்.

7 உத்திரவேதியே, நீ ஸிம்ஹரூபத்தைத் தரிக்கிறாய், வைரிளைத்தொலைப்பாய், ஸ்வாஹா...ஸிம்ஹ ரூபத்தைத் தரிக்கிறாய், சோபனமான புத்ர, ப்ருத்யர்களை அளிப்பாய், ஸ்வாஹா—ஸிம்ஹரூபத்தைத் தரிக்கிறாய். பச்வாதி தனஸம்ருத்தியை அளிப்பாய். ஸ்வாஹா—ஸிம்ஹ ரூபத்தைத் தரிக்கிறாய், ஐச்வர்ய சம்பந்தமான ப்ரதிஷ்டையை அளிப்பாய் ஸ்வாஹா. ஸிம்ஹரூபத்தைத் தரிக்கிறாய். தேவர்களைவிரும்பும் யஜமானனுக்காகத்தேவர்களைக் கொண்டுசேர்ப்பிஸ்வா
8 ஹா. (ஜுஹூவே) (சிரஞ்சீவிகளான) தேவர்களுக்காக உன்னை (எடுக்கிறேன்.)

9 (மத்யமபரிதியே) எல்லா ஆயுஸ்ஸையும் அளிப்பாய். ப்ருதிவியை த்ருடப்படுத்து, (தக்ஷிண பரிதியே) ஸ்திரநிவாஸத்தைபெற்றாய். அந்தரிட்சத்தை த்ருடப்படுத்து(உத்தர பரிதியே)நழுவாத வாஸஸ்தானத்தைப் பெற்றாய். தேவலோகத்தை ஸ்திரப்படுத்து.

10 அக்நியின் பஸ்மமாவாய், அக்நியின் புரீஷமாவாய்.

—(೦)—

குறிப்பு:—

(1) உத்தரவேதியை நிர்மாணம் செய்வதற்கு நாலுபக்கமும் கோடுகளைக் கிழிப்பதற்கான நாலு மந்த்ரங்கள்:—இதில் இரண்டு அபிப்ராயங்கள் உண்டு. பௌதாயனர்:—வேதிக்கு வடக்கே இரண்டு மூன்று அடிகளுக்குப்பின்னால் ஸ்ப்யம் என்றமரக்கத்தியால் மண்ணைத்தோண்டிப்ரோக்ஷணம் செய்து சம்யையால் சாத்வாலத் (குழி) தை அளப்பார் "என்க்குவித்தத்தை அடைவித்தவள்' என்று கீழ்ப்பக்கம் வடக்கு முகமாக சம்யையின் அடிப்பாகத்தைப் போட்டு உள்பக்கம் ஸ்ப்யத்தால் கோட்டைக் கிழிக்கவேண்டும்' 'வஹ்நியின் தேஜஸ்ஸை அடைவித்தவள்' என்று, தென்பக்கம் 'கிழக்கில் அடிப்பக்கத்தைப் போட்டு உள்பக்கம் ஸ்ப்யத்தால் கிழிக்க வேண்டும். 'யாசிக்கும் என்னை ரட்சி' என்று மேற்குப்பக்கம் வடக்கில் அடிப்பக்கத்தைப் போட்டுக் கிழிக்க வேண்டும். பயந்த என்னை இரட்சிப்பாயாக என்று வடக்குப்பக்கம் கிழக்கே அடிப்பக்கத்தை போட்டுக் கிழிக்க வேண்டும்,' என்றார். ஆபஸ்தம்பர். மஹாவேதிக்கு முன்பாகவே மண்ணை வெட்டிப் போட்டு உத்தரவேதி நிர்மாணம் செய்ய வேண்டுமென்று உத்தரவேதியை சம்யையால் மேல் சொன்னபடி கோடுகிழிக்க வேண்டும் என்றார்.

(2). பௌதாயனர்:— சாத்வாலத்தில் பர்ஹிஸ்ஸைப் போட்டு அதில் ஸ்ப்யத்தால் குத்தவேண்டும். திருப்பி எடுத்து உத்தரவேதியில் எறியவேண்டும். ஆப—. இதைஒரேமந்த்ரமாக— முழங்கால் அளவு அல்லது மூன்றுசாண் (விதஸ்தி) ஆழம் தோண்டி உத்தரவேதியில் மண்ணைக் கொட்டவேண்டும். ;—உத்தரவேதியிலுள்ள அக்நிக்கு (நபன்)என்று பெயர். அங்கிரஸ் ஸென்ற பதத்திற்கு அங்கங்களின் ரஸம் என்று பொருள். இந்த அக்நி' ஸோமாஹுதிக்கு ஆதாரமானதால்' கார்ஹபத்ய தக்ஷிணாக்நி முதலியவர்களுக்குள் ஸாரமானது,

(3). மேலே சொன்னபடியே, இரண்டாவது, மூன்றாவது நான்காவது தடவை, இந்தமந்த்ரத்தின் பகுதிகளைச் சொல்லி மண்ணைப் போடவேண்டியது.

(4). ஆப— உத்தரவேதியில் மண்ணைப் போடுவதற்கு என்றும். பௌதா—அத்வர்யு உத்தரவேதிக்காக. மண்ணை (புரீஷத்தை) க்குழைக்க என்றும் கூறினார்கள்.

(5). வேதியைப் பரப்புவதற்கும், சம்யையால் அடிப்பதற்கும், ஜலத்தால் ப்ரோக்ஷிப்பதற்கும், சுத்திக்காக மணலைப்பரப்புவதற்கும்.

(6). ப்ரோக்ஷணீ பாத்ரங்களால், உத்தரவேதியைச் சுற்றி நாலுபக்கமும் ப்ரோக்ஷிக்க மந்த்ரங்கள்.

(7.). வேதியில் ஹிரண்யத்தை வைத்துக்கு றுக்காக ஐந்து தடவை ஆஜ்யத்தை எடுத்துக் கொண்டு. ஊற்ற வேண்டும்., தென்பக்கம் தோள் வடபக்கம்' ப்ருஷ்டபாகம், தென்பக்கம் ப்ருஷ்டபாகம், வடபக்கம் தோள் மத்யம். இந்த ஐந்து இடங்களில்—

(8). ஸ்ருக்கைத் தூக்கிப்பிடிக்க.

(9). தேவதாருப்பரிதிகளை சுற்றிவைக்க; மத்யமம், தக்ஷிணம், உத்தரம் என்ற முறை.

(10). அக்நியின் ஸம்பாரங்களை வைப்பார்;— குங்கிலியம் ஸு-கந்தி தேஜநம் வெள்ளை மயிர்: இவைகள் ஸம்பாரங்கள்.

VI- 2- 7. — உத்தரவேதி நிரூபணம்—

அவர்களிடமிருந்து உத்தரவேதி ஸிம்மரூபத்தைச் செய்துகொண்டு இரண்டு கட்சிகளுக்கு நடுவில் இருந்தது. தேவர்கள் ஆலோசித்தார்கள், இவ்விருகட்சிகளில் எதை இதுசேருமோ அக்கட்சியே இதாக ஆவார்கள்' என்று அதைக்கூப்பிட்டார்கள். அது நான் ஒருவரத்தை வேண்டுகிறேன்' என்றது.ஸர்வகாமங்களையும் என்னால் அடைவீர்கள். அக்நிக்கு முந்தி இருக்கும்என்னிடத்தில் ஆஹுதி செய்யவேண்டும். ஆதலால் அக்நிக்கு முந்தி இருக்கும் உத்தர வேதியில் வ்யாகாரம் (நெய்யைத்தெளித்தல்) செய்கிறார்கள். இதற்கு இதுவே வரம்.

சம்யை என்ற கட்டுமுளையால் அளக்கிறான். அதுதான் அளவு. சரியான உத்தரவேதி பரிமாணத்தால் சரியானபலத்தை அடைகிறான். வித்தத்தை எனக்கு அடைவித்தவள் என்றார். ஏனெனில். அடையப்பட்டபிறகு அவர்களுக்கு உதவினாள். (வஹ்நியின்) தேஜஸ்ஸை அடைவித்தவள் என்றார் தேஜஸ்ஸை வேண்டினவர்களுக்கு உதவினாள். யாசிக்கும் என்னைக் காப்பாயாக, யாசித்தவர்களுக்கு உதவினாள். பயந்தஎன்னை; என்றார் பயந்தஇவர்களுக்கு உதவினாள்.

அக்நியே, அங்கிரஸ்ஸே, நபனென்ற பெயரோடு (உத்தரவேதிக்கு) வாரும்; என்று மூன்றுதடவை அடிக்கிறான். இந்தலோகங்களிலுள்ள அக்நிகளை அடைகிறான். நாலாதுதடவை மௌனமாக அடிக்கிறான். அதனால் குறித்துச் சொல்லாத அக்நியை அடைகிறான்.

ஸிம்மரூபத்தோடிருக்கிறாய், பூஜ்யை ஆவாய் என்றார் இதுஸிம்ம ரூபத்தைச்செய்துகொண்டு இருவர்களுக்கும் இடையே நின்றது. விஸ்தாரத்தை அடையும். உனக்காக யக்ஞபதி விஸ்தாரத்தை அடையட்டும், என்றார் யஜமானனை ப்ரஜை பசு இவைகளால் விருத்தி செய்கிறான், த்ருடமாவாய் என்று த்ருதிக்

(Firmness) காக பூமியில் அடிக்கிறான். தேவர்களுக்காகச் சுத்தமாவாய் தேவர்களுக்காக சோபையை அடைவாய், என்று சுத்தத்திற்காக ஜலத்தைத் தெளித்து மணலை இறைக்கிறான். இந்த்ரகோஷ னென்ற தேவன் உன்னை வஸுக்களோடு முன்னால் ரக்ஷிக்கட்டும், என்றார் திக்குக்களிலிருந்து இதை (இந்த வேதியை.) ப்ரோக்ஷிக்கிறான். உத்தரவேதி தேவர்களிடம் சென்றமையால் இங்கேயே ஜயித்துவிடவேண்டுமென்று அஸுரர்கள் வஜ்ராயுதத்தைத் தூக்கிக் கொண்டு தேவர்களை எதிர்த்தார்கள். அவர்களை இந்த்ரகோஷன் வஸுக்களோடு முன்பு தாக்கினான் பித்ருக்களோடு மனோஜவர்கள் வலதுபுறமும், ருத்ரர்களோடு ப்ரசேதஸ் பின்புறமும் ஆதித்யரோடு விச்வகர்மா இடது புறமுமாக வெருட்டினார்கள். உத்தரவேதியைப் ப்ரோக்ஷிப்பதால் யஜமானன் திக்குக்களிலிருந்து சத்ருக்களை விரட்டி விடுகிறான்.

இந்த்ரன் யதிகளை ஸாலவ்ருகங்களுக்குக்கொடுத்தான். அவைகளை ஸாலவ்ருகங்கள் உத்தரவேதியின் வலதுபுறத்தில் தின்றன. ப்ரோக்ஷிக்கும் தீர்த்தத்தில் மிகுந்ததை உத்தரவேதியின் வலதுபுறத்தில்ஊற்றவேண்டும். அவ்விடம் எது க்ரூரமானதிருக்குமோ அது சமனத்தை அடையும். தான் த்வேஷிக்கிறவனை த்யானம் செய்யவேண்டும். அவனுக்குச் சோகத்தையே அடைவிக்கிறான்.

Vi- 2- 8- — வ்யாகாரணவிதி —

அந்த உத்தரவேதி சொன்னது. "என்னால் ஸர்வகாமங்களையும் அடைவீர்கள். தேவர்கள், சத்ருக்களான அஸுரர்களை ஜயிப்போம் என்று விரும்பினார்கள்; நீ ஸிம்ஹரூபத்தைத் தரிக்கிறாய், வைரிகளைத்தொலைப்பாய். ஸ்வாஹா என்றுஹோமம் செய்தார்கள். சத்ருக்களை ஜெயித்தார்கள். சத்ருக்களை ஜெயித்து ப்ரஜையை அடைவோம் என்று விரும்பினார்கள். 'ஸிம்மரூபத்தை தரிக்கிறாய், சோபநமான புத்ரப்ருத்யர்களை அளிப்பாய் ஸ்வாஹா.' என்று ஹோமம் செய்தார்கள். ப்ரஜையை அடைந்தார்கள் பிரஜையை அடைந்து பசுவை அடைவோம் என்று விரும்பினார்கள். 'ஸிம்மரூபத்தைத் தரிக்கிறாய். பசுவாதி ஸம்ருத்தியை அளிப்பாய், ஸ்வாஹா.' என்றுஹோமம் செய்தார்கள். பசுக்களை அடைந்தார்கள். பசுக்களை அடைந்து ப்ரதிஷ்டையை அடைவோம் என்று விரும்பினார்கள். 'ஸிம்மரூபத்தைத் தரிக்கிறாய், ஐச்வர்ய சம்பந்தமான பிரதிஷ்டையை அளிப்பாய்.' என்று ஹோமம் செய்தார்கள். இந்தப்ரதிஷ்டையை அடைந்து தேவதைகளை ஆசிஸ்ஸுக்காக நெருங்குவோம் என்று விரும்பினார்கள். 'ஸிம்மரூபத்தைத் தரிக்கிறாய், தேவர்களைக் கொண்டு சேர்ப்பி ஸ்வாஹா' என்று ஹோமம்செய்தார்கள். ஆசிஸ்ஸுக்காக அவர்கள் தேவதைகளை அடைந்தார்கள்.

ஐந்து தட்வை வ்யாகாரம் செய்கிறான் பங்க்தி (என்ற சந்தஸுக்கு) ஐந்தக்ஷரங்களுள்ளது, யக்ஞம் ஐந்தாலானது. யக்ஞத்தையே அடைகிறான். வக்ரகதியாக வ்யாகாரம் செய்கிறான். ஆதலால் பசுக்கள் படுக்கும் போது அங்கங்களைச் சுருக்கும் இது நிலைத்து இருப்பதற்கே.

'பூதேய்ய: த்வா' என்று ஸ்ருக்கை எடுக்கிறான். எவர்கள் பூததேவர்களோ அவர்களுக்கு அது பாகமாம். அதனால் அவர்களையே ப்ரீதி செய்விக்கிறான். தேவதாருவாலான பரிதிகளை (சுற்றிப்போகும் குச்சிகளை) வைக்கிறான். இது லோகங்கள் தரிப்பதற்கே.

அக்நிக்கு மூன்று ஜ்யேஷ்டர்கள் இருந்தார்கள். அவர்கள் தேவர்களுக்கு ஹவ்யத்தைக் கொண்டு போகும்போது அழிந்தார்கள். அந்த அக்நி, இப்படியே வேறொருவனும் ம்ருதியை அடைவானே, என்று பயந்து ஒளிந்தார். காட்டுமரங்களுக்குள் வஸித்த ராத்ரியில் தேவதாரு வ்ருக்ஷத்தில் தங்கினார். ஓஷதிகளுக்குள் வஸித்த ராத்ரியில் ஸுகந்தி தேஜநத்திலும், பசுக்கள் நடுவில் வஸித்த ராத்ரியில் ஆட்டுக்கடாக் கொம்புகளுக்கு இடையிலும் தங்கினார் அக்நியை தேவதைகள் (அவிஸ்ஸை) எடுக்கச் சொல்ல வேண்டும் என்று விரும்பினார்கள். அவனைக் கண்டார்கள் "எங்களிடம் திரும்பிவாரும், எங்கள் ஹவ்யத்தை வகியும்" என்றார்கள். அவர் "நான் ஒரு வரத்தை வேண்டுகிறேன். எடுத்த ஆஹுதியில் எது பரிதிக்கு வெளியே விழுந்து விடுமோ அது என் ப்ராதாக்கள் பாகமாக ஆகட்டும்" என்றார்.

ஆதலால் எடுத்த ஆஹுதி பரிதிக்கு வெளியில் விழுந்தால் அது அவர்களுடைய பாகமாம். அதனால் அவர்களையே ப்ரீதிசெய்துவைக்கிறான். (அக்நி) யோசித்தார் 'என் பூர்வப்ராதாக்கள் எலும்புள்ளவர்களானதால் மடிந்தார்கள், எலும்புகளை எறிந்துவிடுகிறேன்' என்றார். எந்த எலும்புகளை எறிந்து விட்டாரோ அது தேவதாரு ('பூது') ஆயிற்று (அதன்மேலிருந்த மாம்ஸம் குல்குலு (பிசின்) [Kesin] வாயிற்று

இப்படி இந்த ஸம்பாரங்களை (சேர்மானங்களை)ச் சேர்ப்பதால் அக்நியையே சேர்த்துவைப்பதாகும்.

"அக்நியின் புரீஷமாவாய்" என்றார். சம்பாரங்களே அக்கியின் புரீஷமாம். [பிசின், சுகந்தி தேஜனம், வெள்ளைக் கம்பளிமயிரே சம்பாரம் என்றார்.] மேலும் தேவதாருவாலான பரிதிகளையே அந்த ப்ராதாக்கள் சுற்றிப் படுத்திருக்கிறார்கள் என்று சொல்லுவார்கள்.

## அநுவாகம் 13.

உத்தரவேதி—ஸமீபவர்த்தி— ஹவிர்த்தானாபிதானம். உத்தரவேதியின் ஸமீபத்திலுள்ள ஹவிர்த்தானத்தைச் சொல்வார்

1 வேதத்தை ஓதி உணர்ந்த விப்ரனை ப்ராம்மண யஜமானனைச்சேர்ந்த ரித்விக்குக்கள் (லௌகிகசிந்தை களிலிருந்து மனதை விலக்கி யக்ஞசிந்தையில்) மனதைச் சேர்ப்பார்

கள். அப்படியே, இந்த்ரியங்களையும் (பக்ஞத்தில்தங்கள் தங்கள் வ்யாபாரங்களில்) சேர்ப்பார்கள், ஹோமகர்மாக்களைச் செய்வார்கள் (ருத்விக்குகள்). மார்க்கங்களைத் தெரிந்து ஸர்வக்ஞன் ஒருவனாகவே மன இந்த்ரியங்களை ஒரு இடத்தில் நிறுத்த வல்லவரானார். ப்ரேரகரான அந்தர்யாமியின் ஸ்துதி விரிவானது.

2 (அச்சைப்பார்த்து) இந்தக்கருங்களுக்கு ச்ரேயஸ்கரமான நல்லவாக்கைச் சொல்லும் கீர்த்தி பெற்ற (அச்சுக்களே.) தேவர்களிடத்தில் (உங்களுக்கு யக்ஞம் செய்கிறார்களென்று) கோஷியுங்கள்.

3 பெரிய கர்மாக்களை முடிக்கவல்ல வீரன் எங்களுக்கு உண்டாகட்டும். அவனைக்கொண்டு நாங்கள் ஜீவிக்கலாம். அவன் அநேகர்களை அடக்கி ஆளவல்லவனாக இருக்கவேண்டும்.

4 விஷ்ணு இதை மூன்றாகச் செய்தார், மூன்றாகப்பதத்தை வைத்தார். பூமியாதிலோகங்களான தூளிகளில் இந்த ஜகத் யாவையும் அடங்கி இருக்கிறது. அந்தத்தோடும் தேநுக்களோடும், (தேநு- பால் மிகுதியாகத்தரும் பசுவுக்குப் பெயர்) நல்ல புற்களோடு கூடினதுமாம். மனிதர்களுக்கு யசஸ்ஸுக்காக ஆவீர்களாக. இந்த பூமி ஸ்வர்க்கங்களை விஷ்ணு பிரித்து ஸ்தாபித்தார். ப்ருதிவியை (தன்தேஜரூபங்களான) ஜீவர்களால் சுற்றிலும் புஷ்டிசெய்தார்.

5 (வண்டிகளே,) கிழக்குமுகமாய்ச் செல்லுங்கள்; யாகத்தை விக்நமில்லாமல் செய்து, மேலேயக்ஞத்தை நடத்துங்கள். தேவர்களுக்குச் சேர்ப்பித்து அஸுரர்களுக்குச் சேர்க்காமல் செய்யுங்கள்.

6 ப்ருதிவியின் சரீரத்தில் இங்கே ரமியுங்கள்.

7 விஷ்ணுவே, மேலுலகிலிருந்தாலாவது பூலோகத்திலிருந்தாலாவது மஹர்லோகத்திலிருந்தாலாவது அந்தரிக்ஷத்திலிருந்தாலாவது மிகுதியான தனங்களால் இரண்டு கைகளையும் நிரப்பிக்கொள்ளும். இடது வலது கைகளினாலும் அள்ளி அள்ளிக்கொடும். விஷ்ணுவின் வீரச்செயல்களைச் சொல்வேன். இந்தவிஷ்ணுவே. பார்த்திவமான ரஜஸ்ஸுக்களை அளந்தார். உயர இருக்கும் தேவர்களுக்கு வாஸஸ்தானத்

த்தையும் தாங்கினார். மூன்று தடவை அடிகள் வைத்தார். மஹாத்மாக்களால் கானம்பண்ணப்படுகிறார்.

8 விஷ்ணுவின் லலாடம் (நெற்றி) ஆகிறாய்.

9 விஷ்ணுவின் ப்ருஷ்டபாகம் (தலையின்பின்பக்கம்) ஆகிறாய்.

10 விஷ்ணுவின் வாயின் ஓரங்களாவாய்.

11 விஷ்ணுவின் தைக்கும் நூலாவாய், விஷ்ணுவின் த்ருடமான முடிப்பாவாய்.

12 மண்டபத்தைப் பார்த்து விஷ்ணுவைச் சேர்ந்ததாவாய், விஷ்ணுவின் ப்ரீதிக்காக உன்னைத் தொடுகிறேன்.

குறிப்பு:—

(1) ஸ்ருக்கில் நான்கு தடவை நெய்யை எடுத்து யாகசாலைக்கு முன்பு ஹோமம் செய்ய மந்த்ரம்.

(2) அக்ஷத்தை வேண்டிக்கொள்ளல்.

(3) இந்த அக்ஷங்களுக்குக் கோவின் தூளியில் மூன்றிலொரு பாகத்தை ஆஜ்யத்தோடு சேர்த்துமை தடவமந்த்ரம்.

(4) தெற்குப்புறத்திலுள்ள ஹவிர்த்தானுடைய அச்சின் பின்புறம் சென்று தக்ஷிணபாதையில் ஸ்ப்யத்தால் அடித்து ப்ரோக்ஷித்து ஹிரண்யத்தை வைத்து ஜலத்தால் சுற்றி ஹோமம் செய்யவேண்டும்.

(5) வண்டிகளைப் பிடித்துக்கொண்டு வேலைக்காரனைப் பார்த்து ஏவவேண்டும் ஹவிர்தான வண்டிகளை முன்பு இழுக்கச் சொல் என்று மூன்று தடவை சொல்ல, வண்டிகளை இழுக்க வேண்டும் ஆஹவநீயாக்நிக்கு மூன்று தப்படி இழுத்து இங்கே ரமியுங்கள் என்று சக்காத்தின் அச்சுள்ள நடுப்பலகையில் அது நிற்கச் செய்ய வேண்டும் (நப்யஸ்தே ஸ்தாபயித்வா) வண்டியின் சக்கரங்கள் மூன்று பலகைகளாலமையும் இரண்டு பலகைகள் வெளியிலும் அச்சுள்ள பெரியபலகை நடுவிலுமிருப்பதால் இந்தப்பலகை செங்குத்தாக ஆள்நிற்பது போல் இருக்கும்படி வண்டியை நிறுத்த வேண்டும். இது முதல் ப்ராசீனவம்சத்திலிருந்த பழைய ஆஹவநீயம் கார்ஹபத்யமாகும். உத்தரவேதியிலுள்ளதே ஆஹவநீயமாம்.

(6) வண்டியை ஸ்தாபிக்கும் மந்த்ரம். நுகத்தின் வடக்கு தெற்கு பாகத்திற்கு வண்டியின் காதுகளென்றூர் நுகத்தை நேர் (நேர்) பார்ச்சட்ட

திற்கு ஒரு த்வாரத்தில் கயிற்றைப் போட்டுக் கட்டவேண்டும். நுகத்தின் தென்பாகத்தில் நிற்கும் முடிப்புக்கு அடுத்து அண்டைக்கொடுக்கவேண்டும்.

(7) வண்டிக்கு முட்டுக் கொடுத்து முளையை அடிக்க வேண்டும். தண்டாஸூரனால் முறிக்கப் பெற்ற மூன்றாவது வண்டிக்குப்பதிலாக ஒவ்வொரு வண்டிக்கு மேலே கோரையால் செய்த பாயைப் போடவேண்டும். (Vi—2—9)ல் மூன்றாவது பாய் என்று சொன்னது அவிர்த்தான மண்டபத்திற்கு வடக்கு தெற்குப்பக்கங்களில் மறைவுக்குக்கட்டியிருக்கும்இரண்டு பாய்களைக் குறித்துச் சொன்னதாம் இரண்டு வண்டிகளையும் உள்ளே வைத்து அவிர்த்தான மண்டபத்தை நிர்மாணம் செய்யவேண்டும். தென் வண்டிக்கு முன்பு கிரகம் (ஸோமத்தை எடுக்கும் அகப்பை) முதலியவைகளுக்காக அவகாசம் விட்டுத் தெற்கு வடக்காக ஆறு தூண்டுகள் நிறுத்த வேண்டும். இவ்விரு தூண்பத்திகள்மேல்தெற்குவடக்காக இரண்டுமூங்கில்களை வைக்க வேண்டும்.

(8) இப்படி நிலையாக நின்றவைகளின் முந்தினதைப்பார்த்துச்சொல்ல மந்த்ரம். ஹவிர்தான மண்டபமே விஷ்ணு என்றார் முன்வாசலிலுள்ளஸ்தம்பங்களின் மத்தியில்ஒரு தர்ப்பமாலையைமுடிந்திருக்க வேண்டும். அந்ததர்ப்பமாலையையாவது, குறுக்கு மூங்கிலையாவது பார்த்து புருஷனுடைய நெற்றியாகப் பாவித்துச் சொல்ல வேண்டும்.

(9) கீழ்மேல் மூங்கில்களை உயர்த்தி விஷ்ணுவின் தலையின் பின்பக்கம் என்று நடுப்பாயை மேலே போடவேண்டியது. ஒரு லலாடம், ஒரு பாய், நெற்றியின் ஓரங்கள் இரண்டு இப்படி மண்டபத்தின் மாதிரியே விசுவகர்மா தலையை நன்றாகத் தைத்திருக்கிறார்; பாய் என்பது சிரஸ்ஸை மூடியிருக்கும் தோலுக்கொப்பாகும்.

(10) இருபக்கங்களிலும் பாய்களைநிறுத்த வேண்டும்.

(11) தக்ஷிணத்தூணை பாயோடு சேர்த்து தைத்து முடிபோட வேண்டும்.

மூச்சை அவிழ்க்கிறான். வருணபாசத்திலிருந்தே அவைகளை விடுவிக்கிறான் அலம்பவேண்டும். யாகத்திற்குச் சுத்தமாகச் செய்கிறான் ஸவிதாதேவதை ருக்கால் ஹோமம் செய்து ஹவிர்தான வண்டிகளை முன்னால் கொண்டுவருவார். ஸவித்ரு தேவதையின் ப்ரேரணையாலேயே இவைகளை முன்னால் கொண்டு வருகிறார்.

இரண்டு பக்கத்திலும் கட்டப்பட்டிருக்கும் இந்த அக்ஷமே (அச்சு) தூர்வாக்கை உடைய வருணனும். அது (போகும்போது) சத்தம் செய்தால் யஜமானன் வீட்டை நோக்கிச் சத்தம் செய்யும் இந்த க்ருகங்களுக்கு ச்ரேயஸ்கரமான நல்லவாக்கைச் சொல்லும். க்ருகங்களே இருப்பிடமாம். இது சாந்திக்காக.

## ஹவிர்த்தாநாபிதானம்.

பத்நி என்னை போடுகிறாள். பத்நி எல்லாருடைய மித்ரையாம் இது மித்ரத்துக்காக. பத்நி யக்ஞத்திற்குச் செய்வதே மிதுனமாம். ஆதலால் பத்நியே யக்ஞத்தை ஆரம்பம் செய்கிறாள். இது விச்சேதம் இல்லாமலிருப்பதற்கு.

(வண்டி) மார்க்கமாக அரக்கர்கள் உள்ளே நுழைந்து யக்ஞத்தைக் கெடுக்க நினைக்கிறார்கள். விஷ்ணு தேவதாகமான இரண்டு இருக்குக்களால் வண்டிப்பாதையில் ஹோமம் செய்யவேண்டும். யக்ஞமே விஷ்ணுவாம். யக்ஞத்திலிருந்து அரக்கர்களை வெருட்டுகிறான். அத்வர்யு அக்நியில்லாத இடத்தில் ஹோமம் செய்தால் அத்வர்யு அந்தனுவான். அரக்கர்கள் யக்ஞத்தைக் கெடுப்பார்கள் ஹிரண்யத்தை வைத்து ஹோமம் செய்கிறான். அக்நியுள்ளதிலேயே ஹோமம்செய்வதாகுமாய். அத்வர்யுவும் அந்தனுகமாகட்டான். யக்ஞத்தை அரக்கர்களும் கெடுக்கமாட்டார்கள். 'கிழக்குமுகமாகச் செல்லுங்கள், ககத்தை விக்நமில்லாமல் செய்யுங்கள்' என்றார். இவைகளை ஸுவர்க்கலோகத்திற்கு போகச் செய்கிறான். ப்ருதிவியின் சரீரத்தில் இங்கே ரமியுங்கள் என்றார், தேவயஜனமென்பது இந்த ப்ருதிவியின் சரீரமே. 'ஹவிர்தானம்' என்பதே யக்ஞத்தின் சிரஸ்ஸாம், மேலுலகத்திலிருந்தாவது கீழுலகத்திலிருந்தாவது' என்ற ஆசிஸ்ஸைக் கூறும் ரிக்கால் வலது ஹவிர்த்தான வண்டியினுடைய மேதி(th)யை [நடுச்சட்டத்தின் கடைசியில் பூமியில் தங்கும் கட்டையைத்] தட்டுகிறான். யக்ஞத்தின் சிரஸ்ஸிலிருந்தே யஜமானன் ஆசிஸ்ஸை அடைகிறான். உயரன் என்ற அஸுரனுடைய புத்ரன் தண்டன். வஷட்கார தேவனோடு (ஸ்நேகம் செய்து) மூன்றாவது ஹவிர்தானத்தின் அச்சை முறித்தான். ஹவிர்த்தானங்களின்மேல் போட்டிருக்கும் மூன்றாவது பாய், மூன்றாவது ஹவிர்த்தானத்தை அடையச் செய்யும்.

ஹவிர்த்தானமே யக்ஞத்தினுடைய சிரஸாகும்; 'விஷ்ணுவின் லலாடமாகிறாய். விஷ்ணுவின் ப்ருஷ்டமாகிறாய்.' என்றார், ஆதலால் இவ்வளவு நடலை தைக்கப்பட்டிருக்கிறது. 'விஷ்ணுவின் தைக்கும் நூலாவாய், விஷ்ணுவின் த்ருடமான முடிப்பாவாய்,' என்றார் தேவதையாலே ஹவிர்த்தானம் விஷ்ணு சம்பந்தமானது. முதலில் போட்ட முடிப்பை அவிழ்க்காமலிருந்தால் அத்வர்யு மூத்ரம் விடமுடியாமல் மடிவான். அதனால் அதை அவிழ்த்து விடவேண்டியது.

---

## அநுவாகம் 14.

காம்ய — ஸாமிதேநீ— யாஜ்யா— புரோநுவாக்யா காமயிதாநம் ரிக்குக்கள்—காக்குக்களைக் கொல்லும் இஷ்டிவிதையமாக ஸாமிதேநீ, யாஜ்யா, புரோநு வாக்யங்கள் உள்ளன.

1. அக்நியே, மிருகத்தைப் பிடிக்க் வீசப்பட்ட பாசம் போல், (ரக்ஷஸ்ஸுக்களைத்தடுக்கப்) பெருத்த பலத்தைக் கொடும். அமைச்சரோடும் யானையுடனும் கூடின அரசனைப் போல், ரக்ஷஸ்ஸுகளுக்கு மேல் செல்லும் [விழும்.] விரைவில் ஓடும் பாணுடைய ஸேனையின் பின்பு போய்க் கொன்று, மிஞ்சியதை வெருட்டும். இராக்ஷஸ்களைக் கூரான பாணங்களால் அடியும்.

2 அக்நியே, உமது பொறிகள் சீக்ரமாக நாலுபக்கமும்விழுகின்றன. நீயும் மிகவும் ஜ்யோதிஸ்ஸோடு கூடி அந்தப் பொறிகளால் அவ்வஸுரர்களின் மேல் மூரட்டுத்தனமாய் விழும்.

மறுபடியும், ஜுஹூவால் ஹோமம் செய்யப்பட ஹவிஸ்ஸால், இடைவிடாமல் எரியும் பொறிகளையும் பெரிய ஜ்வாலைகளையும் (அஸுரர்களை ஹிம்ஸிக்க) நாலுபக்கமும், விசேஷமாக உண்டாக்கும்.

3 அக்நியே, சித்ரவதை செய்யும் இராக்ஷஸன் எவன் தூரத்திலோ ஸமீபத்திலோ, இருக்கிறானோ அவனைக்குறித்து வெகுவிரைவில் அனேகவிதமான பாசங்களை விடும். ஒருவனாலும் ஹிம்ஸிக்கப்படாமல் இந்தப்ரஜைகளைப் பரிபாலியும். ஹிம்ஸிக்கும் இராக்ஷஸன் ஒருவனும் உமது ஸமீபத்தில் தைரியமாக வராமலிருக்கட்டும்.

4 அக்நியே, நீர் எழுந்திரும். சத்ருக்களை நோக்கிச் சண்டை செய்யும், கூரான ஆயுதத்தை உடையவரே, நீர் சத்ருக்களை நன்றாய்த் தகியும் எங்களுக்கு த்ரோகம்செய்தவனைக் கீழே தள்ளிக் காய்ந்த கட்டையைப்போல் எரித்து விடும்.

5 அக்நியே, எழுந்திரும். எங்களை எவர்கள் எதிர்க்கிறார்களோ அவர்களை அடியும். அக்நே வீரத்தனத்தை வெளிப்படுத்தும் ராக்ஷஸர்களின் ஸ்திரமான வீர்யத்தை ப்ரயோஜனமற்றதாகச் செய்யும். அடிக்கடி அடிபட்டவனானாலும் அடிபடாதவனானாலும் சத்ருக்களைக் கொன்றுவிடும்.

6 அத்யந்தம் இளமை வாய்ந்த அக்நியே, எந்த யஜமானன் தனது வீட்டுக்கு வந்து, பெருகும் உம்மை ஸ்துதிசெய்வதற்கு (அவிஸ்ஸைக்) கொடுக்கிறானோ அவனே உமது அநுக்ரஹ ரூபமான நல்ல அபிப்ராயத்தை அறிந்தவன். நீரும் ஸ்வாமியாக நின்று தனம், யசஸ், க்ருஹங்கள் இவைகளைக் காட்டி இந்தயஜமானனுக்கு அனேக ஸாதநங்களை அநுக்ரகம் செய்வீராக.

7 அக்நியே, எந்த யஜமானன் ஆயுள்முழுவதும்தனது க்ருகத்தில்நித்யமாகச்செய்யும் அவிஸ்ஸாலும்சஸ்த்ரங்களாலும் உக்தங்களாலும் உன்னை திருப்தி செய்ய விரும்புகிறானோ அவனே ஸௌபாக்யசாலி. சுபமான தானங்கள் கொடுப்பவன்.

8 அக்நியே, உம அநுக்ரஹ ரூபமான நல்ல எண்ணத்தைக் கொண்டாடுகிறேன் (பூஜிக்கிறேன்) இக்காலத்தியதாயிருந்தாலும் கோஷத்தோடு கூடின இந்த (என்) (ஸ்துதியான) வார்த்தை அடிக்கடி உண்டாயினும் உம்மிடத்தில் நன்றாய்ச் சேரட்டும். நாங்களும் உமது ப்ரஸாதத்தால்) நல்ல அச்வங்கள் ரதங்கள் இவைகளோடு உம்மை ஸேவிக்கிறோம். நீரும் அநுதினமும்எங்களிடத்தில் ஸாமர்த்தியங்களைச்சேர்ப்பியும்.

9. அக்நியே, இந்த லோகத்தில் அநுதினமும் பகலிரவுகளில் ப்ரகாசிக்கும் உம்மைத், தனக்காக. ச்ரேயஸ்ஸை வேண்டினவன் விசேஷமாக உபசாரம் செய்யட்டும். அப்போது விளையாடிக் கொண்டே, மனதில் சந்தோஷத்தோடு, மனிதர்களுக்குள் தநங்களை அடைந்து உம்மைச் சேர்வோம்.

10. அக்நியே, உயர்ந்த அச்வங்களோடும், வேண்டிய ஹிரண்யத்தோடும் கூடின எந்த யஜமானன் ஹவிஸ்ஸென்ற தநத்தை எடுத்து ரதத்துடன எதிர் வருகிறானோ, அவனை இரட்சிப்பீர், மேலும் எவன் உமக்கு அதிதிஸத்காரத்தை ஒவ்வொருநாளும் ப்ரீதியுடன் செய்கிறானோ அவனுக்கு நீர் ஸகா ஆகிறீர்.

11. அக்நியே, உமக்கு நாங்கள் பந்துவாக இருப்பதால் (அஸு ரர்களின்) தேஜஸ்ஸை வார்த்தைகள்பேசியேநாசப்படுத்து கிறோம். இந்த பாந்தவ்யம் பிதாவான கோதமரிடமிருந் து எமக்கு வந்தது. ஹோதாவே அத்யந்தம், யௌவ னத்தோடு கூடினவரே, யாகத்தை முடித்துக் கொடுப்ப வரே, அடங்கின மனதுடன், நீர் எங்கள் வாக்கின் உண் மையை அறிவீர்.

12 தெளிவான புத்தியுள்ள (அக்நியே) பொய்யற்ற வர்களும் பாபங்களைத் தாண்டுவிப்பவர்களும், லகுவாய் ஸேவிக்கக் கூடியவர்களும், சோம்பலில்லாதவர்களும், ஹிம்சை செய்யாதவர்களும், ச்ரமமில்லாத வர்களுமான உமது பாலகர்கள், உம்முடன் சேர்ந்தே யாகசாலையில் எங் களைக் காக்கட்டும்.

13 அக்நியே உமது பாலகர்கள் அந்தகனான மமதையின் புத்ரனைக் காத்துக் கெடுதலை விலக்கி இரக்ஷித்தார்கள். ஸர்வத்தையும் அறிந்த (நீர்) நல்ல காரியங்களைச் செய்த அவர்களை ரக்ஷித்தீர். இராக்ஷஸர்களான சத்ருக்கள் வஞ்சிப் பதற்கு நினைத்தும் முடியவில்லையே.

14 அக்நியே, நாங்கள் உமது ப்ரேரணையால் அந்நங்களைச் சாப் பிடுகிறோம். உமதுஸகாயத்தால்யாககர்மாவைநிறைவேற்று கிறோம். உம்மால் இரக்ஷிக்கப்படுகிறோம். ஸத்யத்தை விஸ் தாரப்படுத்துபவனே, ஐஹிக, ஆமுஷ்மிக பலன்கள் இரண் டையும் ஸம்பாதித்துக் கொடும். (பக்தர்களிடத்தில்) லஜ் ஜையை விட்டு, ஸாதநங்களை அநுஷ்டானம் பண்ணும்படி செய்து ஸம்பாதித்துக் கொடும்.

15. அக்நியே, இந்த ஸமித்தால் உமக்கு பரிசரணம் (ஊழியம்) செய்கிறோம், எங்களால்செய்யப்படும் ஸ்துதியைப்பெற்றுக் கொள்ளும். பேரில்லாத அரக்கர்களை கொளுத்தும். உப காரத்தைச் செய்யும் தேஜஸ்ஸைப் பெற்றோனே, [வைரி கள் செய்யும்) த்ரோகத்திலிருந்தும் நிந்தையிலிருந் தும் அநுஷ்டான தோஷத்திலிருந்தும் என்னைரக்ஷியும்,

16. அரக்கர்களைக் கொல்பவரும், அந்தத்தை உடையவருமான அக்நியை விசேஷமாக வ்ருத்திசெய்கிறேன்; ஜகத்துக்கு மித்திரனும் விசாலமானவருமான அக்நியைச் சரணமாக அடைகிறேன் இவ்விதமான யாக கார்யங்களால் ஜ்வாலை பெற்ற தீக்ஷ்ணமான அக்நி ஹிம்ஸகர்களிடமிருந்து இரவும், பகலும் நம்மைக் காக்கட்டும்.

17. பெரிய ஜோதியுடன் இந்த அக்நி விளங்குகிறது, ப்ரபஞ்சங்களைத் தன் மஹிமையால் வெளிப்படுத்துகிறது. தாண்ட முடியாத ஆஸுரமான மாயைகளை, நாசம் செய்கிறது. அரக்கர்களைத் தொலைக்க இருகொம்புகளையும் (ஜ்வாலைகளையும்) கூர்மைப்படுத்துகிறது.

18. அக்நியே கூரிய ஆயுதங்களுள்ள உமது கிரணங்கள், (இந்தப் புரோடாசத்தால் த்வனியைச் செய்துகொண்டு அரக்கர்களைக் கொல்வதற்கே ஆகாயத்தில் முட்டுகின்றன. இதன் கிரணங்கள் நமது சந்தோஷத்திற்கே எதிரிகளை முறிக்கின்றன. அரக்கர்கள் செய்யும் இடுக்கண்கள் இவைகளைச் சேரவில்லை.

குறிப்பு.

இந்தப் பதினைன்காவது அநுவாகத்தில் ப்ராகிருதமான ஸோமயாக விஷயம் சொல்லாமல் ரக்ஷஸ்களைக் கொல்லும் அக்நிக்கு இஷ்டியைச் சொல்லும்போது இந்த அநுவாகம் முழுவதற்கும் விநியோகம்: இதில் பதினெட்டு ரிக்குக்களுண்டு. அதில் பதினைந்து ஸாமிதேனிகள் அதாவது இவற்றைச் சொல்லி அக்நியை மூட்டவேண்டும். ஒன்று புரோநுவாக்யம். இரண்டு யாஜ்யங்களாகக் கொள்ளல் வேண்டும்.

## மூன்றும் பிரபாடகம்.

இம்மூன்றும் பிரபாடகத்தில் 14 அநுவாகங்களுள்ளன. அவை முறையே 118, 102, 58, 131, 60, 119, 81, 94, 105, 78, 76, 34, 97, 414, பதங்களுள்ளன. ஆகமொத்தம் இப்பிரபாடகத்தில் 1567 பதங்களாம், அவ்வநுவாகங்களின் முதற்பதங்கள் முறையே (1) தேவஸ்ய (2) ரக்ஷோஹணோ (3) விபு (4) ஸ்த்வ (5) மதி (6) ப்ருதிவ்யா (7) இஷ (8) ஆததே (9 வாக் (10) ஸம் (11) ஸமுத்ர (12) ஹவிஷ்மதீ (13) ஹ்ருதே (14) த்வம், என்பனவாம்.

## அநுவாகம் 1.

அக்நீ ஷோமீய பசுவங்கத்வேந — பூர்வோக்த சேஷபூத ஸதோநிர்மாணாதி — (அக்நி) ஸோமன், இந்த தேவதைகளுக்கான பசுவிஷயத்தைச் சொல்லும்போது (முதலில்) ஸதஸ்மண்டபத்தை (நிர்மாணம்செய்வதுமுதலியவற்றைக் குறித்து இந்த அநுவாகம்.

1. ஸவிதா தேவதையின் தூண்டுதலால் அச்விநீதேவதைகளின் புஜங்களாலும் பூஷன்தேவதையின் கைகளாலும் உன்னை எடுக்கிறேன்.

2. நீயே. அப்ரி (மரத்தாலான மண்வெட்டி.) நீ சத்ருவல்ல.

3. அரக்கன் சுற்றிக் கிழிக்கப்பட்டிருக்கிறான். சத்ருக்கள் கிழிக்கப்பட்டிருக்கிறார்கள்; இதோ அரக்கனுடைய கழுத்தை அறுக்கிறேன் எவன் எங்களை த்வேஷிக்கிறானோ எவனை நாமத்வேஷிக்கிறோமே இதோ அவர்களுடைய கழுத்துக்களை அறுக்கிறேன.

4. உன்னைத் தேவலோகத்துக்கும், உன்னை அந்தரிக்ஷத்துக்கும், உன்னை ப்ருதிவிக்கும்.

5. பித்ருக்கள் தங்கும் உலகம் சுத்தமாக ஆகட்டும்.

6. நீ யவம் (என்ற தான்யம்) (பிரித்து வைக்கும் சக்திவாய்தவன். எங்களைவிட்டு த்வேஷிகளையும் சத்ருக்களையும் பிரித்து விடு.

7. (நீ) பித்ருக்களின் ஸ்தானம் ஆகிறாய்.

8. தேவலோகத்தை. (மேலே) தாங்கு; அந்தரிக்ஷத்தை நிரப்பு. பூமியை த்ருடமாக்கு.

9. (உதும்பரக்கட்டையைப்பார்த்து) மித்திரன் வருணன், இவர்களுடைய திடமான பிடிப்பினால் மருத்தின் புத்திர

னுத்புதானன் என்ற தேவன், உன்னைக் குழியில் ஊன்றட்டும்.

10. ப்ராஹ்மண்யத்தையும் க்ஷத்ரியத்தன்மையையும், நல்லப்ரஜையையும் தனஸம்ருத்தியையும் கொடுக்கும் உன்னைச் சுற்றி மண்ணைத் தள்ளுகிறேன்.

ப்ராஹ்மண்யம், க்ஷத்ரியத்தன்மை, நல்லப்ரஜை, தனஸம்ருத்தி (இவைகளைத்) திடமாகச்செய் [மைத்ராவருணதண்டத்தைப்பார்த்து] விண்மண் ரூபமான (ஔதும்பரீகட்டை)யின் நுனி, அடிகமேல, இந்தக்ருத்தால் நாலுபுறமும் த்ருப்தி அடையுங்கள். இந்த்ரன் காஉட்ரு மிடமாவாய் ஸரவஜனங்களுக்கும் நிழலாவாய்.

ஸ்துதிகளால் அடையத்தக்கவனே, (இந்த்ர,) இந்தத்துதி ரூபமான வாக்குக்கள் உன்னைச் சூழ்ந்து நிற்கட்டும். பெருகியஆயுளுள்ள உன்னைப்பெருக்கி யவைகளாகவும் எமது பிரியஸேவைகள் ப்ரியமாகவும் ஆகட்டும் [ரிக்வேதம்மண் 1 சூக் 10, செய் 12 பார்க்க.]

இந்த்ரனுடைய (தைக்கும்) கயிறுவாய், முடிப்பே, நீ இந்திரனுக்கானவன், திடமானவனுவாய். மண்டபமே, இந்த்ரனுடைய ப்ரீதிக்காக உன்னைத் தொடுகிறேன்.

மேலே கண்ட அநுவாகத்திற்கு, நேரான ப்ராம்மணம் 'ஸதோபீதானம்' என்பது:—[Vi—2—10]

[அப்ரியை எடுக்க அடியில் விதிப்பார்.]

'ஸவிதாதேவதையின் தூண்டுதலால்' என்று தூண்டுதலுக்காக அப்ரியை எடுக்கவேண்டும். அசுவினி தேவதைகளின் புஜங்களாலும்' என்றார் அசுவினிகள் இருவரும் தேவர்களின் அத்வர்யுக்களாவார். பூஷன் தேவதையின் கைகளாலும்,' என்றார் இது அடக்கத்துக்காக. அப்ரி, என்ற இது வஜ்ரம் போலவேதான். 'நீயே அப்ரி நீ சத்ருவல்ல' என்றார் இது சாந்திக்காக.

ஒவ்வொரு ஸந்தர்ப்பங்களிலும் அரக்கர்கள் யக்ஞத்தைக் கெடுக்கப் பார்ப்பார்கள் அரக்கன் சுற்றிக் கிழிக்கப்பட்டான், சத்துருக்கள் கிழிக்கப் பட்டிருக்கிறார்கள்'' என்றார் இது அரக்கர்களை விரட்டுவதற்கே. இதோ

அரக்கனுடைய கழுத்தை அறுக்கிறேன். எவன் எங்களை த்வேஷிக்கிறானோ எவனை நாம் த்வேஷிக்கிறோமோ, என்றார். இதில் இரண்டு புருஷர்கள். ஒருவனை இவன் த்வேஷிக்கிறான். மற்றொருவன் இவனை த்வேஷிக்கிறான். அவர்களுடைய கழுத்துக்களை உடனே அறுத்து விடுகிறான். "உன்னை தேவலோகத்துக்கும் உன்னை அந்தரிட்சத்துக்கும் உன்னை ப்ருதிவிக்கும், என்றார், இந்த உலகங்களுக்காகவே ப்ரோக்ஷிக்கிறான். மேலே இருந்து கீழே ப்ரோக்ஷிக்கிறான் ஆதலால் முகத்திலிருந்து உதரம் வரையில் பலத்தைக் கொண்டு ஜீவிக்கிறார்கள். வெட்டுவது க்ரூரமான கார்யத்தை செய்வதேயாம். சாந்திக்காக ஜலத்தைக் கொட்டுகிறான். யவத்தோடு கொட்டுகிறான்; யவமே பலமாம், உதும்பரமரமும் பலமாம். ஆகையால் பலத்தையே பலத்தோடு சேர்ப்பிக்கிறான்.

உதும்பரக்கட்டை யஜமானனுக்குச் சமமான உயரத்தைக்கொண்டதாகும். யஜமானன் எவ்வளவோ அவ்வளவே பலத்தை இதில்வைக்கவேண்டும். 'நீ பித்ருக்கள் ஸ்தானம் ஆகிறாய்,' என்று பர்ஹிஸ்ஸைக் கீழே பரப்பவேண்டும். தோண்டின குழியின் தேவதைபித்ருக்களாம்:—பர்ஹிஸ்ஸைக் கீழே பரப்பாமல் (கட்டையை) ஊன்றினால் (முழுவதும்) பித்ருதேவதைகளை அடைந்துவிடும். [இவ்வளவு பித்ரு தேவதைகளைச் சேர்ந்தது. இவ்வளவு மனுஷ்யர்களுக்கு, என்ற விபாக மில்லாமல் போய்விடும்] ஆகையால் பர்ஹிஸ்ஸைப் போட்டே ஊன்ற வேண்டும். பூமியிலேயே இதை ஊன்றினதாகும். பர்ஹிஸ்ஸுக்கு ஸம்பந்தப்பட்ட பூமியிலேயே ஊன்றினதாக ஆகுமாம் 'தேவலோகத்தை மேலே தாங்கு, அந்தரிட்சத்தை நிரப்பு, என்றார். இது இவைகளை விலக்குவதற்காகவேயாம். 'த்யுதானன் என்ற மருத்தின் புத்ரன் உன்னை ஊன்றட்டும், என்றார். த்யுதானன் மருத்தின் புத்திரன். தேவர்களுக்கு ஔதும்பரியை ஊன்றினான். அவனாலேயே இது ஊன்றப்பட்டதாம் "ப்ராம்மண்யத்தைக் கொடுக்கிறவனும் க்ஷத்ரியத்தைக் கொடுக்கிறவனும்," என்றார் இது யஜுஸ்படிதான்.

'மண்விண்ரூபமான அடிநுனிகளே, இந்த க்ருதத்தால் திருப்தி அடையுங்கள், என்று கட்டையில் ஹோமம் செய்ய வேண்டும். மண்விண்களையே ரஸத்தால் பூசுவதாகும் நுனிமுதல் அடிவரையில்வழியவிட வேண்டும். இதனால் யஜமானனை சிரஸ்முதல் பாதபர்யந்தம் தேஜஸ்ஸுள்ளவனாகச் செய்கிறான்.

'இந்த்ரனுடையது' என்று தட்டியைக் கீழே வைக்கிறான். ஏனெனில் ஸதஸுக்குத் தேவதைஇந்த்ரனாவான். எல்லாஜனங்களின் சாயை என்றார் ஸதஸ் என்பது எல்லா ஜனங்களின் சாயையே.

[சதியின் எண்ணிக்கைஸதஸ்ஸில் உள்ளவர்களுடைய வேண்டுகோளைப் பொறுத்ததாம்] சதி (Chadi) கூரைமேற் போடும்பாய்அல்லதுதட்டி.

தேஜஸ்ஸை வேண்டுபவனுக்கு ஒன்பது சதிகளமைந்ததாக (ஸதஸ்ஸை) ச்செய்யவேண்டும். த்ருவ்ருத் ஸ்தோமத்தால் அளவு பெற்றது தேஜஸென்பது. த்ருவிருத்தென்பதுவே தேஜஸ்ஸாம். தேஜஸ்வீயாகவே ஆகிறான். இந்த்ரியத்தை (சக்தியை) விரும்புவனுக்குப் பதினைன்று சதிகளமைந்ததாகச் செய்ய வேண்டும். த்ரிஷ்டுப் என்பது பதினொரு அக்ஷரங்களுள்ளது. த்ருஷ்டுப்பே இந்த்ரியம். இந்த்ரியமுள்ளவனுவான் சத்ருக்களுள்ளவனுக்குப்பதினைந்து சதிகளமைந்ததாகச் செய்யவேண்டும். வஜ்ரம்பதினைந்துபிரிவையுடையது (இது) சத்ருக்களை ஜெயிக்கலாம். ப்ரஜையை விரும்புபவனுக்குப் பதினேழு சதிகளமைந்ததாகச் செய்யவேண்டும். ப்ரஜாபதி பதினேழு பிரிவையுடையது. இது ப்ரஜாபதியை அடைய ஆகும். ப்ரதிஷ்டையை விரும்புபவனுக்கு இருபதுசதிகளமைந்ததாகச் செய்யவேண்டும். ஸ்தோமங்களுக்கு இருபத்தொன்றுதான் ப்ரதிஷ்டை. இது ப்ரதிஷ்டையின் பொருட்டாகும்.

ஸா— [த்ருவிருத், பதினைந்து, பதினேழு, இருபத்தொன்று என்ற பதங்களால் ஸாமத்தை இவ்வளவு ஆவ்ருத்தி சொன்ன ஸ்துதிகள் என்பது குறிக்கப்படும். த்ருவ்ருத்தென்றது ஆவ்ருத்தியை குறிக்காமலிருந்தாலும் ஒன்பது இருக்குக்கள் உள்ளன என்பதைக் குறிக்கும். த்ருவிருத்துக்குத் தேஜஸ்ஏற்பட்டதற்குக்காரணம்ப்ராஜாபதி முகத்திலிருந்து அக்நியோடுகூட உண்டானதுதான். வீர்யத்தோடுகூடினப்ரஜாபதியின் பாஹுவிலிருந்து உண்டானதால் பதினைந்தை வஜ்ரமென்றார், பதினேழை ப்ரஜாபதி என்றதற்குக்காரணம் ஆச்ராவயஎன்றமந்திரத்திலுள்ள அக்ஷரங்கள் 17 எண்ணிக்கை என்பதே. த்ருவ்ருத் முதலியது 21 ல் அடக்கமானதால் 21 ஐ ப்ரதிஷ்டைக்குச் சமமானதென்றார்.

ஸதஸ்ஸே உதரமாம். உதும்பரமே பலம். மத்தியில் உதும்பரத்தை நாட்டுகிறார். மத்தியிலேதான் ப்ரஜைகள் பலத்தைத் தரிக்கிறார்கள். ஆதலால் மத்தியிலேதான் பலத்தை அனுபவிக்கிறார்கள்.

யஜமான லோகத்தில் தென்தட்டிகள், சத்ருலோகத்தில் வடபுறத் தட்டிகள். தென்தட்டிகளை (வடதட்டிகள்) மேலே போட வேண்டும். இதனால் யஜமானனை மற்றவனைக் காட்டிலும் மேலாகச்செய்கிறான். ஆதலால் யஜமானன் மற்றவனைக்காட்டிலும் மேலானவன். இருக்குக்களைப் புல்வேர்களால் மூடுகிறான் இது வித்யாசம் காட்டுவதற்காகவே. ஆதலால் ப்ரஜைகள் அரண்யத்தை அண்டிப் பிழைக்கிறார்கள். ஸ்துதிகளால் அடையத்தக்கவனே, உன்னை இப்பாக்கள் சூழ்ந்து என்றார். இது யஜுஸ்படிதான். இந்த்ரனுடைய கயிறுவாய் இந்த்ரனுடைய முடிப்பு என்றார் இந்த்ரனே ஸதஸுக்கு தேவதை. முதல் போட்ட முடிப்பை அவிழ்க்காமல் போனால் அத்வர்யு நீர் விடமுடியாமல் மாண்டு போவான். ஆதலால் அது அவிழ்க்கப்படவேண்டும்.

குறிப்பு:—

இரண்டாவதுப்ரபாடகத்தில்ஸோமலதையைப்ரதானமாகச்சொல்லி விட்டுப் பிறகு அவிர்தான மண்டப நிர்மாணம் வரையிலுள்ள கர்மாக்களைச் சொன்னார். இந்த 3ம் ப்ரபாடகத்தில் அக்நி ஸோமன் இவர்களுக்கான பசுவிஷயம் பிரதானமாகச் சொல்லப்படும். இதிலுள்ள 14. அநுவாகங்களின் விஷயம் விநியோகஸங்கிரஹக்காரரால் பின்வருமாறு சொல்லப் பட்டிருக்கிறது. 1. ஸதஸ்ஸை நிர்மாணம் செய்வது (2)உபரவங்க ளென்ற குழியைத் தோண்டுதல். (3) ஆக்நீத்ரீய, ஸதஸ் முதலிய இடங்களில் திஷ்ணியைக் குறித்துச் சொல்லுதல். (4) வைஸர்ஜனஹோமம். (5.) யூபத்தைச் சேதித்தல்(6)சேதித்தயூபத்தை நாட்டல்(7) பசுவை யூபஸ்தம்பத்தின்கண் ஓட்டுதல் (8)பசுவைக்கொல்லுதல்(9)வபையையெடுத்தல்(10 வஸாஹோமம் (11)குதபாகங்களை ஹோமம் செய்தல் (12) வஸதீவரீ தீர்த்தத்தைக்கொண்டுவருதல் (13) பிழியவேண்டிய ஸோமத்தை வண்டியிலிருந்து இறக்குதல் (14) காம்யயாஜ்யங்கள்.

(கல்பம்) பிறகு அத்வர்யு வலது புறமாக வந்து மேற்கே போய் ப்ராசீனவம்சம் என்றசாலையில் நாட்டியிருக்கும் மூலைக்கு நேர்கிழக்காக 6 அடிபோகவேண்டும் 7-வது அடியை வலது புறம் வைத்து அங்கே அப்ரியை ஸவக்க வேண்டும் அது ஔதும்பர்யத்துக்குக் காலமாம் அதற்குப் பிறகு அப்ரியை 1-ம் மந்த்ரம் சொல்லி எடுக்கவேண்டும்.

(2) அதை எடுத்து (2)ம்மந்த்ரம் சொல்லவேண்டும் அப்ரி என்பது மரத்தாலானது. தோண்டுவதற்கான கருவி (மண்வெட்டி), முகம் கூராயிருக்கும்; (3) ஔதும்பரியால் குழியைச் சுற்றிக் கிழிக்கிறான் (4) ஔதும்பரீக்கட்டையைப்ரக்ஷாலனம்செய்து (கழுவி) குழிக்குநேரேரவைக்கிறான். மேலே இருந்து கீழே ப்ரோக்ஷணம் செய்கிறான். (5) 'அவ்விடத்தில்(குழி) ஜலத்தைக் கொட்டுகிறான் (6) யவத்தை ஜலத்தில் போட (7) முஷ்டி பர்ஹிஸ்ஸைக் கீழே பரப்ப (8) உதும்பரக் கட்டையைத் தூக்கிநிறுத்த—(9) அதையே குழியில் வைப்பதற்கான மந்த்ரங்கள் (10) ப்ரதக்ஷிணக்ரமமாகச் சுற்றிமண்ணைப்போட(11)மைத்ராவருணதண்டத்தால்கெட்டிக்க(12) மேல் பக்கம் யூபம் கவையாக இருத்தல் வேண்டும். அவைகளைக் காதென்பார் இவைகளைக் கீழ்மேலாக வைக்கவேண்டும். இந்தக் கவைளுக்கு நடுவில் ஹிரண்யத்தை வைத்து க்ருதத்தைக்கொண்டுஸ்ருவத்தால்ஆஹுதிசெய்தல் வேண்டும்(13)யூபத்தை நிறுத்தின பிறகு கீழ்மேலாகக் கவைகள் வரும்படி தூண்களை நிறுத்தி மேலே, கீழ்மேலாகவும், தென்வடலாகவும் குறுக்கு மூங்கில்கள் போட்டு மேலே மூன்று தட்டிகளை நடுவிலும், மூன்றைத் தெற்கிலும், மூன்றை வடபுறமும் போடவேண்டும், தெற்குப்புறம்போட்டப்பட்டதட்டிகளின் நுனி வடபுறத்தட்டிக்கு மேலேஇருக்கவேண்டும்(14)மறைவுத்தட்டிகள்சுற்றிக் கட்டவேண்டும் (15) தென்புறமுள்ளவாசற் படித்தூணைக்குசத்தைக்கையில்வைத்துஊசியால் தட்டியோடு சேர்த்துக் கட்ட வேண்டும்.

முடிபோடவேண்டும். மறுபடி வேலையான பிறகு முடிப்பை அவிழ்க்க வேண்டும். இப்படிவடபுறமுள்ள நிலத்தூணுக்கும்செய்யவேண்டும். கடைசியாக மண்டபத்தைத் தொடவேண்டும்.

## அநுவாகம் 2.

ஹவிர்தாநாப் யந்தமே—உபரவாபிதாநம். (மேலே சொன்ன அவிர்த்தான மண்டபத்துள்ளே 'உபரவம்' என்று சொல்லப்படும் குழிகளைக் குறிக்கும்.)

1. அரக்கர்களைக் கொல்வனவும், 'வலகங்களை' நாசம் செய்வனவும்விஷ்ணுவைத்தேவதையாகக்கொண்டனவுமான (உபரவமென்ற பெயர்வாய்ந்த குழிகளைத்) தோண்டுகிறேன்.

2. இதோநான் அந்தவலகத்தை எடுத்தெறிகிறேன், இதையே நமக்கு ஸமானனோ (நமக்கு) ஸமான மில்லாதவனோ புதைத்து வைத்திருக்கிறான். நமக்கு ஸமானவனாகவோ ஸமமில்லாதவனாகவோ எவன் விரோதம் செய்கிறானோ அவனை இதோ கீழ்ப்படுத்துகிறேன். காயத்ரீ மந்த்ரத்தால் வலகம் கெட்டுவிட்டது.

3 இங்கே என்ன? பத்ரம் (க்ஷேமம்). "அது நம்மிருவருக்குமிருக்கட்டும்."

4 நீர் விராட். சத்ருவைக் கொல்லுவீர். நீர் ஸம்ராட். வேற்று ஜாதியில் பிறந்த சத்ருவைக் கொல்லுவீர். நீர் ஸ்வராட் க்ராமத்துக்கு வெளியிலுள்ள சத்ருவைக் கொல்வீர். நீர் விச்வராட். ஸர்வத்தையும் நாசம் செய்யும் பிறதேச சேனைகளுள்ள விரோதிகளைக் கொல்வீர்.

5 அரக்கர்களைக் கொல்வனவும், வலகங்களை மாய்ப்பனவும் விஷ்ணுதேவதையைச் சேர்ந்தனவுமான தீர்த்தங்களைப் ப்ரோக்ஷிக்கிறேன்; அரக்கர்களைக் கொல்வனவும் வலகங்களை மாய்ப்பனவும் விஷ்ணு தேவதையைச் சேர்ந்தனவுமான யவதான்யங்களைத் தெளிக்கிறேன். நீ யவதான்யம். எங்களிடமிருந்து த்வேஷிகளை விரட்டு; சத்துருக்களை விரட்டு; அரக்கர்களைக் கொல்வனவும் வலகங்களை மாய்ப்பனவும்

விஷ்ணு தேவதையைச் சேர்ந்தனவுமான பர்ஹிஸ்ஸுக்களைப் பரப்புகிறேன். அரக்கர்களைக் கொல்வனவும் வலகங்களை மாய்ப்பனவும் விஷ்ணு தேவதையைச் சேர்ந்தனவுமான ஆஜ்யங்களை ஹோமம் செய்கிறேன்.

6 அரக்கர்களைக் கொல்வனவும் வலகங்களை மாய்ப்பனவும் விஷ்ணுதேவதையைச் சேர்ந்தனவுமான இரண்டு (பலகைகளை) வைக்கிறேன். அரக்கர்களைக்......தனவுமான பலகைகளை சுற்றிப்போடுகிறேன். அரக்கர்களை....வுமானபலகைகளைச் (பர்ஹிஸ்ஸால்) சுற்றிப் பரப்புகிறேன். அரக்கர்களை...... தனவுமான பலகைகளைத் தொடுகிறேன்.

7 (கல்லைப்பார்த்து) நீ பெரியவன். பெரிய கற்களை அவயவங்களாகக் கொண்டிருக்கிறாய். இந்த்ரனுக்குப் பெரிய குரலோடு எங்கள் யாக விஷயத்தைக் குறித்துச் சொல்லும்.

குறிப்பு:—

முதலநுவாகத்தில் ஸதஸ் நிர்மாணம் செய்வதைச் சொன்னார். இதுகாறும் 36 அடிஅளவுள்ள மகாவேதியில் கட்டவேண்டிய உத்தரவேதி, அவிர்தானமண்டபம், ஸதஸ்மண்டபம் இவைகள் கட்டி முடிந்தன. அந்தமகாவேதியின் உத்தரதக்ஷிண பாகங்களில் ஆக்நீத்ரீயம் மார்ஜாலீயம் என்ற இடங்களைக் கட்டுவதற்கு மந்த்ரங்கள் கிடையாது. ஆதலால் நிர்மாணம் செய்யப்பட்ட ஸ்தானங்களுக்கு நடுவில் எது மந்த்ரபூர்வகமாக நிர்மாணம் செய்யப்படவேண்டுமோ அது சொல்லப்படவேண்டியதாம். இப்போது உத்தரவேதியில் எல்லாம் சொல்லவேண்டியபடியால் அவிர்தான மண்டபத்துக்குளுள்ள உபரவங்களைப்பற்றி இந்த இரண்டாவது அநுவாகத்திற் சொல்லுவார்.

தக்ஷிண அவிர்தான வண்டியினடியில் முன்பக்கம் ஒருசாண் குறுக்களவும், அதே ஆழமுமுள்ள நான்கு குழிகளை. (1.) ஐச்சொல்லி வெட்டவேண்டும்.

'வலகம்— ஜீரணமாய்ப் போன பாய்அல்லது துணித்துண்டுகளில் கட்டப்படும் எலும்பு, நகம், மயிர்' காலடிமண் முதலியவற்றை விரோதிகள் மரணமடையப் பூமியில்புதைத்துவைப்பார்கள்; இதை வலகம் என்பார்.

அவிர்தானம்' என்ற வண்டியே சிரஸ்ஸ்தானமாம்; உபரவக்குழிகள், செவி மூக்கு முதலிய ஓட்டைகளிலுள்ள ப்ராணசக்தி தங்கும் இடமாத

லால்' அவிர்த்தானத்துக்கடியில் தோண்டுவது சரியே. அவிர்த்தானத்துக்குக் கீழ்ப்பக்கத்தில் பூமியில் உபரவங்களாதலால் உலகத்திலும் மேல் மண்டை யெட்டிற்குக் கீழ்ப்பக்கமே ப்ராணஸஞ்சாரங்கள் என்றார்.

(2) குழியிலிருந்து மண்ணை வெளியில் போடவும் வலகத்தைஅவிழ்த்து விடவும்; கீழ்ப்படுத்துகிறேன் என்று யஜமானன் காலின்கீழ் போட வேண்டும்.

ஸமானன்;— வித்யை, வித்தம், ஸௌபாக்யம், இவைகளிற்சமமானவன். காயத்ரம் என்ற சந்தத்திற்கு அபிமானியான தேவதையால் 'வலகம்' கெடுக்கப்பட்டது எனக்கொள்க;

(ப்ராஹ்மணம்) ப்ராண, அபான, கண், காது முதலியன வெல்லாம் சரீரத்தின் உளளே, ஒன்று சேரும். மேலே, ப்ராண சக்திகள் அதன் கோணங்களில் நிற்கும். ஒன்றுசேரா.

(3) (கல்பம்) யஜமானன் முன்பக்கம் தென்குழியிலும், அத்வர்யு பின் பக்கத்தில் வடகுழியிலும் வலதுகைகளை விட்டு, தொட்டுக்கொண்டிருக்கும் போது 'அத்வர்யுவே, இங்கே என்ன இருக்கிறது? என்று யஜமானன் கேட்கவும், மற்றவர் 'க்ஷேமம்' (பத்திரம்) என்று பதில் உரைப்பார்.' அது நமக்கிருக்கட்டும்' என்று சொல்லவும். 'என்ன இருக்கிறது என்பதால் நமக்கு உபயோகமானது உபரவத்தில் எது, என்ற கேள்விக்கு ஸோமம் பிழிவது ஆனபிறகு அடையத்தக்கது எல்லாம் இருக்கிறதென்று பதில்.

(4) இதில் ஒவ்வொரு பாகத்தைச் சொல்லி ஒவ்வொரு உபரவங்களையும் தொட மந்த்ரம். முன்பக்கத்தில் தென்பாகத்திலிருந்து ஆரம்பித்து வரிசையாகச் சொல்லவேண்டும். விராட் என்றால் விதம்விதமாய் விளங்கும் என ஸாயணர் வ்யுத்பத்தி கூறுவர். ஸம்ராட்—நன்றாக (ஸம்) விளங்குபவர், ஸ்வராட்—தானாகவே (ஸ்வ) விளங்குபவர், விச்வராட்—எங்கும் விளங்குபவர்; நாலுவிதமான சத்ருக்களில் முதலில் குறித்தது ஆந்தரமான இந்த்ரிய மனோவிருத்திகளைக் குறிக்கும்.

(5) முதலில் இந்தக் குழிகளில் தீர்த்தம் தெளிப்பதும், பிறகு மிஞ்சியதைக் கொட்டுவதும், யவதான்யங்களை அதன் மேல் போடுவதும், பிறகு தர்ப்பங்களைப் பரப்புவதும் பிறகு ஹிரண்யத்தை வைத்து வரிசையாக ஹோமம் செய்வதுமாம் (கல்பம்.)

(ப்ராஹ்மணம்) ப்ராணன் ஈரமுள்ளதாம்:— வாய், மூக்கு, கண், முதலிய கோளங்களில் ஈரம் காண்பதால் ப்ராணங்கள் ஈயிருள்ளன— கண்ணிமை மூக்குகளில் ரோமம் காணப்படுகின்றமையால்.

(6) இரண்டு அபிஷவண மென்னும் பலகைகளை வைக்கவும். இவைகளை முன்னால் இரண்டும் பின்னால் இரண்டுமாக முளைகளை அடித்து நகராமல் செய்ய வேண்டும். சில்லை எடுத்துச் சுற்றி வைக்கவும், பர்ஹிஸ்ஸால் சுற்றிலும் பரப்பவும்; கடைசியால் தொடவும், மந்த்ரங்கள்.

(7) பலகைகளுக்கு இடையே கீழ்ப்பக்கம் கழுத்துபாகமும் ரோமம் மேலும் இருக்கும்படி மான் தோலைப் பரப்பவும். கற்களைத் தோற்பலகைகளின் மேல் பலத்து அடிக்கவும்.

Vi—2—11 உபரவாபிதானம்

அவிர்தானம் என்ற வண்டி சிரஸ்ஸே; உபரவங்கள், ப்ராணங்களேயாம். அவிர்தானத்துக்குக் கீழே தோண்டப்படுகின்றன ஆதலால் சிரஸ்ஸில் ப்ராணங்களாம். தோண்டப் படுகின்றன. ஆதலால் சிரஸ்ஸுக்குக் கீழே [விதிப்பார்.] கீழே ப்ராணங்களாம். அரக்கர்களைக் கொல்வனவும், வலகங்களை நாசம் செய்வனவும் விஷ்ணுவைத் தேவதையாகக் கொண்டனவுமானவைகளைத் தோண்டுகிறேன் என்றார். உபரவங்களுக்குத் தேவதை விஷ்ணுவாம். அஸுரர்கள் ஓட ஆரம்பித்துத் தேவர்களின் ப்ராணனை நாசம் செய்வதற்கு வலகங்களை ஆழமாகப் புதைத்தார்கள். ஒரு முழத்துக்கப்பால் அவைகளைக் கண்டெடுத்தார்கள். ஆதலால் முழம் ஆழம் வெட்டவேண்டும்.

இதோ நான் இந்த வலகத்தை எடுத்தெறிகிறேன். இதையே நமக்கு ஸமானனோ ஸமானனல்லாதவனோவான எவன் புதைத்து வைத்திருக்கிறானோ என்றார். இரண்டு புருடர்கள். ஒருவன் ஸமானன். ஒருவன் ஸமானனல்லாதவன். இவர்களே அந்த வலகத்தைப் புதைத்தவர்கள். அதையே எடுத்தெறியவேண்டும்.

(ஓட்டைகளைக் கீழே) சேர்க்கிறான். ஆதலால் உள்ளே ப்ராணங்கள் சேருகின்றன (சந்திக்கின்றன.) மேலே ஒன்றுசேர்க்கக்கூடாது. ஆதலால் ப்ராணங்களும் ஒன்றுசேருவதில்லை.

ஜலத்தைக் கொட்டுகிறான். ஆதலால் உள்ளே ப்ராணங்கள் ஈரமுள்ளனவாம். யவங்களோடு கூடினதாக (மேலே சொன்னபடி) கொட்டுகிறான். பலம்தான் யவம். ப்ராணங்கள் உபரவங்கள். ப்ராணசக்திகளில் பலத்தை வைத்ததாம். பர்ஹிஸ்ஸைப் பரப்புகிறான். ஆதலால் உள்ளே ப்ராணங்கள் மயிருள்ளவைகளாகும். ஆஜ்யத்தால் ஹோமம் செய்கிறான். தேஜஸ்தான் ஆஜ்யம். ப்ராணங்கள் உபரவங்கள். ப்ராணங்களில் தேஜஸ்ஸை வைப்பதாம்.

அதிஷவணம், என்ற ஸோமம் பிழிவதற்கான பலகைகள் யக்ஞத்தினுடைய தாடைகளாம். அவற்றைச்சேர்ப்பதில்லை. தாடைகள் சேர்க்கப்பட்டி

ருக்கவில்லையே. தீர்க்ககாலம் செய்யப்படும் ஸோமயாகத்தில் சேர்க்கலாம். திடமாக இருக்கும்படிக்கு. ஹவிர்தான மென்பது யக்ஞத்தின் சிரஸேயாம். (அதன்) ப்ராணங்கள் உபரவங்கள்' தாடைகள் அதிஷவணங்களாம்; நாவு தோலாம்; கற்களே பற்கள்; முகம் ஆஹவநீயம்; மூக்கு உத்தரவேதியாம். உதரம் ஸதஸாம். நாக்கால் பற்களில் மென்று தின்பதும் வாயிற்போம் வாயில் போனவுடன் உதரத்துச் செல்லும். ஆதலால் அவிர்தானத்தில் தோலில் கற்களால் பிழிந்து ஆஹவநீயத்தில் ஹோமம் செய்து மேற்கே போய் ஸதஸில் பட்சிக்கிறார்கள்.

எவன் யக்ஞத்தினுடைய முகத்தில் விராட்டின் கறவையை அறிவானோ அதை அவன் கறக்கிறான். இந்தப் (பசு) விராட். அதன்தோல் இந்த சர்மம் அதன் மடி, அதிஷவணப் பலகை. ஸ்தநங்களே உபரவங்கள். கற்களே. கன்றுகள்.' ருத்விக்குக்கள் கறக்கிறார்கள். ஸோமமே பால். இப்படி எவன் அறிவானோ அவன் அதைக் கறக்கிறான்.

## அநுவாகம் 3.

ஆக்நீத்ரீயஸத; ப்ரப்ரிதிஸ்தாநேஷு. திஷ்ண்யாபிதானம்: (=.ஆக்நீத்ரீய,ஸதஸ் முதலிய இடங்களில் திஷ்ணியங்கள் செய்வதைக் குறித்து

ஆக்நீத்ரீய திஷ்ண்யத்தைப் பார்த்து) அநேக விதமாகிறாய், (அவிஸ்ஸை.) க்கொண்டு சேர்ப்பிக்கிறாய். (ஹோத்ரீய திஷ்ணியத்தைப் பார்த்து) அவிஸ்ஸைக் கொண்டு சேர்க்கும வஹ்நி. ஆகிறாய்— (மைத்ராவருணீய திஷ்ணியத்தைப் பார்த்து) மித்ரன், வருணன் இவ்விருவர் ரூபமாக ஆகிறாய்— (ப்ராஹ்மணாச் சம்ஸியைச் சேர்ந்த திஷ்ண்யத்தைப்பார்த்து) ஸர்வத்தையும் அறியும் தூதன் ஆகிறாய் (போத்ரீய திஷ்ண்யத்தைப் பார்த்து) ஆசைப்படத்தக்க வித்வான் ஆகிறாய் (நேஷ்டாவைச் சேர்ந்த திஷ்ண்யத்தைப் பார்த்து) ஸோமரட்சகர்களான அங்காரி பம்பாரி. என்றவர்களின் ரூபமாகிறீர்கள். (அச்சாவாகனைச் சேர்ந்த திஷ்ண்யத்தைப் பார்த்து) அவஸ்யு, துவஸ்வாந் என்ற வாதவிசேஷங்களின் ரூபமாவீர். (மார்ஜாலீய திஷ்ண்யத்தைப்பார்த்து)நீர் சுத்தம் செய்பவர். (ஆஹவநீயத்தைப் பார்த்து) நன்றாய் விளங்கும் க்ருசானு வாகிறீர். (ஆஸ்தாவத்தைப் பார்த்து) சுற்றி உட்கார யோக்யமானதும் பரிசுத்தமானது மாகிறாய். (சாத்வாலமென்றகுழியைப்பார்த்து.) வேகமாகப் போக

வேண்டிய விஷயமானதும், இடை வெளிநிறைந்தது மானதாகிறாய்; (பசு கொல்லப்படும் ப்ரதேசத்தைப் பார்த்து) ராக்ஷஸர்களால் தீண்டப்படாததும், ஹ்ருதயாதி ஹவ்யத்தைப் பாகஞ்செய்வது மாகிறாய். [உதும்பரக் கட்டையைப் பார்த்து]ஸாமகர்களுக்காக உள்ள உட்காருமிடமாயும் ஸ்வர்க்கத்தை ப்ரகாசிக்கச் செய்வதுமான தாகிறாய். (ப்ருஹ்மத்தின் ஆஸனத்தைப் பார்த்து) ப்ருஹ்மன் என்ற ருத்விக்கினுடைய (ப்ரோக்ஷண முதலிய கர்மங்களைச்செய்ய அனுமதி) ரூபமான ஜ்யோதியைப் பெறுவதும் ஸ்வர்க்கத்துக்கு ஸாத்ருச்யமான ஸ்தானமாகவுமாகிறாய். (நூதனகார்கபத்யத்தைப் பார்த்து] ப்ரோஷ்டபதமென்ற நக்ஷத்திரமானதும் ஏகபாத்தென்ற தேவதா ரூபமுமாகிறீர். [விடவேண்டிய கார்ஹபத்யத்தைப்பார்த்து] ப்ரோஷ்ட்பதமென்ற நக்ஷத்ரமு அஹிர் புத்ந்யை மென்றதேவதா ரூபமுமானவர்[மேலே சொன்ன ஆக்நீத்ரீயமுதல்விடவேண்டிய கார்ஹபத்யம் வரையிலுள்ள 16 ஸ்தானங்களில்அபிமானிக்கும்) அக்நியே, உமது ரௌத்ரமானஸேனையால் ராக்ஷஸர்களிடமிருந்து என்னைக் காவும். கர்மபலத்தைக் கொடுத்து என்னைப் பூர்ண மனோரதனாகச் செய்யும். என்னை நாசம் செய்யாமலிரும்.

குறிப்பு:—

ஆக்நீத்ரீய திஷ்ணியத்திற்கு அத்வர்யுபோய் ஸ்ப்யத்தால்தோண்டிச் சாத்வாலத்திலிருந்து சில்லு மண் முதலியவற்றை எடுத்துவைத்து திஷ்ணியத்தைக் கட்டி மணலால் தூவி சுத்தமாகவைக்கவும். பிறகு ஸதஸ்ஸுக்குள்ளே போய் முறைப்படி கீழே சொல்லிய திஷ்ணியங்களை வைக்க வேண்டும். ஹோதா தென்பக்கத்தில், மைத்ராவருணன் வடபுறம் ப்ராமணாசம்ஸி போதா நேஷ்டா அச்சாவாகன், மார்ஜாலியன் இவர்களுடைய திஷ்ணியங்களை வைக்கவேண்டும். பிறகு ஆஹவநீயத்தைப் பூஜைசெய்ய வேண்டும். மகாவேதியில் சாத்வாலத்திற்குத் தெற்கேயுள்ள ஆஸ்தாவத்தைப் பார்த்து எழுந்து பூஜிக்கவேண்டும். அப்படியே சாத்வாலம், பசுச்ரபணம், ஔதும்பரீ ப்ரஹ்மாவின் ஆஸநம், கார்ஹபத்யம், தக்ஷிணாக்நி, முன் கார்ஹபத்யம் இவைகளை முறையே உபஸ்தாநம் செய்ய வேண்டும். ஒவ்வொரு மந்திரத்தோடும் ரௌத்ரேண என்ற வாக்யத்தைச் சேர்த்துச் சொல்லவேண்டும்.

Vi—3—1 —திஷ்ணியாபிதானம்:—

சாத்வால மென்ற குழியிலிருந்து திஷ்ணியம் என்ற அடுப்புகளைச் செய்கிறான் .யக்ஞத்திற்கு சாத்வாலம் யோநியாம் (பிறக்கும் இடமாம்). இதனால் யக்ஞம் யோநியோடு கூடினதாகிவிடும்.

தேவர்கள் யக்ஞத்தைத் தோற்றார்கள். அதை ஆக்னீத்ரம் என்ற தேவதையின் சாமர்த்யத்தால் மறுபடியும் ஜெயித்தார்கள். ஆக்னீத்ரமென்பது யக்ஞத்தினுடைய ஜயிக்கமுடியாத அம்சமாம். ஆக்னீத்ரத்திலிருந்து திஷ்ண்யங்களுக்கு அக்னியைக் கொண்டுவருவதனாலும், அது யக்ஞத்தினுடைய ஜயிக்கமுடியாத அம்சமானதாலும், யக்ஞத்தை மறுபடி புதுப்பித்ததாகும்.

பஹிஷ்பாவமானம் என்ற ஸ்தோத்ரத்தைக்கானம் செய்யும் (ருத்விக்குகள் தோற்று விட்டவர்கள்போல் ஓடுகிறார்கள். பஹிஷ்பாவமான ஸ்தோத்திரத்தை முடித்தபிறகு ஆக்னீத்ரனைப் பார்த்து அக்னிகளை வெளியே இழு, பர்ஹிஸ்ஸைப் பரப்பு, புரோடாசங்களைத் செய்,''' என்பார் இதனால் யக்ஞத்தையே மீண்டும் ஜெயித்து மறுபடி விஸ்தாரப் படுத்தினதாக ஆகும். ப்ராதஸ்ஸவனம் மாத்யந்தின ஸவனம் இவைகளில் ஆக்னீத்ரீய திஷ்ணியத்திலுள்ள கொள்ளிக்கட்டைகளால் இழுக்கவேண்டும். (விஹரேத்) மூன்றுவது ஸவனத்தில் செத்தைகளைக் கொளுத்தி இழுக்கவேண்டும். இதனால் ஸோமத்திற்குத் தேஜஸ்ஸுண்டாகும். மேலும் இது புஷ்டியடைந்ததாகும்:—(திஷ்ணியஸங்கத்தை ப்ரசம்ஸை செய்கிறார்]திஷ்ண்யங்களே அந்த லோகத்தில் ஸோமத்தை இரட்சிக்கிறார்கள். கொண்டுவரப்பட்டபோது ஸோமத்தைத் தாங்களேபோய் சுற்றி உட்கார்ந்தார்கள். இப்படி இதைஅறிகிறவனே பரிஜனங்களைப் பெறுவான்.

[சில திஷ்ணியங்களில் ஸோமாஹுதியை விதிப்பார்.] அந்த திஷ்ணியங்கள்) ஸோமபான மில்லாமல் செய்யப்பட்டார்கள். அவர்கள் தேவர்களிடத்தில் ஸோமபானத்தை வேண்டினார்கள். தேவர்கள் அவர்களைப் பார்த்துச் சொன்னார்கள்; இரண்டு இரண்டு நாமாக்களை வைத்துக் கொள்ளுங்கள் அப்போது கிடைத்தாலும் கிடைக்கும். கிடைக்காமற் போனாலும் போகும்:' என்று. பிறகுதிஷ்ணியங்கள் அக்னிகளாயின ஆதலால் இரண்டுபெயர்களை யுடையவன் ஸம்ருத்தியடைவன்.

அவர்களுள் அதி சமீபத்தில் உட்கார்ந்தவர்கள், ஸோமபானத்தை அடைந்தார்கள். (இவர்கள்) ஆஹவனீயன், ஆக்னித்ரீயன் ஹோத்ரீயன் மார்ஜாலீயன். ஆதலால் இவைகளில் ஆஹுதி செய்யவேண்டும். மற்றவர்களை விட்டு வஷட்காரம் செய்கிறான். ஏனெனில் இவர்கள் ஸோமபானம் அடையாதவர்கள்.

தேவர்கள், கிழக்கு ப்ரதேசத்தில் செய்த ஆகுதிகளால் முன் செய்த அஸுரர்களை விரட்டினார்கள். மேற்கு ப்ரதேசத்தில் செய்த ஆகுதிகளால் பின்னின்ற அஸுரர்களை விரட்டினார்கள்: கிழக்கே வேறு ஆஹுதிகள் செய்ய வேண்டும்: மேற்குப் பக்கம்உட்கார்ந்து திஷ்ணியங்களை ப்ரோக்ஷணம் செய்ய வேண்டும். முன்னும், பின்னுமுள்ளசத்ருக்களை யஜமானன் விரட்டி விடுவான். இப்படியே ப்ரஜைகளை உத்பாதனம் செய்வது ஒரு பக்கமும், ப்ரஜைகள் உத்பவிப்பது வேறுபக்கமுமாம்.

திஷ்ணியங்களே ப்ராணங்களாம், அத்வர்யு திஷ்ண்யங்களைத் தாண்டிமேற்கே சென்றால் ப்ராணங்களை ஒன்று சேர்த்ததாகும். ஆயுஸ்குறையும்:— ஹோதா என்பவன் யக்ஞத்தின் இந்தாபியாம். நாபிக்குமேல் ப்ராணனும், கீழ் அபானனுமாம். அத்வர்யு ஹோதாவைத் தாண்டி மேற்கே போனால்அபானத்தில் ப்ராணனை வைப்பதாகும். ஆயுள் குறைவன்.

—அத்வர்யு கூட பாடக்கூடாது அத்வர்யு வாக்கில் வீர்யமுள்ளவன். அத்வர்யு கூடகானம் செய்தால் உத்காதாவினிடத்தில் வாக்கைக் கொடுத்தவனுவான், இவன் வாக்கும் குன்றிவிடும்.

—ப்ரும்மவாதிகள் சொல்வதாவது:— ஸோமாஹூதி முடியாத வரையில், ஸதஸைத்தாண்டி மேற்கே போகக்கூடாது: அப்படியாயின் (ப்ராசீனவம்சத்தில் புதிய கார்ஹபத்யத்தில் செய்யவேண்டிய) தக்ஷிண ஹோமங்களை எப்படிச்செய்வது? தேவர்களுக்கு தக்ஷிண ஹோமமே முடிவாகும்..

பிறகு எதற்காகத்தான் தேவர்கள், இதுமுடிவா, இல்லையா என்று அனுக்ஞை (சம்மதி) செய்வார்கள். ஆக்நீத்ரத்தைச் சுற்றிவந்து அதற்குபக்கே (நின்று மேற்கே போய் ப்ராசீநவம்சத்தில்) தக்ஷிண ஹோமத்தைச் செய்யவேண்டும்: (இப்படிச் செய்தால்) ப்ராணங்களைச் சேர்த்து வைத்ததாகாது. சிலதிஷ்ண்யங்களில்தெளிப்பார்கள் சிலதிஷ்ண்யங்களில் தெளிப்பதில்லை. எதில் தெளிப்பார்களோ அதை ப்ரீதிபுள்ளதாகச் செய்கிறான். எதில்தெளிக்க வில்லையோ, எதை மந்தரத்தால் உபஸ்தானம் செய்கிறானோ அதனால் அதை ப்ரீதி செய்கிறான்.

## அநுவாகம் 4.

வேத்யாம் அக்நீ ஷோமீய பசு அபிதாநாய அக்நி ஷோம் ப்ரணயநார்த்த வைஸர்ஜன ஸோமாபிதாநம்

1 ஸோமனே; நீர், சரீரத்தைச் சேதிக்கும் அவர்களிடமிருந்தும் த்வேஷிகளிடமிருந்தும், (எங்கள்) விரோதிகள் செய்யும்மற்றச்செயல்களிலிருந்தும் காப்பாற்றுகிறீர். நீரே பெரிய பலமாகிறீர். ஸ்வாஹா. (ஸோமனே)' (எங்களிடத்தில்) ப்ரீதி உள்ளவராயும் (அரக்கர்கள் காணக்கூடாதபடி அல்பமான தேகத்தையுடையவராயும் ஆஜ்யத்தின் பிந்து வைக்குடியும். கீழ்வாசல் வழியாக வெளியே வந்து எந்த அக்நியைக் கொண்டுபோகிறார்களோ அந்த அக்நி எங்களுக்கு ச்ரேயஸ்ஸைக் கொடுக்கட்டும். இவர் வைரிகளை நாசப்படுத்திக் கொண்டு முன் செல்லட்டும், இவர் சந்தோஷ

மான அந்தக்கரணத்தோடு சத்ருக்களை ஜயிக்கட்டும். அன்னலாபத்திற்காக ஏற்படும் சண்டையில் இவர் அன்னத்தை ஸாதித்துக் கொடுக்கட்டும். வ்யாபியான ஆஹவநீய அக்நியே, எங்களை அநுக்ரகம்செய்வதற்காக (சத்ருக்களிடத்தில்) விசேஷமான பராக்ரமத்தைக் காட்டும். நாங்கள் வாசம் செய்வதற்கு விசேஷமான (க்ருக, தனுநிகளைச்) செய்யும்— க்ருதத்தால், ஜ்வாலையைப் பெறுபவரே, ஆஹுதி செய்யும் இந்த க்ருதத்தை (நெய்யை)க் குடியும். இந்த யஜமானனை விசேஷமாகப் பெருக்கும்.

2 மார்க்கம் தெரிந்த ஸோமன் தேவர்களுக்கு ஸ்தானமானதும், அலங்காரம் செய்யப்பட்டதும், யக்ஞத்துக்குக் காரணமானதுமான அவிர்தேசத்தை அடைகிறான்.

3 அதிதியின் இருப்பிடமாவீர், அதிதியின் ஸ்தானத்தில் உட்காரும்.

4 (இதுகாறும் யஜமானன் ஸோமனை ரக்ஷித்தான். இதற்கு மேல்) ஸவித்ருதேவ, உங்கள் ஸோமத்தை, நீங்களே ரட்சியுங்கள், இப்படி ரட்சிக்குமுங்களை ஒருவனும் ஹிம்ஸிக்காமலிருக்கட்டும்.

5 ஸோமனே, தேவனான நீர், தேவர்களோடு இதோ சேர்ந்து விட்டீர். நானும், மனிதனாக மனிதர்களோடு புத்ரர்களோடும், பசு, முதலிய தனபுஷ்டியோடும் சேர்ந்து விட்டேன்.

6 தேவர்களுக்கு நமஸ்காரம், பித்ருக்களுக்கு ஸ்வதா. வருணபாசத்தினின்று இதோ விடுவித்துக் கொள்வேனாக, (ஸர்வஜனங்களுக்குமான) வைச்வாநரம் என்ற ஜ்யோதிஸ்ஸையும் ஸுவர்க்கத்தையும் பார்ப்பேனாக.

7 வ்ரதபதியான அக்நியே, நீர், வ்ரதங்களுக்கெல்லாம் வ்ரதபதியானவர். உம்மிடமிருந்த எனது சரீரம் என்னிடத்திலும், என்னிடத்திலிருக்கும் உமது சரீரம் உம்மிடத்திலும் இருக்கட்டும். வ்ரதபதியே, வ்ரதிகளான நம்மிருவர்களின் வ்ரதங்கள் இருக்கவேண்டியபடி இருக்கட்டும்.

குறிப்பு:—

மூன்றாவது அனுவாகத்தில் தி்ஷ்ணிகளை வர்ணித்தார். இது வரையில் வேதியிலுள்ள விசேஷ நிர்மாணங்கள் முடிந்தன. பிறகு அந்தவேதியில் அக்நி, ஸோம, தேவதைகளுக்கு ஆன பசுவைப்பற்றிச் சொல்லவேண்டியது. அக்நி, ஸோமன் இவர்களைக் கொண்டுவந்த பிறகு பசுவைப்பற்றி கூறவேண்டியதென்று அதற்காக வைஸர்ஜன ஹோமத்தைப் பற்றி இந்த அனுவாகத்தில் கூறுவார்:—

வைஸர்ஜன ஹோமத்தில் இரண்டு மந்த்ரம். கிழக்கு முகமாய்த் துவாரத்தின்வெளியே போகாமந்த்ரம். ஆஹவநீயத்தில் ஸ்ருவாஹுதி ஹோமமந்த்ரம். வைஸர்ஜநாஹுதிகள் ஸுவர்க்க லோகத்திற்காகச் செய்யப்படுகின்றன. (அவாந்தர தீக்ஷையினின்றும் விஸர்ஜனம் செய்யப்படுவதால் இதற்கு வைஸர்ஜனமென்று பெயர்.)

கார்ஹபத்யத்தில் இரண்டு இருக்குகளால் ஹோமம் செய்வார். யஜமானன் இரண்டு பாதங்களுள்ளவன். இது ப்ரதிஷ்டைக்காக. ஆக்நீத்ரத்தில் ஹோமம் செய்கிறார். இவரை, ஸுவர்க்கலோகத்திற் சேர்ப்பிக்கும்.— தேவலோகத்திற்குப் போய்க்கொண்டிருக்கும் தேவர்களை ஹிம்ஸிக்கப் பார்த்தார்கள். ஸோம ராஜாவால் ராக்ஷஸர்களை விரட்டினார்கள். ரக்ஷஸ்கள் தங்களைப்பிடித்துக்கொள்ளாமலிருக்கும்படி தங்கள் சரீரங்களை அல்பமாகச் செய்துகொண்டு ஸ்வர்க்கலோகத்தை அடைந்தார்கள். ஸோமன் கிட்டினவனானார். ராக்ஷஸர்களை விரட்டுவதற்கு வைஸர்ஜனஹோமத்தைச் செய்கிறார்.

'ஸோமனே, நீர் சரீரத்தைச் சேதிக்கும் அரக்கர்களிடமிருந்தும்,' என்றார். ஏனெனில் இவர் சரீரத்தைச் சேதிக்கும் அரக்கர்களையே சேதிப்பவராம். "த்வேஷிகளிடமிருந்தும், எங்கள் விரோதிகள் செய்யும் மற்றச் செயல்களிலிருந்து மென்றார். விரோதிகள் செய்யும் மற்றச் செயல்களே ராக்ஷஸர்களும். 'நீரே, பெரிய பலமாகிறீர்', என்றார். விஸ்தாரமான ரக்ஷையைச்செய்யும் என்றபடி. "ப்ரீதி உள்ளவனாய் அல்பமான தேகத்தை உடையவராக ஆஜ்யத்தின் பிந்துவைக்குடியும்" என்றார் இது ராக்ஷஸர்கள் அதனை அடையக் கூடாதபடி. யஜமானனைச் சிறியதாகச் செய்து ஸுவர்க்க லோகத்தை அடையும்படி செய்கிறான்.

ஸோமத்தையும், பிழியும் கற்களையும், உரல்போன்ற வாயுபாத்ரங்களையும், த்ரோணகலசம் என்றபெரிய மரப்பாண்டத்தையும், எடுத்துக்கொள்வார்கள். யஜமானன் பத்நியை அழைத்துச் செல்வார்கள். தங்களோடு வண்டிகளையும் இழுத்துச் செல்வார்கள்.

எவ்வெவைஎஜமானனுடையவோ அவைகளெல்லாம்(அவனோடுஸுவர்க்கலோகம் போம். ஸுவர்க்க லோகத்திற்கு அழைத்துச் செல்லவேண்டு

மென்று 'நய' என்ற ரிககால் ஆக்நீத்ரம் என்ற அக்நியில் ஆஹுதிசெய்கிறார். ஆக்நீத்ரத்தில், கற்களையும் வாயுபாத்ரங்களையும், த்ரோணகலசத்தையும் வைக்கிறார். ஸோமத்தை மாத்ரம் இவைகளை விட்டுப் பிரிப்பார் சேர்த்து வைத்தால் கெட்டுவிடும்.— ஸோமரிக்கால் முன்பு செல்லும்படி செய்கிறான், தன் தேவதையோடு முன்சொல்லச் செய்கிறதாம். "அதிதியின் இருப்பிடமாவாய்: அதிதியின் ஸதானத்தில் உட்காரும்" இது யஜுஸ்ஸ்படிதான் 'இதுகாறும் யஜமானனே ஸோமனை இரட்சித்தான். இதற்குமேல் ஸவித்ருதேவ, உங்கள் ஸோமத்தை" என்றார். ஏனெனில் ஸவிதா தேவனால் தூண்டப்பட்டு இதை (ஸோமத்தை) தேவர்களிடத்தில் ஒப்புவிக்கிறான்.— ஸோமனே, தேவனான நீர், தேவர்களோடு இதோ சேர்ந்துவிட்டீர்" என்றார் ஏனெனில் தேவனானபடியால் தேவர்களோடு சேர்ந்தார். 'நான் இதோ, மனிதனாய் மனிதர்களோடு' என்றார். தானும் மனிதனானதலால் மனிதரோடு சேர்ந்தான். இந்த யஜுஸ்ஸைச் சொல்லாவிடில், யஜமானன், ப்ரஜை, பசு, இவைகள் இல்லாமல் போய்விடுவான், "பசு முதலிய தனபுஷ்டியோடும் சேர்ந்துவிட்டேன்" என்றார், வாஸ்தவத்திலேயே, ப்ரஜையோடும், பசுக்களோடும், இந்த லோகத்தில் இருப்பான். 'தேவர்களுக்கு நமஸ்காரம்' என்றார். தேவர்களுக்கு நமஸ்காரம் தான் (தகுதி). 'பித்ருக்களுக்கு ஸ்வதா' என்றார். பித்ருக்களுக்கு ஸ்வதாகாரமே உரிமையாம். "வருண பாசத்தினின்று விடுவித்துக் கொள்வேனாக" என்றார். வருண பாசத்தினின்றும் விடுவிக்கப்படுகிறான். 'வ்ரதபதியான அக்நியே, தனது பூர்வசரீரத்தை (அக்நியிடமிருந்து உடனே) திருப்பிப்பெற்றுக்கொள்ளவேண்டும்.' எனச்சொல்வார்கள், 'பணக்காரன் தன்வசத்திலிருப்பதைத் திருப்பிக்கொடுப்பானோ, மாட்டானோ' என்றது யாருக்குத்தான் தெரியும். பிழியும் கற்கள் ஸோமராஜாவினுடைய திருட்டுக் கூட்டம். இப்படித்தெரிந்து ஆக்நீத்ரத்தில் பிழியும் கற்களை வைப்பவனைத் திருட்டுக் கூட்டம் தொடாது.

---

## அநுவாகம் 5.

அக்நி ஷோம பசு அபிதாநாய பச்வங்க யூபச்சேதநாபிதாநம்.

1— (முன்பு நிற்கும் யூபத்துக்கான விருக்ஷத்தைப்பார்த்து,) வேறு (யூப வ்ருக்ஷங்களை) விட்டு வந்திருக்கிறேன், மற்று வேறு மரங்களுக்கு ஸமீபத்திலும் போகவில்லை. உத்க்ருஷ்ட (உயர்ந்த) லக்ஷணங்களுள்ளவனும், நிக்ருஷ்டலக்ஷணங்களில்லாதவனுமான, உன்னையே இதோ அடைந்திருக்கிறேன், அப்பேர்க்கொத்த விஷ்ணுவைத் தேவதையாகக் கொண்ட உன்னை தேவயாகத்திற்காகக்கொண்டாடுகிறேன்.

2 —ஸவித்ருதேவன் உன்னை மதுவால் (தேனால்) அபிஷேகம் செய்யட்டும். ஓஷதியே, இதை (தர்ப்பத்தை ரட்சி. கோடாலியே இதை ஹிம்ஸிக்காதே.

3— (சேதிக்கப்பட்ட விருக்ஷத்தைப் பார்த்து) நுனியால், வானத்தைக்கீறாதே. மத்யத்தால் அந்தரிட்சத்தை ஹிம்ஸிக்காதே, பூமியோடு சேர்ந்து இரு.

4... வனத்திற்குப் பதியான (விருக்ஷமே), நூறு கிளைகளாக வளர்வாயாக.

5— நாங்களும் ஆயிரம் கிளைகளாக வளர்வோமாக.

6... (சேதிக்கப்பட்ட விருக்ஷத்தைப்பார்த்து,) பளபளவென்று கூர்மையான இந்தக்கோடாலிவிசேஷமான ஸௌபாக்கியத்திற்காகமுன்கொண்டுவந்த (உன்னைச்சேதித்தால் நீ பயப்பட வேண்டாம்)

7— சேதிப்பதால் உனக்கு ச்ரமம் ஏற்படாமலிருக்கட்டும். நல்ல வீரர்களைக் கொடுப்பவர் நீர், தனங்களையும் கொடுப்பவர்.

குறிப்பு:

5 முதல் 7 அநுவாகங்களில் ப்ரணீதர்களான அக்நி, ஸோம தேவதைகளின் பசுவைச் சொல்லவேண்டியது. இந்த 5ல் பசுவின் அங்கரூபமான யூபத்தைச் சேதனம் செய்வதைச் சொல்லுவார்.

1 யூபத்திற்கான வ்ருக்ஷத்தை வேண்டிக் கொள்வதற்கும் அதைத் தொடுவதற்கும் மந்த்ரம், கல்பம்:— கீழ்வாசல் வழியாகச் சென்று சமபூமியில்தன் வித்திலிருந்துமுளைத்ததும் இலைகளையும் சாகைகளையும்விசேஷமாய்ப் பெற்றதும், நுனி காயாமல் மேற்குப் பக்கமாய்ச் சாய்ந்து நிற்பதும், யூபத்திற்குத் தகுதியானதுமான வ்ருக்ஷத்திற்குநேரே நின்று அபிமந்த்ரணம் செய்யவேண்டும்.

2 யூபவ்ருக்ஷ மூலத்தை நெய்யால் தடவமந்த்ரம்.— யூபவ்ருக்ஷத்தை இரண்டு தர்ப்பங்களை இடையே வைத்து மறைக்க மந்த்ரம்:— யூபவ்ருக்ஷத்தைச் சேதிக்க மந்த்ரம்.

3 கீழ்ப்புறமாவது வடபுறமாவதுவிழும் விருக்ஷத்தை அநுமந்த்ரணம் செய்யமந்த்ரம்.

## யூபச் சேதநாபிதாநம். 

4 யூபவ்ருட்சத்தின் மிஞ்சின மூலத்தில் ஹிரண்யத்தை மூந்தி வைத்து, அதன் பேரில் பரப்பி ஹோமம் செய்யமந்த்ரம்.

5 தன்னைத் தொட்டுக்கொள்ள மந்த்ரம்

6 யூபவ்ருக்ஷத்தின் அங்கத்தைச் சேதிக்க மந்த்ரம்.

7 யூபவ்ருக்ஷத்தின் நுனியைச் சீவுவதற்கு மந்த்ரம்.

---

### Vi—3—3 (cf 1—3—5) யூபகண்டன அபிதாநம்.

விஷ்ணு தேவதையைச் சொல்லும்ருக்கால் ஹோமம் செய்துவிட்டு யூபத்தை நெருங்குகிறான். தேவதையாக விஷ்ணுவைக் கொண்டதுவே யூபம். தன்தேவதையோடேயே யூபத்தை நெருங்குகிறான் "வேறு வ்ருக்ஷங்களை விட்டுவந்திருக்கிறேன் மற்றுவேறு மரங்களுக்குஸமீபத்தில் போகவும் இல்லை" என்றார். ஏனெனில் வேறு விருக்ஷங்களையும் விட்டு இருக்கிறார், வேறுமரங்களுக்கு ஸமீபத்திலும் போக இல்லை. "உத்க்ருஷ்ட லட்சணங்களுள்ளவனும் நிக்ருஷ்ட லக்ஷணங்களில்லாதவனுமான உன்னையே இதோ அடைந்திருக்கிறேன்' என்றார். ஏனெனில உத்கிருஷ்ட லக்ஷணங்களுள்ளதும் நிக்ருஷ்ட லட்சணங்களில் லாததுமானதையே அடைகிறான். அப்பேர்க்கொத்த விஷ்ணுவைத்தேவதையாகக் கொண்ட உன்னைத் தேவயாகத்திற்காகக் கொண்டாடுகிறேன் என்றார். ஏனெனில் தேவயாகத்திற்காகவே இதைக் கொண்டாடுகிறார்.

"ஸவித்ரு தேவன் உன்னை மதுவால் அபிஷேகம் செய்யட்டும்" என்றார். தேஜஸ்ஸாலேயே இதை ரட்சி, கோடாலி, (ஸ்வதிதி)யே, இதை ஹிம்ஸிக்காதே, கோடாலியே வஜ்ரம், இது சாந்திக்காக. கோடாலியைக் கண்டு பயந்த விருக்ஷத்தினுடைய முதல் மரச்சக்கையோடு தேஜஸ்ஸும் விழுந்து விடுகிறது. விழும் முதல் சக்கையை எடுத்துக் கொள்ளவேண்டும். இதைத் தேஜஸோடேயே எடுத்தது போலாம். இந்த லோகங்கள் யூபவிருக்ஷம் விழும்போது அதைக் கண்டு பயப்படும். "வானத்தை நுனியால் கீருதே." 'மத்யத்தால் அந்தரிட்சத்தை ஹிம்ஸிக்காதே' என்றார். இதனால் இந்த லோகங்கள் விஷயமாகச் சமனம் செய்கிறதாகும். 'வநத்திற்கு பதியான (விருக்ஷமே) நூறு கிளைகளாக வளர்வாயாக' என்று அறுத்த மரத்தில் ஹோமம் செய்கிறார். ஆதலால் அறுத்த மரங்களிலிருந்து நூறு குருத்துக்கள் கிளம்புகின்றன.

"நாங்களும் ஆயிரம் கிளைகளாக வளர்வோமாக' என்று ஆசீர்வாதத்தைச் சொன்னார். வண்டியின் அச்சுப்படாதபடி (மூலத்தை விட்டு)

வெட்டவேண்டும் அச்சுப்படும்படி வெட்டினால் வண்டியினடியிலுள்ள நீண்ட மாத்திரமடியே யஜமானனாகோ, மன்றுகள் இவைகளை மரணமடைவிக்கும். எவனுக்காவது ப்ரதிஷ்டை இல்லாமல் போகட்டும் என்று விரும்பினால் அவனுக்குக்கிளையை வெட்டவேண்டும் இதுவே விருக்ஷங்களுக்குப் ப்ரதிஷ்டையைக் கொடாதது. இதனால் ப்ரதிஷ்டையில்லாதவனாக ஆகிறான். எவனிடமாவது பசுவில்லாமல் போகட்டுமென்று விரும்பினால் இலைகளில்லாமல் உலர்ந்த நுனியுடன் வெட்டவேண்டும். இதுவே விருக்ஷங்களுக்குள் பசுவில்லாதது. அதனால் பசுவில்லாமல் போகிறான். எவனிடமாவது பசுஸம்ருத்தி இருக்கட்டுமென்று விரும்பினால் வெகு இலைகளுள்ளதும் அநேக சாகைகளுள்ளதுமானதை வெட்டவேண்டும் இதுவே வ்ருக்ஷங்களுள் பசுவுள்ளது பசுவுள்ளவனாகவே ஆகிறான். ப்ரதிஷ்டையடைந்ததை ப்ரதிஷ்டையை வேண்டுபவனுக்கு வெட்டவேண்டும் சமபூமியில் தன் வித்திலிருந்தே எது வளருமோ, அதுவே வ்ருக்ஷங்களுள் ப்ரதிஷ்டையுள்ளது ப்ரதிஷ்டையையே அடைகிறான். எது மேற்கு திக்கில் வளைந்ததோ அதை வெட்டவேண்டும் அதுவே யக்ஞத்திற்காகச்சாய்ந்ததாம். 5 முழம் (அரத்நி—24 அங்குலம்) உள்ளதை உத்தரயக்ஞம் தனக்கு வரட்டும் என்று வேண்டுபவனுக்கு வெட்டவேண்டும். பங்க்திக்கு ஐந்தக்ஷரங்களாம். யக்ஞம் பாங்க்தமானதாம். இவனை உத்தர (சிலாக்கியமான) யக்ஞம் அடையும். ப்ரதிஷ்டை வேண்டுபவனுக்கு ஆறுமுழம். ருதுக்கள் ஆறாம். ருதுக்களில் ப்ரதிஷ்டையை அடைவான். பசு வேண்டுபவனுக்கு ஏழு முழம். சக்வரிக்கு ஏழுபாதம், சக்வரீயே பசுக்கள். பசுக்களையே அடைகிறான். தேஜஸ்ஸை வேண்டுபவனுக்கு ஒன்பதுமுழம்:— இதே த்ருவ்ருத் ஸ்தோமத்தின் அளவு. த்ருவ்ருத்தே தேஜஸாம். தேஜஸ்ஸுள்ளவனாக ஆகிறான். இந்த்ரியம் (சக்தி) வேண்டுபவனுக்குப் பதினொரு முழம். த்ருஷ்டுப்புக்கு பதினொரு அக்ஷரம். த்ருஷ்டுப்பே இந்த்ரியம். இந்த்ரியமுள்ளவனாகவே ஆகிறான். சத்ருக்களுள்ளவனுக்குப் பதினைந்து முழம்:— வஜ்ரம், பதினைந்து, இது சத்ருக்களை அடக்குவதற்காம். ப்ரஜை வேண்டுபவனுக்குப் பதினேழு முழம். ப்ரஜாபதி பதினேழாம், ப்ரஜாபதியை அடைவதற்கு இது ஆகுமாம். ப்ரதிஷ்டையை வேண்டியவனுக்கு இருபத்தொன்றாகும். இருபத்தொன்றே ஸ்தோமங்களின் ப்ரதிஷ்டை. இது ப்ரதிஷ்டைக்காக.

இதற்கு எட்டுமுகங்கள் (corners.) காயத்ரிக்கு எட்டு அக்ஷரங்கள். காயத்ரியே தேஜஸ். காயத்ரீயே யக்ஞத்தின் முகம் (ஆரம்பம்). யக்ஞமுகமான காயத்ரியோடு தேஜஸ் ஸமானமானது.

## அநுவாகம் 6.

(ச) சிந்நஸ்யயூபஸ்யஸ்தாபநம் (வெட்டினயூபத்தை யூன்றுதல்) யூபத்தின் அடியைப் பார்த்து), உன்னைப் பூமிக்கும். (நடுவைப் பார்த்து) உன்னை அந்தரிக்ஷத்திற்கும் (நுனியைப்பார்த்து) உன்னை வானத்திற்கும்.

2— பித்ருக்கள் தங்கும் லோகம் சுத்தமாக இருக்கட்டும் — நீ யவம். எங்களைவிட்டு த்வேஷிகளையும் சத்ருக்களையும், விரட்டு — பித்ருக்கள் தங்கும் ஸ்தாந மாகிருய்.

3— (சக்கையைப் பார்த்து,) யூபத்தை நாட்டும்விஷயத்தில் நல்லவனுவாய், மூன்று சக்கைகளில் நீ முதல்வன். மரத்தாலான இந்த யூபம், உன் மேல்நிற்கிறது. அந்தயூபத்திற்கு) அநுமதி கொடு.

4— ஸவித்ரு தேவன் உன்னை மதுவால் அபிஷேகம் செய்யட்டும்.

5— நல்லபலன்களோடு கூடின ஓஷதிகளுக்காக (சஷாலமே) உன்னை யூபத்தின் நுனியில் கட்டுகிறேன். (ப்ரதிமுஞ்சாமி.)

6— வானத்தைத் தாங்கு. அந்தரிக்ஷத்தைப் பூரணம் செய். பூமியை அடையினுல் த்ருடப்படுத்து.

7— (யூபத்தின் அபிமான தேவதையாகிய விஷ்ணுவைப்பார்த்து.) உமது ஸ்தாநங்களை அடைய ஆசையுள்ளவர்களாயிருக்கிறோம். இந்த ஸ்தாநங்களை அடைந்தவர்கள் அநேககிரணங்களோடு ஒளியுடனேவிளங்கி, (ஒருக்காலும் அவைகளை விட்டுப் போகார்கள். இங்கேதான் மகான்கள் ஸ்துதிகானங்கள் செய்யும் மாகவிஷ்ணுவின், பரமபதம்விளங்கும். [இதை, ருக்வேதம். மண் 1, சூக் 154 செய்6 — காண்க, கொஞ்சம் வித்யாஸ முண்டு.]

8 — விஷ்ணுவின் கர்மங்களைப் பாருங்கள், இவைகளால் வைதிக —லௌகிக, வ்ரதங்களை நிர்மாணம், செய்திருக்கிரூர் இவரே, இந்த்ரனேடு சேர்ந்த தோழன் (ருக்வேதம் மண், சூக் 22 செய்.19 பார்க்க).

9— ஸூரிகள் (ஞானிகள்) விஷ்ணுவின் உத்தமமான ஸ்வரூபத்தை (நிர்மலமான) ஆகாயத்திற் பரந்து விளங்கும்

கண்ணைப்போல், ஸதாகாலமும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

10-பராம்மண ஜாதியைக் கொடுப்பதுவும், க்ஷத்ரிய ஜாதியைக் கொடுப்பதும், நல்ல ப்ரஜைஜயைக் கொடுப்பதும், ஐச்வர்ய ஸம்ருத்தியைக் கொடுப்பதுமான உன்னைச் சுற்றி மண்ணைத் தள்ளுகிறேன். ப்ரஹ்மத்தைத் திடமாக்கு. க்ஷத்ரத்தை திடமாக்கு. ப்ரஜையைத் திடமாக்கு. ஐச்வர்ய ஸம்ருத்தியைத் திடமாக்கு.

11—(யூபமே) நீ சுற்றிலும், தர்ப்பையால் செய்த கயிற்றால் சூழப்பட்டிருக்கிறாய். தேவர்களின் ப்ரஜைகளான (மருத் கணங்கள்) உன்னைச்சுற்றி சூழ்ந்திருக்கட்டும். அதுபோலவே இந்த (யஜமானனையும்) (தனம், புத்திர மித்ராதி) ஸம்பத்துகளும், மனிதர்களும் சுற்றி நிற்கட்டும்.

12—அந்தரிட்சத்தின் மத்யபாகத்தில் உன்னை (ஸ்வருவை)ச் சொருகி வைக்கிறேன்.

குறிப்பு:— முன்னனுவாகத்தால் சேதிக்கப்பட்ட யூபத்தை ப்ரக்ஷாலனம் செய்து சஷாலத்தைச்சேர்த்து குழிக்குக் கிழக்குப்புறம் கிடத்தவேண்டும். ஆஹவநீயத்திற்கு வடபுறம் நின்று கீழே இருந்து மேலாகப்ரோக்ஷிக்கிறது

'சஷாலம்' என்பது யூபத்தின் நுனியில் சேர்ந்திருக்கும் 8 நுனியுடன் கூடின மரத்துண்டு.

2-வது. குழியில் ஜலத்தை ஊற்ற மந்த்ரம். யவதான்யத்தைத் தெளிக்க அதன்மேல் பர்ஹிஸைப் பரப்ப மந்த்ரம், ஒரு முஷ்டியைப் பாதி கீழ் நுனியோடும் பாதி வடக்கு நுனியாகவும் பிரத்துப் பரப்ப மந்த்ரம்.

3-ல் யூபத்தின் தண்டை குழியில் போடுவதற்கு மந்த்ரம்.

4-ல் யூபத்தின் நுனியை நெய்யால் பூச மந்த்ரம்.

5 ல் யூபத்தின் அக்ரத்தில் சஷாலத்தைக்கட்ட மந்த்ரம்.

6-ல் யூபத்தை நேரே நிறுத்த மந்த்ரம்.

7-ல் குழியில் யூபத்தை ஸ்தாபனம் செய்ய மந்த்ரம்

8-ல் 9-ல் ஆஹவநீயத்திற்கு நேரே அக்நிக்கு சமீபத்திலிருக்கும் சஷாலமுழைவலயை நிறுத்தல்.

10-ல் ப்ரதக்ஷணமாக மண்ணைத்தள்ளி, மைத்ராவருண தண்டத்தால் கெட்டிக்க மந்த்ரம்.

11-ல் ப்ரதக்ஷிணமாக மூன்றுதரம்கயிற்றால் யூபத்தை சுற்றமந்த்ரம்.
12-ல் யூபத்தின் நடுக்கயிற்றில் ஸ்வருவை (யூபசகலத்தை)ச் சொருக மந்த்ரம்.

"உன்னைப் பூமிக்கும், உன்னை அந்தரிக்ஷத்திற்கும் உன்னை வானத்திற்கும்" என்றார், லோகங்களுக்காகவே இதை ப்ரோக்ஷிக்கிறார். அடியிலிருந்து உயரப்ரோக்ஷிக்கிறார். ஏனெனில் ஸ்வர்க்கலோகம் உயர இருப்பதுபோலவாம். (குழியைத்) தோண்டும் காரியம் க்ரூரமானதைச் செய்தது போலாம். சாந்திக்காக ஜலத்தைக் குழியில் கொட்டுகிறார். யவத் (barley) தோடு கொட்டுகிறார். யவம் சக்தியாம். யூபம். யஜமானனுக்குச் சரியான அளவுடையதாம். எவ்வளவு யஜமானனோ இதில் அவ்வளவு சக்தியை வைக்கிறான். பித்ருக்கள் தங்கும் ஸ்தானமாகிறாய் என்று பர்ஹிஸைப்பரப்புகிறான். வெட்டப்பட்ட குழிக்குத் தெய்வம்பித்ருக்களாம். பர்ஹிஸ்ஸைப் பரப்பாமல் (யூபத்தை)ஊன்றினால்பித்ருக்கள் அதற்குத்தேவதையாவார்கள்பர்ஹிஸ்ஸைக் கீழே பரப்பி இந்தப் பூமியிலே ஊன்றினதாம். யூபத்தின் வெட்டுச்சக்கையைக்கீழேபோடுகிறான் தேஜஸோடு கூடினதாக இதைச் செய்கிறான் 'ஸவித்ருதேவன்உன்னை மதுவால் அபிஷேகம் செய்யட்டும் என்றார் இதை. தேஜஸாலேயேஅபிஷேகம் செய்வதாம். நல்லபலங்களோடுகூடின ஒஷதிகளுக்காகஎன்றுசஷாலத்தைக் கட்டுகிறான். ஆதலால் ஒஷதிகள் மேலேயபலங்களைத்தாங்குகின்றன அதை நெய்யால்பூசுகிறான். ஆஜ்யமே தேஜஸ். அக்நிக்கு ஸமீபத்திலுள்ள நுனி அளவுள்ளவன் யஜமானன். அக்நிக்கு ஸமீபத்திலுள்ள நுனியை நெய்யால் பூசுவதால் யஜமானனைத் தேஜஸால்பூசினதுபோலாம் அடிவரையில் பூசுகிறதால் யஜமானனை முழுவதுமே தேஜஸால்பூசினதாம். எல்லாப்பக்கத்திலும் தடவுகிறான் இவனிடத்தில் கொஞ்சமும் விடாமல் தேஜஸ்ஸை வைக்கிறான. வானத்தைத்தாங்கு, அந்தரிக்ஷத்தைப்பூரணம்செய் என்றார் இந்தலோகங்கள் தனித்துப் பிரிந்திருப்பதற்காக.

விஷ்ணு ருக்கால் கல்பிக்கிறான். யூபம் தேவதை விஷயமாக விஷ்ணுவைச் சேர்ந்தது தன்தேவதையோடு இதைக்கல்பிக்கிறான். இரண்டுருக்குகளால்கல்பிக்கிறான். யஜமானன் இரண்டு பாதங்களுள்ளவன் இது ப்ரதிஷ்டைக்காக.

எவனைக்குறித்து தேஜஸ்ஸாலும், தேவதைகளாலும், இந்த்ரியத்தாலும் (சக்தியாலும்) பிரிபட்டவனைச் செய்யவேண்டுமென்று விரும்புகிறானோ அவனுக்கு அக்நிப்பக்கத்து நுனியை ஆஹவநீயத்திலிருந்து எப்படியாவது திருப்பி விடவேண்டும். (அப்போது) தேஜஸ்ஸாலும்தேவதைகளாலும் இந்த்ரியத்தாலும் பிரித்து விடுகிறான் எவனைக் குறித்துத் தேஜஸாலும் தேவதைகளாலும் இந்திரியத்தாலும் சேர்க்கவேண்டுமென்று விரும்புகிறானோ அக்நிப்பக்கத்து நுனியை ஆஹவநீயத்திற்கே நேராக ஊன்றவேண்டும் அப்போது தேஜஸாலும் தேவதைகளாலும் இந்திரியத்தாலும் சேர்த்து விடுகிறான்.

'ப்ராம்மண ஜாதியைக் கொடுப்பதும் க்ஷத்திரிய ஜாதியைக் கொடுப்பதுமான உன்னை,' என்றார் இந்த யஜுஸ்ஸபடிதான்.

கயிற்றால் சுற்றுகிறான். கயிறே பலம். யூபம் யஜமானன் ஆவாம். யஜமானனை பலத்தோடு சேர்ப்பிக்கிறான். மத்யக்கயிற்றைத் தன் நாபிக்கு நேரே சுற்றுகிறான். நாபிக்கு நேராகவே இவனிடத்தில் பலத்தை வைக்கிறான். ஆதலால் நாபிக்கு நேராகவே பலத்தை புஜிக்கிறார்கள். எவனைக்குறித்து, பலத்தை விட்டு இவனை விலக்கவேண்டும் என்று விரும்புகிறானோ மேலேயாவது கீழேயாவது தள்ளவேண்டும். பலத்தை விட்டு இவனை நீக்கி விடுகிறான். எவனைக்குறித்து மேகம் வர்ஷிக்கட்டுமென்று விரும்புகிறானோ அவனுக்குக் கீழே (கயிற்றை)த் தள்ளவேண்டும்.

மழையையே கொடுக்கிறான். மழை பெய்யாமலிருக்கட்டும் என்று விரும்பினால் உயரத் தள்ளவேண்டும். மழையும் இறங்காது.

பித்ருக்களுக்குத் தோண்டிய இடமும், அதற்கு மேல் கயிறுவரையில் மனுஷ்யர்களுக்கும், ஓஷதிகளுக்குக்கயிறும்விச்வேதேவர்களுக்கு கயிற்றுக்குமேல் சஷாலம் வரையிலும், இந்த்ரனுக்குசஷாலமும், ஸாத்யர்களுக்குமற்றதுமாக இப்படி இது(யூபம்)ஸர்வதேவதைகளையும் கொண்டது. யூபத்தை ஊன்றுவதால் ஸர்வதேவதைகளையுமே ப்ரீதிசெய்கிறான்.

யக்ஞத்தால் தேவர்கள் ஸ்வர்க்க லோகத்தை அடைந்தார்கள் அவர்கள் யோசித்தாவது மனுஷ்யர்கள் நம்மைப்பின்பற்றுவார்கள் என்று யூபத்தால் மோஹப்படும்படி (யூபயித்வா) செய்து தாங்களே ஸ்வர்க்கம்சென்றார்கள் அதை ரிஷிகள் யூபத்தையே கொண்டு தெரிந்துகொண்டார்கள் ஆதலாலே யூபத்தை [மோஹம் யூப-விமோஹநே என்றதாது அர்த்தத்தை ஒட்டி] யூபம்என்கிறோம். ஆகையால் யூபத்தை நாட்டுவதால் ஸ்வர்க்கம் அறியப்படுகிறது.

ஆஹவநீயாக்கிக்குப் பூர்வதிக்கில் ஊன்றுகிறான். பூர்வகாலத்தில்தான் யக்ஞத்தைப்பற்றினதெல்லாம் அறியப்படுகிறது. கார்யம் நஷ்டமான பிறகு இது செய்திருக்க வேண்டியதென்று எதைச் சொல்லுகிறோமோ அதுவே அறியப்பட வேண்டியது.

ஸாத்யாளென்ற (தேவதைகள்) க்லுப்தமான யக்ஞபாகத்தை அல்பமானதென்று நினைத்தார்கள். யக்ஞம் அவர்களைத் தொடவில்லை. யக்ஞத்தில் மிகுந்ததே அவர்களைத் தொட்டது.

அக்நியில் அக்நியைக் கடைந்து போடுவதே யக்ஞத்தின் மிகுதி: யூபத்தினது மிகுதி சஷாலத்திற்கு மேலுள்ளது. இதுவே அவர்களுக்கு பாகமாம். அவைகளாலேயே அவர்கள் ப்ரீதி அடைகிறார்கள்.

முன்பு தேவர்கள் ஸோம யக்ஞம்ஸமாப்தி ஆனபோது ஸ்ருக்குக்களையும், யூபத்தையும் அக்நியில் போட்டுவிட எண்ணி, யக்ஞவிநாசமுண்டாகுமே என்று நினைத்தார்கள். ப்ரஸ்தரத்தால் ஸ்ருக்கையும் ஸ்வருவால் யூபத்தையும் மீட்டு வாங்க எண்ணி ஸோமயாகம் முடிந்தவுடன் ப்ரஸ்தரத்தை அக்நியில் போடுகிறான் ஸ்வருவையும் ஹோமம் செய்து விடுகிறான் இதுயக்ஞம் கெடாமலிருப்பதற்காக

## அநுவாகம் 7.

யூபே பசுநியோஜநார்த்தம் உபாகரணுபிதாநம். (யூபத்தில் பசுவைக்கட்ட வேண்டியதற்காக பசுவை ஓட்டிக்கொண்டு வருவதைச் சொல்லும்.)

1 (பர்ஹிஸ்ஸைப் பார்த்து) (பசுவென்ற தேவாந்நத்திற்காக) உன்னை எடுக்கிறேன். (புரசுக் கொம்பைப் பார்த்து) நீ சமீபத்திற்குக் கொண்டு போகிறவன் இந்தப்பசுவின் ஹ்ருதயாதி அங்கங்கள் அக்நி, ஸோமன், முதலிய தேவர்களையும் தேவர்களைச் சேர்ந்த ப்ரஜைகளையும் சமீபத்தனையாகநிர்வாகர்களையும், சேஷத்தை உண்ண விரும்பியவர்களான ருத்விக்குக்களையும் (அடைந்தன.) ப்ருஹஸ்பதியே, ஹ்ருதயம் முதலான த்ரவ்யங்களைப்போஷியும். (பசுவைப் பார்த்து) உனது ஹவ்யங்கள் இனியவையாக இருக்கட்டும். (த்வஷ்டா என்ற) தேவனே, பசுவின் த்ரவ்யத்தை ரமணீயமாக ஆக்கும். க்ஷீராதிதனத்தைப் பெற்றிருக்கும் பசுக்களே [யஜமானன் க்ருகத்தில்] விளையாடுங்கள்.

2 [மாச்சிரயைப் பார்த்து அக்நியின் ஜநகம் (சிச்நம்) ஆகிறாய். (தர்ப்பங்களைப்பார்த்து) நீங்கள் வ்ருஷணங்கள் (கீழ் அரணியைப் பார்த்து) நீ புரூரவஸ், (அரணிகளைப் பார்த்து) நெய்யால்பூசப்பட்டுஸேசனத்தைப் புஷ்டி செய்யுங்கள், (மதாபிதாவாக இருந்துயக்ஞத்தின்) ஆயுஸ்ஸாகிறாய். [புத்திரனை அக்நியை உத்பாதநம் செய்து, யக்ஞத்தைப் போஷிக்கிறது என்று கருத்து.]

3 (அக்நியைப் பார்த்து,) ஹோதாவால் படிக்கப்பட்ட காயத்ரீச் சந்தஸ்ஸைப் பார்த்துக் கொண்டு நீ ஆவிர்பவி. த்ருஷ்டுப் ஜகதி சந்தஸ்ஸுகளைப்பார்த்துக்கொண்டு பின் ஆவிர்ப்பாயாக.

4 (முன்பு ஆஹவநீயத்தில் இருந்த அக்நியும், இப்போது மந்தானம் செய்து அதில் போடப்பட்ட அக்நியும்) இருவர்களும் எங்கள் விஷயத்தில் ஒத்தமனதுடன் ஒரு ஸ்தானத்திலிருந்து, கெடுதல் செய்ய எண்ணங் கொள்ளாமல் இருங்கள். யக்ஞத்தையும் யஜமானனையும் ஹிம்ஸிக்காமேதயுங்கள், பிறந்தனவற்றை எல்லாம் தெரிந்து கொண்டவர்களாக இந்த யக்ஞகர்மாவில் எங்களுக்கு மங்களகரர்களாக இருங்கள். (இந்தக் கடைந்தெடுத்த) அக்நி ஆஹவநீயாக்நியில் சென்று உலாவுகிறது. மந்த்ரங்களால் (ருத்விக்குகளால்) உண்டான புத்ரன் நீ, அதிக அதிகமாய் விளங்குபவன். ஸ்வாஹா சப்தத்தைச் செய்து மந்த்ரத்தோடு ஹோமம் செய்கிறேன். தேவர்களுடைய பாகத்தை மித்யையாகச் செய்யாதேயும்.

குறிப்பு:—

பசுவை ஸ்நாநம் செய்வித்து சாத்வாலம், உத்கரமென்ற குழிகளுக்கு நடுவே ஓட்டி யூபத்திற்கு முன்னே மேற்கு முகமாக நிறுத்தி இரண்டு பர்ஹிஸ்களையும், புரச சாகையையும் எடுக்கவும். பசுவை ஓட்டவும் மந்தரங்கள் இனி அக்நி மந்தானத்திற்கான மந்த்ரங்கள் ஆஹவநீயத்திற்கு கீழ்பக்கம், அக்நிமந்தன சகலத்தை வைக்க, அதன் மேல் கீழ் நுனியோடு தர்ப்பங்களை வைக்க, கீழேயுள்ள அரணிக்கட்டையை எடுக்க பிறகு மேலேயுள்ள அரணி கட்டையை எடுக்க இரண்டையும் அபிமந்த்ரணம் செய்ய, உத்தராரணியை அக்நியோநியில் வைக்க.

3-ல் மந்தனத்தில் மூன்று மந்த்ரங்கள்.

4-ல் வடக்கு பரிதியை அக்ரம் முதல் ஆகவநீயத்தில் எரியவும் ஸ்ருவத்தால் ஹோமம் செய்யவும்.

மனுஷ்ய ஸ்ருஷ்டிக்கு முன்பு ஸாத்யர்களே இவ்வுலகில் இருந்தார்கள். வேறுப்ராணிகள் இல்லை. ஆதலால் அக்நியை அக்நிதேவதைக்குப் பிடித்துக்கொண்டார்கள். வேறொன்றும் பிடித்துக் கொள்வதற்கு இல்லை அதனால் இந்தப்ரஜைகளைப் பெருக்கினார்கள் அதில் (ஏற்கனவே இருக்கும் அக்நியில்) அக்நியைப்போடுவது ப்ரஜோத்பத்திக்குக்காரணமாகிறது.

அக்நியே ருத்ரனும் யஜமானனே பசுவாம், பசுவைப்பிடித்த பிறகு அக்நியைக் கடைந்தால் ருத்ரனுக்கு யஜமானனையும்பிடித்துக் கொடுத்ததாகும். ஆயுள் குறையும், அல்லது வேறு விதமாகவும்சொல்வார்கள். அக்நியே ஸர்வதேவதைகளும், பசுவே ஹவிஸ், பசுவைப்பிடித்துப்பின் அக்நியைக்கடைவத ஸம்பித்த ஹவ்யத்திற்காக எல்லாத்தேவதைகளையும் வருவிக்கிறதாம்.

பசுவைக் கொண்டுவந்தபிறகுதான் (அக்நியை)க் கடையவேண்டும் அதனால் ஆரம்பித்ததாகவும் ஆகாது முடிவானதாகவும் ஆகாது. அக்நியின் ஜநகம் ஆகிறாய். இதுவே அக்நியின் ஜநகமாம். நீங்கள் விருஷணங்கள் என்றார் இவ்விரண்டுமே வ்ருஷணங்களும். ஊர்வசியாவாய், ஆயுவாவாய் என்றார் இதுசேர்க்கைக்காக. நெய்யால் செய்யப்பட்டு ஸேசனத்தைப் புஷ்டி செய்யுங்கள் என்றார் எந்த அரணிக்கட்டைகள் அக்நியைத் தரிக்கின்றனவோ அவைகளே ஸேசனத்தைத் தரிக்கின்றவையாம். காயத்ரீச்சந்தஸ்ஸுக்குப் பிறகு ஆவிர்ப்பவி என்றார் சந்தஸ்ஸுகளுடைய உத்பாதநம் செய்கிறான். கடையப்படும் அக்நியைக் குறித்துச் சொல் என்றார் ஸவித்ருதேவதா ருக்கைப் படிக்கிறார். ஸவித்ருதேவனால் தூண்டப்பட்டே அதைக்கடைகிறான். ஆவிர்ப்பவித்தவனுக்குச் சொல், அக்நியில் போடப்பட்டவனுக்குச் சொல், அந்த அந்த இடத்தில் இதை (அக்நி) ஸம்ருத்தனாகச் செய்கிறான் எல்லாம் காயத்ரீச்சந்தஸ்ஸால்கூடச்சொன்னார் அக்நியின் சந்தஸ்ஸே காயத்ரீதான் சந்தஸோடு இதைக் கூட்டி வைக்கிறான்.

அக்நி முன்னால் நிற்கிறது. அக்நியைக்கடைந்து போடுகிறான். இரண்டு (அக்நிகளும்) கூடி, எஜமானனைக்குறித்து (ஆகாரம்செய்யக்) கூடியது. எங்களிடத்தில் ஒத்துமையானமனதை உடையவர்களாக இருங்கள் என்றார். இது சாந்திக்காக.

போட்டபின்பு ஹோமம் செய்கிறார். பிறந்தவுடனே இவனுக்கு அன்னமும் வைக்கிறான். ஆஜ்யத்தால் ஹோமம் செய்கிறான். இதுவே அக்நிக்கு ப்ரியமான இடமாம். பிரியமான இடத்தோடும் பிறகுதேஜஸோடும் கூட்டிவைக்கிறான்.

"பசுநியோஜனம்" "தேவார்நத்திற்கு உன்னை" என்று பர்ஹிஸ்ஸை எடுக்கிறார். யாகம் செய்கிறவன் (பசுரூபமான ஹவிஸ்ஸை) இச்சிப்பதாலேதான் ['இஷ' யென்றது ] "உபவீ:" என்றார். தேவர்களைச் சமீபத்திலேயே கொண்டுபோவானென்று தான்; ஹ்ருதயாதி அங்கங்கள் தேவர்களையும் தேவப்பிரஜைகளையும் அடைந்தன என்றார் தேவர்களைச் சேர்ந்தமையால் பிரஜைகள் தேவர்களை சமீபித்தார்கள்; 'வந்நி:, உசிஜ:' என்றார் ருத்விக்குகளே, கார்யநிர்வாஹிகளும், சேஷத்தை உண்பவர்களுமாம்:— "ப்ருஹஸ்பதியே த்ரவ்யங்களைப் போஷியும்" என்றார். வேர்களுடைய ப்ராஹ்மசக்தியே ப்ருஹஸ்பதியாம். சக்தியாலேயே பசுக்களை அடைகிறான். 'உனது ஹவ்யங்கள் இனியவையாக இருக்கட்டும்' என்றார் இதனால் இனியவையாக இவைகளைச்செய்கிறான். 'த்வஷ்டாதேவனே பசுவின் த்ரவ்யத்தை ரமணீயமாக ஆக்கும்' என்றார். சேர்ந்த பசுக்களின் ரூபத்தைச் செய்பவரான த்வஷ்டாவே பசுக்களில் ரூபத்தை தரிக்கிறார். 'தனத்தைப்பெற்றிருக்கும் (பசுக்களே) விளையாடுங்கள்' என்றார்; பசுக்களே தனத்தைப்பெற்றிருப்பன. இவனிடத்தில் பசுக்களையே ரமிக்கும்படி செய்கிறான்.

## அநுவாகம் 8.

உபாக்ருத்-அக்நீஷோமீய-பசு-விசஸன-அபிதானம்.

1 (கயிற்றைப்பார்த்து) உன்னை எடுக்கிறேன். [பசுவைப்பார்த்து) தேவர்களுக்கான அவிஸ்ஸே, யக்ஞத்திற்காக உன்னைப் பாசத்தால் கட்டுகிறேன். விநியோகப்படுத்தப்படுகிற பசுவே, தேவரூபத்தை அடைந்து மனுஷ்யர்களின் (அடி-முதலிய உபத்ரவங்களை) தாங்கிக்கொள்.

2 ஜலத்தாலும், ஓஷதிகளாலும், உன்னை ப்ரோக்ஷணம் செய்கிறேன். ஜலத்தைக்குடிப்பவன் ஆகிறாய். திவ்ய ஜலமே, இனிமையாயினும் தேவர்களுக்குத் தகுதியான இந்த ஹவ்யத்தை இனிமையாக்குக.

3 (பசுவைப்பார்த்து) உனது ப்ராணன் வாயுவோடு சேரட்டும். உனது ஹ்ருதயாதி அங்கங்கள் யாகவிசேஷங்களில் சேரட்டும். யஜமானன் ஆசீர்வாதம் பெற்றவனாகட்டும்.

4 (ஸ்வரு, ஸ்வதிதி, இவைகளைப்பார்த்து) க்ருதத்தால் நனைந்தவர்களே, பசுவைக காத்துக்கொள்ளுங்கள்.

5 தனத்துடன்கூடிய பசுவின் அங்கங்களே, யஜமானனுக்கு ப்ரியத்தைச்சேர்ப்பியுங்கள். (அவிஸ்ஸாக) யாகத்தை அடையுங்கள்.

6 விஸ்தாரமான அந்தரிக்ஷமே (பசுவின் காதுமுதலிய ஓட்டைகளிலுள்ள இந்த்ரிய ஸமூகத்தைக்குறிக்கும் பதம்) அபிமான தேவதையான ப்ராணவாயுவாலும் ஜீவாத்மாவாலும் அவிஸ்ஸோடு அவிர்தானம் செய். இந்தப் பசுவின் (உண்டாகப்போகிற தேவ-) சரீரத்தோடும் சேர்வாய். அதிவிஸ்தாரமான (இந்திரியஸமுதாயமே,) அதிவிஸ்தாரமான யாகத்தில் யஜமானனை ஸ்தாபியுங்கள்.

7 (பர்ஹிஸைப் பார்த்து) பூமியின் ஸம்பர்க்கத்திலிருந்து காப்பாயாக.

8 நாலுபுறமும் வ்யாபித்திருக்கும் ஸூர்ய கிரணங்களுக்கு நமஸ்காரம்.

9 (பத்நியைப்பார்த்து,) சத்ருவில்லாமல், ப்ரஜையோடும், தனபுஷ்டியோடும் இந்த க்ருதப்ரவாஹத்தின் பின்னே போகுக. திவ்யஜலங்களே சுத்தர்களாயும் எங்களைச்சுத்தர்களாகவிரும்புபவர்களான நீங்கள் தேவர்களையாகத்திற்குக் கொண்டுசேர்ப்பியுங்கள். நாங்கள் உம்மால் சூழப்பட்டிருக்கிறோம், சுத்தர்களாய் உங்களைச் சூழ்ந்து ஸேவிப்போமாக.

குறிப்பு:—

ஓட்டிவந்த பசுவை விசஸனம் செய்ய (கொல்ல) மந்த்ரம்.

1 ஆல், ரஜ்ஜுவை (கயிறு) எடுக்கவும், பசுவைக்கட்டவும் பசுவை யூபத்தில் கட்டவும் மந்த்ரம்.

2-ல் பசுவை ப்ரோக்ஷிப்பதற்கும், பசுவுக்கு ஜலத்தைக்காட்டவும் நாலாபக்கமும் ப்ரோக்ஷிக்கவு மந்த்ரம்.

3 ல் பசுவின் சிரஸ்ஸிலும், தோள் ப்ரதேசத்திலும், பின் பாகத்திலும் அப்யங்கம் செய்ய மந்த்ரம்.

4-ல் ஜுஹூவால் ஸ்வரு, ஸ்வதிதி (கோடாலி) களை நெய்யால் பூச, ஸ்வருவுக்கு இரண்டு தடவையும் ஸ்வதிதிக்கு ஒருதடவையும் நடுவில் ஸ்வருவை வைத்து ஸ்வதிதியால் ஒரேதாரையாக நெய்யை விட்டுப் பசுவின் தலையில் பூசவேண்டும்.

5-ல் அத்வர்யு யஜமானன் வபாச்ரபணிகளால் (வபையைப் பாகம் செய்யுங்கருவிகள்) பசுவைப் பிடித்துக்கொள்ள மந்த்ரம்.

6-ல் ஆஹவநீயத்திலிருந்து கொள்ளிக்கட்டையை எடுத்துக் கொண்டு ஆக்நீத்ரன் பசுவிற்கு முன் மந்த்ரத்தைச் சொல்லவும், 'சமிதா' என்றபசுவை மாரணம் செய்பவன் பசுவை முன் நடத்தவும் ம—ம்.

7-ல் கொள்ளியால் ஒரு இடத்தைச் சுற்றி அதைக் கீழேவைக்கவும் சாமித்ரன் அதற்குத்தென்பாகத்தில் பசுவை மேற்குமுகமாக பர்ஹிஸ்ஸின் மேல் நிறுத்தவும் மந்த்ரம்.

8-ல் ப்ரதிப்ரஸ்தாதா பத்நியை அழைத்து வந்ததற்கு மேல் அவள் ஆதித்யனை வணங்குதல்.

9.ல் இவனை சாத்வால உத்கர (வெருகுழி) ம் இவைகளுக்கு வடக்குப்பாகத்தில் கீழ்முகமாக நிறுத்தி சாத்வாலத்திலிருந்து பத்நீ தண்ணீரை எடுத்து அதைப்பார்த்துச் சொல்லுதல்.

## Vi-3-6(of 1-2-7-8)பசுநியோஜனம்.

ஸவித்ரு தேவதையின் தூண்டுதலால் என்றுகயிற்றை எடுக்கிறான். இது தூண்டுதலுக்காக. அசுவினிகளின் பாஹுக்களால் என்றார். அச்விநிகளே தேவர்களின் அத்வர்யுக்களானார்கள். பூஷனுடைய கைகளால் என்றார். இது அடக்குவதற்காக. "தேவஹவிஸ்ஸே ருதத்திற்காக உன்னைப்பாசத்தால் கட்டுகிறேன்." என்றார். யக்ஞமென்ற ஸ்த்யத்தாலேயே இதை (யாகப்பசுவை)க்கட்டுகிறான்.

ஸாயணர்— யக்ஞத்தின்பலம் கட்டாயம் ஏற்படுவதால் யக்ஞத்தை ஸத்யம், என்றார்.

வக்ரமாகக் கயிற்றைச்சுற்றுகிறான். மாம்ஸத்திற்காக கொல்லப்படும் பசுவை தன்னேராக நிறுத்திக் கழுத்தில் கயிற்றைக்கட்டுவார்கள். இது வித்தியாஸத்திற்காக.'மனுஷ்யர்களின் அடிக்கட்டு முதலியவற்றைத் தாங்கிக்கொள்ளு' என்று நெருக்கிக்கட்டுகிறான். இது ஓடாமல் நிறுத்திவைக்க.

'ஜலத்தாலும் ஒஷதிகளாலும் ப்ரோக்ஷணம் செய்கிறேன்' என்றார் பசுவென்பது, ஜலத்தினாலும், ஒஷதிகளாலும்உண்டானதுவாம்,'ஜலத்தைக்குடிப்பவன் என்றார் யாகத்திற்குப் பிடிக்கப்பட்ட இந்தப்பசு நீரைக்குடிக்கவேண்டும். "இனிமையாயும் தேவர்களுக்குத்தகுதியான இந்த அவ்யத்தை, திவ்யஜலமே, இனிமையாக்குங்கள் என்றார், இதைஇனிமையாகவேசெய்கிறான். மேலிருந்து ப்ரோக்ஷிக்கிறார் மேலே இருக்கே சுத்தமாகச் செய்கிறார், குடிக்கச் செய்கிறார், உள் புறம் சுத்தமாகச் செய்கிறார்அடிப்பக்கம் ப்ரோக்ஷிக்கிறார் எல்லாப் பக்கங்களிலும் மேத்யமாகச் செய்கிறார்.

## Vi-3-7 ஸாமிதேந்யபிதானம்.

அக்நி என்ற ஹோதாவால் தேவர்கள் அஸுரர்களைத் தோல்வி அடையச் செய்தார்கள்.மூட்டப்பட்ட அக்நியைக்கேட்டுக்கொள்(அநுப்ருஹி) என்றார் சத்ருருக்களை நாசம் செய்ய.

பதினேழு அக்நியை மூட்டும் (ஸாமிதேநீ) ருக்குக்களைச் சொல்வார். ப்ரஜாபதி பதினேழாம், இதனால் ப்ரஜாபதியை அடைவான். பதினேழுருக்குக்களைக் கூடச்சொல்லுவார் மாதங்கள்பன்னிரண்டு ஐந்து ருதுக்கள் அது ஸம்வத்ஸரம். ப்ரஜை ஸம்வத்ஸரத்திற்குப் பின்பு பிறக்கும். இது ப்ரஜைகள் உண்டாவதற்கு.

தேவர்கள் அக்நியை மூட்டும் ஸாமிதேநீ மந்த்ரங்களைச் சொல்லியும் யக்ஞத்தை அடையவில்லை. ப்ராஜாபதிவாய்பேசாமல் ஆகாரத்தைச்செய்தார்.

வா— [புத்தியைக்கட்டி ஸாமிதேனியைச் சொல்லி அந்தச்ரமத்தால் புத்தி தளர்ந்தால் பிறகு செய்ய வேண்டியது எதுவென்று அறியவில்லை. அப்போது ப்ராஜாபதி அந்த ச்ரமத்தைப் போக்கினார்.]

பிறகு தேவர்கள் யக்ஞத்தைப் பார்த்தார்கள். வாய் பேசாமல் நெய் யைத்தெளிப்பதுவேயக்ஞத்தைக் கண்டுகொள்வதற்காக.

அஸுரர்களிடம் யக்ஞம் இருந்தது அதைத்தேவர்கள் வாய்பேசாமல் ஹோமத்தால் திரும்ப அடைந்தார்கள். வாய்பேசாமல் ஆகாரம் செய்வதால் சத்ருவின் யக்ஞத்தை அடைகிறான். பரிதிகளைத் துடைக்கிறான். இதனால் இதைச் சுத்தம் செய்கிறான். மூன்று தடவை துடைக்கிறான் யக்ஞமே மூன்று தடவைகள் செய்ய வேண்டும் கார்யங்களுடையது. மேலும் ராக்ஷஸர்களை வெருட்டுவதற்காக மொத்தம் பன்னிரண்டாகும் ஸம்வத்ஸரம் பன்னிரண்டு மாதங்களாம். ஸம்வத்ஸரத்தையே ப்ரீதி செய்விக்கிறான். இவனுக்கு ஸம் வத்ஸரத்தையே இவனைச் சேர்ப்பிக்கிறான். ஸ்வர்க்கலோகம் சேர்வதற்காக.

ஆகாரமென்பது யக்ஞத்தின் சிரஸாம். அக்நியே ஸர்வதேவதை கள். யக்ஞத்தின் சிரஸ்ஸிலேயே (ஆரம்பத்திலேயே) ஆகாரம் செய்தால் யஜ மானன் ஸர்வதேவதைகளையும் அடைகிறான்.

ஆகாரம் (Aghara) என்பதே யக்ஞத்தின் சிரஸாம். பசுவே, உட லாம். ஆகாரத்தை ஆகாரம் செய்த பிறகு பசுவை நெய்யால் பூசுகிறார். உடலிலேயே யக்ஞத்தின் சிரஸ்ஸைத்திரும்பவைக்கிறார் என்றபடி.

'உனது ப்ராணன் வாயுவோடு சேரட்டும்' என்றார். ப்ராணனுக்கு தேவதையே வாயு. வாயுவுக்கே இதன் ப்ராணனை ஹோமம் செய்கிறான். ஹ்ருதயாதி அங்கங்கள்யாகவிசேஷங்களில் சேரட்டும், யஜமானன் ஆசிஸ் களைப்பெற்றவனாக ஆகட்டும்' என்றார். யஜமானனையே ஆசிஸ்பெற்றவ னாகச்செய்கிறான்.

'த்வஷ்டாவினது (புத்திரன்) விசுவரூபன் மேலே இருந்து பசுவின் மேலே வமனம் செய்தான். ஆதலால் மேலேஇருந்து கீழே பசுவை வெட்டுவதில்லை. மேலேயிருந்து பசுவை நெய்யால் பூசுவதால் பசுவைச் சுத்தமாகவே செய்கிறான். ரித்விக்குக்களை வரிக்கிறது சந்தஸ்களை வரிப்பதாம். 'ஏழுபெயர்களை வரிக்கிறான். ஏழு (கிராம) ப்பசுக்கள். ஏழு காட்டுப்பசுக்கள். ஏழுசந்தஸ்கள் இரண்டும் அடைவதற்காக.

ப்ரயாஜங்கள் பதினேழு யஜிக்கிறான். பத்தே பசுவின் ப்ராணங்கள் ஆத்மா பதினொன்றாவது. பசு எவ்வளவோ, அதை யஜிக்கிறான். "ஸமைத,

ஹோமம் செய்யும்போது, யஜிக்கவேண்டும். உடலுக்குள்ளேயே வபையும் இருக்கும்.

ஸ்வதிதி (கோடாலி)யே வஜ்ரமாம், யூபத்தின் மரச்சில் வஜ்ரமாம். க்ருதத்தைத் தேவர்கள் வஜ்ரமாகச்செய்துகொண்டு ஸோமத்தை அடித்தார்கள். 'க்ருதத்தால் பூசப்பட்டவர்களே, பசுவைக்காத்துக்கொள்ளுங்கள்' என்றார். வஜ்ரத்தாலேயே பசுவை வசப்படுத்திக்கொல்லுகிறான் (ஆலம்பனம் செய்கிறான்.) அக்நியைச்சுற்றுகிறான். பசு எல்லாவற்றையும் ஹோமம் செய்ததாகச்செய்கிறான். சிந்தினதோஷம் வாமலிருப்பதற்காக. ஹோமம் செய்ததில் வெளியில் சிந்தினதும் சிந்தினதோஷமாகாமல் இருக்குமாம்.—மூன்றுதடவை செய்யவேண்டிய காரியங்களைப்பெற்றது. இதால் மேலும் ராக்ஷஸர்களை ஓட்டிவிடுவதற்கே.

ப்ரஹ்மவாதிகள் 'பசுவைப்பிடித்துக்கொள்வதா? பிடித்துக்கொள்ளாமலிருப்பதா?' என்ற கேள்வியைக்கேட்டார்கள். மரணத்திற்காகவே பசு கொண்டுபோகிறபடியால், அதைப்பிடித்துக் கொள்வதனால் யஜமானன் ஆயுஸ் க்ஷீணித்துப்போகும். மேலும் இந்தப்பசு ஸ்வர்க்க லோகத்தைக்குறித்துக் கொண்டுபோகப்படுகிறபடியால், இதைப்பிடித்துக்கொள்ளாமல் போனால், யஜமானனே ஸ்வர்க்கலோகத்தை அடையாமல் போய்விடுவான்; வபையைவாட்டும் கருவியான ச்ரபணியால் பிடித்துக் கொள்ளுகிறான். பிடித்துக்கொண்டதாகவும் ஆகும். பிடித்துக்கொள்ளாமலிருந்ததாகவும் ஆகும்.

ஹோதாவே, தேவதைகளுக்கு ஹவ்யங்களுக்காக பசு சமீபத்தில் போக எவும்; ஏனெனில் எவின கர்மாதான் செய்யப்படுகிறது. "தனத்துடன் கூடியபசுக்களின் அங்கங்களே! யஜமானனுக்கு ப்ரியத்தைச்சேர்ப்பியுங்கள்." இது யஜுஸ்படியே.

அக்நியோடு (அக்நீத்ரன்) முன்னே போகிறான். ராக்ஷஸர்களை ஓட்டுவதற்காக 'பூமியின்ஸம்பர்க்கத்திலிருந்துகாவும்' என்று பர்ஹிஸைக்கீழே போடுகிறார். சிந்தாமலிருப்பதற்கு பர்ஹிஸில் சிந்தினதுவும் சிந்தாதது போலாம். மேலும் பூமியில் விழுந்தபோதிலும் பர்ஹிஸ்ஸில் விழுந்தது போலவே (தோஷமாகஆகாது.) அத்வர்யு பசு கொல்லப்படும்போது அதனிடமிருந்து திருப்பிக்கொள்கிறான். பசுக்களிடமிருந்து தன்னை ஒளித்துக் கொள்வதே தான் வெட்டுப்படாமலிருப்பதற்காக. இப்படித்தெரிந்துகொள்பவன் ச்ரீயையும், பசுக்களையும் அடைகிறான். பின்புறத்திலுள்ள இந்தயஜமானபத்நீமூன் அழைத்துக்கொண்டுவரப்படுகிறாள். "நாலுபுறமும் வ்யாபித்திருக்கும் ஸூர்யகிரணங்களுக்கு நமஸ்காரம்" என்றார், ஆதித்தியன் கிரணங்களே. 'ஆதாரங்கள்' அவைகளுக்கே நமஸ்காரம் செய்கிறான். (இது பொருத்தமே) "சத்துருவில்லாமல் போகுக" என்றார். அர்வாஎன்பது சத்ரு. சத்ருநிவர்த்திக்காக; "க்ருதப்ராவஹத்தின் பின்னே, ப்ரஜையோடுகூட, தனபுஷ்டியோடுகூட" என்றார். இவளுக்கு ஆசிஸ்ஸைச்செய்

நூர். "திவ்யஜலங்களே சுத்தர்களாக விரும்புபவர்கள் நீங்கள்;" என்றார் திருபஜாஸ்படிதான்.

## அநுவாகம் 9.

ஸம்ஜ்ஞப்தஸ்ய பசோர்—வபோத்கேதநம்: (-வதம்செய்யப்பட்ட பசுவின் வபையை எடுப்பது.

1 (பசுவைப்பார்த்து,) உனது வாக் விருத்தி அடையட்டும்(வாக் இந்த்ரியம் கோளத்தை விட்டு நீங்கினதாலுண்டான சோகத்தைவிட்டு தேவதாசரீரத்தை ஸ்வீகரிக்கும்போது சுகமாக வ்ருத்தியடையட்டும்). உனது ப்ராணன் விருத்தியடையட்டும், உனது சக்ஷுஸ்(கண்) வ்ருத்தியடையட்டும் உனது செவி வ்ருத்திஅடையட்டும். உனது ப்ராணனையும் சக்ஷுஸ்ஸையும் ச்ரோத்ரத்தையும் எந்த சோகம் அடைந்ததோ(கட்டிமுகத்தைப்பிடித்து) எந்தக்ரூரகார்யங்கள் செய்யப்பட்டனவோ அவையெல்லாம் சமனமாகட்டும் —இந்த ஜலத்தால் (வரும்தேகத்தில் ப்ரவேசிப்பதற்காக) சுத்தமாகட்டும் — உனது நாபி வ்ருத்தி அடையட்டும்) பாயு வ்ருத்தியடையட்டும்; (உனது) கால்கள் சுத்தமாகவேஆகட்டும். (ப்ரோக்ஷணாத்துக்கான) அப்புவுக்கும் (நீருக்கும்)பர்ஹிஸ்ரூபமானபசுவின் அடியில்போடப்பட்ட ஓஷதிகளுக்கும், (மரித்தபசுவைத்தாங்கின பூமிக்கும் (பசு மரித்தகாலத்தில் பார்த்திருந்த) அஹோராத்ரிகளுக்கும் (இரவுபகல்களுக்கும்) சுகமுண்டாகட்டும்.

2 ஓஷதியே, இதைக்காவும். ஸ்வதிதியே, (கத்தியே) இதை ஹிம்ஸிக்காதேயும்.

3 ரக்ஷஸின் பாகமாகிறாய். ரக்ஷஸை அதமமான தமஸ்ஸை அடைவிக்கிறேன். எங்களைத் த்வேஷிக்கிறவனை நாங்கள் த்வேஷிக்கிறவனையும் இதோ அதமமான தமஸ்ஸை அடைவிக்கிறேன்.

4 (வபையைப்பார்த்து) (யஜமான், தேவதை இவர்களுக்கு) அந்நம் சித்தியாவதற்கு உன்னை எடுக்கிறேன். (வபாசரணி அதாவது வபையைப்பிரித்துப்பார்த்து

வதற்கான ஒருவித முள் செடியைப்பார்த்து)த்யாவா-ப்ருதிவீகளே, வபை என்ற க்ருதத்தால் மூடிக்கொள்ளுங்கள்.

5 நல்ல வீரர்களுடன் கூடிய தனம் சேதமில்லாதது.

6 விஸ்தாரமான அந்தரிக்ஷத்தில் செல்.

7 (வாயுவே) (வபையிலிருந்து சொட்டும்) சொட்டுக்களைச் சாப்பிடும்.

8. (வபாச்ரபணிகளைப் பார்த்து)ஸ்வாஹா! ஊர்த்துவநபஸஸென்ற மருத்புத்ரனைச் சேருங்கள்.

குறிப்பு:—

அத்வர்யுவின் உதவியைக்கொண்டு மரணமடைந்த பசுவின் வாக் முதலிய இந்த்ரியங்களைவ்ருத்தி செய்தல், மிகுந்ததைப் பூமியில் கொட்டுதல் 2 வலதுகையால் நாபியைப் பொத்திக் கொண்டு, ஒருபக்கத்தில் ஊறுக்க ம—ம். 3 ரக்தம் கலந்த தர்ப்பத்தை ராக்ஷஸர்களின் பாகம் என்று எறிந்துவிட்டு அதையே இடதுகாலால் மிதிக்கவும் ம—ம். 4 வபையை எடுப்பதற்கும், வபையால் த்விசூல ச்ரபணியை மறைக்க மந்த்ரங்கள். 5. வபையைநன்றாய் வெளியே எடுக்க ம—ம். 6 கீழ்பக்கம் உள்ள ஆகவநீயாக்நிக்குப் போகும்போது சொல்லவேண்டிய ம—ம். பர்ஹுவின் நுனியை ஆஹவநீயாக்நியில் காய்ச்சித்சர்ப்பையின் நுனியைச் சேர்க்க ம—ம் 8 ஆஹவநீயாக்நியில் வபாச்ரபணிகளைப் போடுவதற்கு ஸமீபத்திலுள்ள தணலில் எரித்துவிட ம—ம்.

Vi-3-9.வபாஹோமாபிதாநம்.

பசுவை வதம்செய்யும்போது ப்ராணன்கள் சோகம் அடையும். "உனது வாக் வ்ருத்தியை அடையட்டும், உனது ப்ராணன் வ்ருத்தியை அடையட்டும்," என்றார் ப்ராணங்களிடமிருந்துசோகத்தைப் போக்குகிறார். இந்த சோகம் ப்ராணன்களிடமிருந்து பூமியைப்ரவேசிக்கிறது. "அஹோராத்ரங்களுக்கு ஸுகம் உண்டாகட்டும்," என்று அஹோராத்ரங்களிடத்திலிருந்து கீழே இறக்குவார். அஹோராத்ரிகளால் ப்ரிதிவீக்குச் சோகத்தைச் சமனம் செய்கிறார்.

"ஓஷதியே இதைக்காவும், ஸ்வதிதியே இதை ஹிம்ஸிக்காதேயும்;" என்றார். ஸ்வதிதியே - வஜ்ரமாம்; இதுசாந்திக்காக. பக்கத்திலிருந்து சேதிக்கிறார் (வெட்டுகிறார்.)மத்தியிலிருந்து மனுஷ்யர்கள் வெட்டுகிறார்கள் குறுக்காகவெட்டுகிறார். நீளப்போக்கில் மனுஷ்யர்கள் வெட்டுவார்கள்.— இது வித்தியாசத்திற்காக.ராட்சஸர்களின் பாகமாகிறாய்," என்று அடிப்பக்

சத்தில் ரக்தத்தால் பூசி எறிந்துவிடுகிறார். ராக்ஷஸர்களை ரக்தத்தாலேயே பாகமுள்ளவர்களாகச்செய்து விரட்டுவார்.

"இதோ நான் இராட்சஸை அதமமானதமஸை அடைவிக்கிறேன். நம்மை எவன் த்வேஷிக்கிறானோ,நாம் எவனைத்வேஷிக்கிறோமோ," என்றார். இரண்டுபேர்கள் ஒருவனை இந்த(யஜமானன்)த்வேஷிப்பான், மற்றொருவன் யஜமானனை த்வேஷிப்பான். இந்த இரண்டுபேர்களையும் அதமமான தமஸை அடைவிக்கிறான்,

"அன்னத்திற்காக உன்னை" என்று வபையை எடுக்கிறார். யாகம் செய்கிறவன், இச்சிப்பது போலவாம். (வபாச்ரபணியால்) வபையைக் குத்தி விட்டால் ருத்ரன் இவன் பசுவை அடித்துவிடுவான். அதால் குத்தி விடாமல் அதில் பாவமு. (ஆதலால்) (ஒருவபாச்ரபணியால்)குத்தியும் மற்றொன்றால் குத்தாமலுமிருக்கவேண்டும், இதனால் த்ருதியுண்டாம்.

"க்ருதத்தால் த்யாவா ப்ருதிவீகளே மூடிக்கொள்ளுங்கள்" என்றார். த்யாவாப்ருதிவிகளை ரஸத்தால் நனைக்கிறான். "நல்லவீரர்களுடன் கூடியதனம் சேதமில்லாதது." என்றார். இதுயஜுஸ்படிதான். வபையை வெளியே எடுப்பதென்பதே க்ரூரமான கார்யத்தைச்செய்கிறதாகும். 'விஸ்தாரமான அந்தரட்சத்தில் செல்,' என்றார் சாந்திக்காக.

எவன் மரணம் செய்வதற்காகப் பசுவைப்பிடித்து நடத்திக்கொண்டு போகிறோனோ அவன் இவ்வுலகத்தைவிட்டு நழுவுகிறவனாகிறான் வபாச்ரபணியை அவன் மறுபடி பிடித்துக்கொள்கிறான். இந்த லோகத்தில் ப்ரதிஷ்டையை அடைகிறான். அக்நியோடு முன்புசெல்லுகிறான். ராக்ஷஸர்களை விரட்டுவதற்காக. அப்படி தேவதைகளையும் ஹவ்யத்தோடு பின் செல்லுகிறான், கடைசியிலிருக்கிற அங்காரத்தை (தணலை) த்தாண்டி போகக்கூடாது அப்படி கடைசியிலிருக்கிற அங்காரத்தைத்தாண்டிப்போனால் தேவர்களை அவமதித்தவனாக ஆகிறான். 'வாயுவே, சொட்டுக்களை சாப்பிடும்' என்றார். ஆதலால் சொட்டுக்கள் பிரிந்து தனித்தனியாக விழுகின்றன. வபை என்பது பசுக்களிடத்தில் ச்ரேஷ்டம். ஓஷதிகளுக்குள் பர்ஹிஸ் ச்ரேஷ்டம். ச்ரேஷ்டத்தாலேயே ச்ரேஷ்டத்தைச்சேர்த்து வைக்கிறான். ஆதலால் ஓஷதிகளில் பசுக்களை ஸ்தாபிக்கிறான்.

ஸ்வாஹா காரத்திற்காகக் கட்டளையிடு; என்றார் அது யக்ஞத்தின் பூர்த்திக்காக.

ப்ருஷதாஜ்யம் என்பது பசுக்களின் ப்ராணபானங்களாம். வபையே சரீரமாம், ப்ருஷதாஜ்யத்தை அபிகாரம் செய்துகொண்டு வபையை அபிகாரம்செய்கிறான் (இதனால்) சரீரத்திலேயே பசுக்களுக்கு ப்ராண அபானங்களை ஸ்தாபிக்கிறான்.

ஸா—.(ப்ருஷதாஜ்யம் என்பது தயிருடன்கலந்த ஆஜ்யம். 'ஸ்வா
ஹா! ஊர்த்வநபஸ்ஸென்ற மருத்புத்ரனைச் சேருங்கள்!' என்றார்
ஊர்த்வநபஸ்ஸென்ற மருத்புத்ரன்தான் தேவர்களுக்கு வபாச்ரப
ணியை எறிந்து விடுவதுவழக்கம். அவனே அவைகளை எறிந்து விடு
கிறான். நுனியை வெவ்வேறு விதமாக எறிந்துவிடுகிறான். (அதாவது
இரண்டுகவையுள்ளதைக் கிழக்குநுனியாகவும், ஒருகவையுள்ளதை மேற்கு
நுனியாகவும் பிடித்துக்கொண்டு அக்னியில் போடுகிறான். அவனாலேயே
ப்ராணனும், அபானனும் மேலும் கீழுமாக ஓடுகின்றன.

## அநுவாகம் 10.

### வஸாஹோமம்.

1 (ஹ்ருதயத்தைப் பார்த்து) மனதுக்குப்பதிலான ப்ருஷ
தாஜ்யத்தோடு தேவர்களுடைய மனது சேரட்டும். ப்ராண
னுக்குப்பதிலான ப்ருஷதாஜ்யத்தோடு தேவர்களுடைய
ப்ராணன் சேரட்டும். ஹவ்யமான உன்னைத்தேவர்களுக்கும்
ப்ரியமாக க்ருதத்தோடுகூடினதாகச் செய்கிறேன்.

2 இந்த்ரனை தேவதையாகக் கொண்ட (இந்தப் பசுவினது)
ப்ராணன் அந்தந்த அங்கங்களில் ஸதாபிக்கப்படட்டும். அப்
படியே அபானனும் விசேஷமாய் அந்தந்த அங்கங்களில்
இருக்கட்டும், (த்வஷ்டா) தேவனே உமது அநுக்ரஹத்தால்
அங்கமெல்லாம் (சேதித்துப்) பிரிந்திருந்தும் ஒன்றுசேர்ந்
திருக்கட்டும். ஹ்ருதயாதி அவயவங்களை நீங்கள் நானாரூ
பங்களோடிருந்தாலும் அவிலென்ற ஒரே ரூபத்தோடு
இருங்கள். பசுவே தேவர்களிடம் தன்குலத்தின் உப
யோகத்திற்காகப் போகும் உன்னைப்பார்த்து சகாக்
களும் மாதாபிதாக்களும் உன்னைக்கொண்டுத்தம் குலம்
முழுவதும் உபயோகமாகிறதென்று சந்தோஷப்படட்டும்.

3 (வஸையைப்பார்த்து) நீ ஆச்ரயிக்கத்தக்க ச்ரீயாகிறாய்.
ஆஹவநீயாக்னி உன்னை ஸ்வீகரிக்கட்டும். ஜலமும் உன்னை
நன்றாகச் சேரட்டும். வாயுவின் கதிக்காகவும் ஆதித்யன்
கதிக்காகவும் நீரால் பொங்கும் ஓஷதிகள் வளருவதற்காக
வும் உன்னை நன்றாக போடுகிறேன்.

4 க்ருதத்தைக் குடிக்கும் தேவர்களே, இந்த க்ருதத்தைக்
குடியுங்கள். வஸையைக்குடிக்கும் தேவர்களே, இந்த வஸை

யைக்குடியுங்கள். பசுவே, அந்தரிக்ஷவாஸிகளான தேவ கணத்தின் அவிஸ்ஸாவாய். அவர்களுக்கு உன்னை ஹோமம் செய்கிறேன், கிழக்கு திக்குக்கு ஸ்வாஹா. தெற்கு (ப்ரதிச.) திக்குக்கு மேற்கு (ஆதிச:) திக்குக்கு. வடக்கு திக்குக்கு. திக்குக்களுக்கெல்லாம் ஸ்வாஹா. திக்குக்களுக்கெல்லாம் நமஸ்காரம்.

குறிப்பு:—

1, சமிதாவிடமிருந்து ஹ்ருதயத்தைக் கோக்கும் சூலத்தை எடுத்து அதனுல் அதைப் பிளந்து அதையே திரும்பச் சமிதாவினிடத்தில் கொடுத்து ப்ருஷதாஜ்யத்தால் ஹ்ருதயத்தை அபிகாரம் செய்யவேண்டியது. 2 பசுவின் வெட்டின பாகங்களைத் தொட இந்தமந்த்ரம். 3 மாம்ஸத்தைப் பாகம் செய்யும் பாண்டத்திலிருக்கும் த்ரவாம்சத்திற்கு வஸை என்பார். வலது புறத்திலுள்ள எலும்பின் நுனிப்பாகமான கும்பத்தால் அவ் வஸையைக்கிளர வேண்டும் (ப்ரயௌதி) இதனுலேயே 'வாத்ஸ்ய' என்ற மந்த்ரத்தால் மூடவேண்டும். 4 ல் வஸாஹோமம் செய்து விட்டு ப்ரதிப்ரஸ்தாதா திக்குகளுக்கு ஹோமம் செய்வார். நமோதிக்ப்யா என்று எழுந்து வேண்டிக் கொள்ள வேண்டும்.

பசுவை ஆலம்பனம்செய்து அதன்மேல் புரோடாசத்தை வைக்கிறுர். அதை ஸாரமுள்ளதாகவே ஆலம்பனம் செய்ததாம்.

வபையால் ஹோமம் செய்கிறுர். புரோடாசமே பலமாம் பசுக்களின் மத்தியில் பலத்தை ஸ்தாபிக்கிறுர். அப்படியே பசுவின் (சித்ரத்தை) (Chidra) ஒட்டையை மறைக்கிறுர்.

ப்ருஷதாஜ்யத்தை ஸ்ருவத்தால் தனியாக எடுத்து மூன்றுதடவை சமிதாவைக்கேட்கிறுன், "அவிஸ்ஸூ பக்வமாய்விட்டதா," ஏனெனில் தேவர்கள் மூன்றுதடவை சொன்னதையே ஸத்யம் எனக்கொண்டவர்கள். பக்வமாகாததைப் பக்வமென்றுசொல்பவன் பாபியாவான்.

ப்ருஷதாஜ்யம் என்பது பசுக்களின் ப்ராணனும் அபானனுமாம். பசு ஆலம்பனம் செய்யப்படும்போது அதன் சரீரம் ஹ்ருதயத்தை அடைகிறது ப்ருஷதாஜ்யத்தால் ஹ்ருதயத்தை அபிகாரம் செய்தால் சரீரத்திலேயே ப்ராண, அபாநங்களை ஸ்தாபித்ததாகும்.

பசுவாலேயே தேவர்கள் ஸ்வர்க்க லோகத்தை அடைந்தார்கள். மனுஷ்யர்கள் நம்மைப் பின்தொடருவார்கள் என்று அவர்கள் நினைத்தார்கள் அதனசிரஸ்ஸைச் சேதித்துஸாரத்தைஓட விட்டார்கள் (ப்ராக்ஷாரயத்) அதுவே ப்ராக்ஷமாகிவிட்டது. அதுதான்ப்ராக்ஷத்தின் தன்மை. ப்ராக்ஷ (இச்சியாச்) சாகை

யை பர்ஹிஸ்ஸுக்கு மேலேபோடுவதால் ரஸத்தோடு கூடினதாகவே பசுவை நறுக்குகிறான். (அவதானம்.)

பசுவைக் கொண்டுபோகும்போது ரக்ஷஸ்ஸுகள் தொடருகிறார்கள். யூபத்திற்கும் ஆகவநீயத்திற்கும் நடுவில் கொண்டுபோகவேண்டும். இதனால் ரக்ஷஸ்கள் ஓடிவிடுவார்கள்.

பசுவை ஆலம்பனம் செய்யும்போது அதன் மனது போய்விடும். அவிஸ்ஸைக்கிழிக்கும்போது (அவதானம்) 'மனோதைக்கு மந்த்ரத்தைச் சொல்' என்பார். இதனால் மனதை அடைகிறார்.

பதினொரு பாகம் எடுக்கிறார். (இதில்) பத்து பசுவின் ப்ராணங்களாம். சரீரம் (ஆத்மா) பதினொன்றாவது. பசுவின் பரிமாணத்திற்குத்தகுந்தபடி துண்டுசெய்கிறான். முதலில் ஹ்ருதயத்தைத் துண்டித்து எடுக்கிறான். பிறகு நாக்கை. பிறகு வக்ஷஸ்ஸை (மார்பை). எதை ஹ்ருதயத்தால் நிச்சயம் செய்கிறானோ அதையே பிறகு நாவினால் சொல்லுகிறான். நாவினால் சொல்லுவதைத்தான் வக்ஷஸ்ஸிலிருந்து வெளிவிடுகிறான். பசுவிஷயத்தில் இதுவே க்ரமம்.

இப்படி வெட்டி எடுத்தால் மிகுதியை இஷ்டப்படி அவதானம் செய்தால் இந்தப்பசுவை முறைப்படியே அவதானம் செய்ததாம். மத்யத்தில் குடல்பாகத்தை அவதானம் செய்கிறார் (Cuts). ப்ராணன் மத்யத்திலேதான் இருக்கிறது மேல்பாகத்தில் அவதானம் செய்கிறான். ப்ராணன் (சக்ஷுஸ்கௌல்லாவற்றிலும்) உத்தமமாம், இதாவது அதாவுதி செய்கிறதால் தோஷ மேற்படாது.

ஒரு ப்ராமணன் பிறந்தவுடன் மூன்று விஷயங்களில் கடமைப்பட்டவனாகஆகிறான். ரிஷிகளுக்கு ப்ரஹ்மசர்யம் என்ற வேதாப்யாஸத்தாலும், தேவர்களுக்கு யாகத்தாலும், பித்ருக்களுக்கு ப்ரஜையாலுமே. எவன் புத்ரனைப் பெற்றவனோ, யாகத்தைச் செய்தவனோ ப்ரஹ்மசாரியாக குருகுலத்தில் வாஸம் செய்தவனோ அவனே இந்தக்கடன்களிலிருந்து விடுபட்டவன். அவதானம் செய்வதாலேயே இக்கடன்களை நிவர்த்தி செய்வதால் இதற்கு அவதானம் (கடன் நிவர்த்தி) எனப் பெயராம்.

தேவாஸுரர்கள் சண்டையிட்டுக் கொண்டார்கள். தேவர்கள் அக்நியைப்பார்த்து உன்னை வீரனைக்கொண்டு அஸுரர்களை ஜெயமடைவோமென்றார்கள். (அதற்கு) அவர், 'வாத்தைக்கேட்கிறேன். பசுவின் உத்க்ருஷ்டபாகத்தை ஸ்வீகரிப்பேன்' என்றார். உதக்ருஷ்டபாகத்தை எடுத்துக்கொண்டார், மூன்பாதியில் தோஸ் என்ற தோள்பாசமும், மத்தியில்

குடலும் பின்பாதியில் இடுப்புப்பாகமும். பிறகு தேவர்களுக்கு ஜயமும் அஸுரர்களுக்குத்தோல்வியும் ஆயிற்று. இம்மூன்று அங்கங்களேயும் அவதானம் செய்வதால் சத்ரு அபஜெயமடைகிறுன். தான் ஜெயிக்கிறுன். சத்துரு அபஜெயமடைகிறுன்.

குறுக்காக அவதானம் செய்கிறுன். ஆதலால் பசுக்கள் (சயனகாலத்தில்) அங்கங்களைக்குறுக்காக வைத்துக்கொள்ளும் இது ப்ரதிஷ்டைக்காக.

ஜுஹு, உபப்ருத்து இவைகளை மேதஸ்ஸால் (ஹ்ருதயத்தைச் சுற்றி இருக்கும் கிழிந்த துணிபோன்ற கொழுப்பால் மறைக்கிறுன் மேதஸ்ஸாலேயே பசுக்கள் (நல்ல) உருவமைந்தனவாகும். அதனுல் பசுக்களில் (நல்ல) உருவத்தை ஸ்தாபிக்கிறுன். யூஷத்தை (மாம்ஸத்தோடு பக்குவமான நீரை)ஊற்றி அதன்மேல் மூடுகிறுர். பசுவின் யூஷமே ரஸமாம்.பசுக்களிடத்தில் ரஸத்தை ஸ்தாபிக்கிறுன்.

வஸாஹோமத்தை விலா எலும்பினுல் கிளறுகிறுர். பார்சுவமென்ற எலும்பு பசுவின்மத்தியமாம். வஸா என்பது பசுக்களின் ரஸமாம். பார்சுவத்தால் வஸாஹோமத்தைக்கிளறுவதால் பசுக்களுக்கு மத்தியிலேயே ரஸத்தை ஸ்தாபிக்கிறுன்.

ஸம்க்ருபனம்செய்வதென்பது இந்தப்பசுவைக் கொல்வதே. ப்ராணனுக்குத் தேவதை இந்த்ரன் அப்படியே அபானனுக்கும் இந்த்ரனே தேவதை, "இந்த்ரனைத் தேவதையாகக் கொண்ட இந்தப்பசுவினுடைய ப்ராணன் அந்தந்த அங்கங்களில் ஸ்தாபிக்கப்படட்டும்," என்றுர், பசுக்களிடத்தில் இதனுல் ப்ரணபானங்களை வைத்ததாம். 'த்வஷ்டாவே எல்லாம் ஒன்று சேர்ந்திருக்கட்டும்,' என்றுர், ஏனெனில்பசுக்களின் தேவதை த்வஷ்டாவாம். நீங்கள் நானுரூபத்தோடிருந்தும் இவை ஒரேரூபமாக ஆகின்றன. தேவர்களிடம் (தன்குலத்தின்) உபயோகத்திற்காகப் போகும் உன்னை சகாக்களும் மாதாபிதாக்களும் சந்தோஷிக்கட்டும், என்றுர் மாதா, பிதாக்களால் சம்மதிபெற்று ஸுவர்க்க லோகத்தை அடைவிக்கிறுன். அர்த்த ருக்கால்வஸாஹோமத்தைக் செய்கிறுன். இந்தஸுவர்லோகமே அர்த்த ருக்காம். இந்தப்பூமியே மற்றப்பாதிருக்காம். இவைகளையே ரஸத்தால் பூசுகிறுன். திக்குக்களுக்கு ஹோமம் செய்கிறுன் திக்குக்களையே ரஸத்தால் பூசுகிறுன். நிச்சயமாகவே திக்குக்களிடமிருந்து பலத்தையும் ரஸத்தையும் அடைகிறுன்.

ப்ருஷதாஜ்யம் என்பது பசுக்களின் இந்தப்ராணுபானங்களே. பசுக்களுக்கு வனஸ்பதியே தேவதையாம். ப்ருஷதாஜ்யத்தை ஹோமம் செய்துவிட்டு, வனஸ்பதிக்கு ஸ்தோத்திரம் செய்,வனஸ்பதிக்கு ஹோதாவைப்பார்த்த படி,ஸ்தோத்திரம் செய்' என்றதால் பசுக்களிடத்தில் ப்ராணுபானனை ஸ்தாபிக்கிறுர்,

கண்டித்த ஒவ்வொருபாகத்தையும் கண்டிககிறார். அதனாலேயே பசுக்கள் அனேக உருவங்களுள்ளன.

யூஷத்தால் (மேலேபார்க்க) அதை நனைக்கிறார். யூஷமே பசுக்களின் ரஸமாம். ரஸத்தையே பசுக்களில் ஸ்தாபிக்கிறான்.

இடையில் உபாஹ்வாநம் செய்கிறான். இடையே பசுக்கள். பசுக்களையே ஆஹ்வானம் செய்வதாம். நான்குதடவை கூப்பிடுகிறான். ஏனெனில் பசுக்கள் நான்கு பந்தங்களுடையவை.

எவனுக்குப் பசுவேண்டாம் என்று நினைக்கிறானோ. மேதஸ் இல்லாததை அவனுக்கு எடுத்துக்கொள்கிறான் பசுக்கள் மேதஸ்ஸால் ரூபத்தைப்பெறும். ரூபத்தால் அவனுக்குப்பசுக்கள் இல்லாமல் செய்கிறான். பசுவற்றவனாக்கிவிடுகிறான். எவனுக்குப் பசுவேண்டுமென்று நினைக்கிறானோ மேதஸ்ஸோடுகூடினதை அவனுக்கு எடுத்துக்கொள்கிறான். பசுக்கள் மேதஸ்ஸால் ரூபத்தைப்பெறும். ரூபத்தால் அவனுக்குப்பசுவை அடைவிக்கிறான். பசுமானாக ஆகிறான்.

ப்ரஜாபதி யக்ஞத்தை ஸ்ருஷ்டித்தார். அவர் ஆஜ்யத்தை முன்பு படைத்தார். மத்தியில் பசுவையும் கடைசியாக ப்ருஷதாஜ்யத்தையும் (படைத்தார்). ஆதலால் ப்ரயாஜங்கள் ஆஜ்யத்தால் செய்யப்படுகின்றன. மத்தியில் பசுவாலும் அநுயாஜங்கள் ப்ருஷதாஜ்யத்தாலும் (செய்யப்படுகின்றன) ஆதலால் இது பின்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்டதால் (ததியோடு) சேர்ந்திருக்கிறது.

பதினொரு அநுயாஜங்களைச்செய்கிறான். பசுவின் ப்ராணங்கள் பத்து, சரீரம் பதினொன்றாவது. பசுவின் பரிமாணத்திற்குத்தகுந்தபடி அநுயாஜம் செய்கிறான்.

ஸம்க்ஞபனம்செய்வதே 'இந்தப்பசுவைக்கொல்வது. ப்ருஷதாஜ்யமே பசுக்களின் ப்ராணாபாநங்களாம். ப்ருஷதாஜ்யத்தால் அநுயாஜம் செய்வதே பசுக்களிடத்தில் ப்ராணாபாநங்களை ஸ்தாபிக்கிறதாம்.

## அநுவாகம் 11.

குத-காண்ட-காணக உபயட்ஸம்க்ஞகா ஹோமா:(குதத்தின் துண்டுகளால் உபயட்என்ற ஹோமம் செய்ய மந்த்ரங்கள்.)

1 அவிஸ்ஸே, ஸமுத்ரத்தைச்சேரு ஸ்வாஹா. அந்தரிக்ஷத்தைச்சேரு ஸ்வாஹா. ஸவிதாதேவதையைச் சேரு ஸ்வாஹா. பகல் இரவு தேவதைகளைச் சேரு ஸ்வாஹா. மித்ரா

வருணர்களைச்சேரு ஸ்வாஹா. ஸோமத்தைச் சேரு ஸ்வா ஹா. யக்ஞத்தைச் சேரு ஸ்வாஹா. சந்தஸ்களைச்சேரு ஸ்வாஹா, பூமி, ஸ்வாகசத்தைச் சேருஸ்வாஹா. தேவலோ கத்திலுள்ள நபஸ்ஸைச்சேரு ஸ்வாஹா.' வைச்வாநராக் நியைச்சேரு ஸ்வாஹா. லேபத்தைப்பார்த்து, நீரால் உண் டாகும் ஓஷதிகளுக்காக (பர்ஹிஸ்ஸில் துடைக்கிறேன்). (ஸமுத்ராதிதேவதைகளைப்பார்த்து) எனக்கு சந்தோஷமா னமனதைக் கொடும் (உத்தமஜாதி) சரீரத்தையும், (காந் தியுள்ள) ரூபத்தையும் (குணமுள்ள) புத்ரனையும், பௌ த்ரனையும் அடைவேனாக.

2 (ஹ்ருதய சூலத்தைப்பார்த்து.) சோகமே, நீ எங்களை த்வே ஷிக்கிறவனையும், நான் த்வேஷிக்கிறவனையும் சோகப்படும் படிசெய். (வருணனைப்பார்த்து) அந்தந்த இடங்களிலிருந்து (எங்களுக்குசோகத்தை அடைவிக்கும் ஸ்தானத்திலிருந் து) அரசனே, எங்களை விடுவியும், 'அப்'பென்றும், 'அக்நி யா'(கோ) என்றும் வருணா என்றும், (எங்கள் இஷ்டப்ராப் திக்கும் அநிஷ்ட நிவ்ருத்திக்கும், உமது நாமங்களைச் சொல்லி எந்தெந்தக் கார்யத்தை ஸாதிப்பதில் ப்ரயாஸைப் படுத்துகிறோமோ) அதிலிருந்து எங்களை விடுவியும்.

குறிப்பு:— ப்ரஸ்தாதா செய்யும் பர்ஹிஸ்ஸில் ஒட்டிக்கொண் டதைத்துடைக்கவும், கடைசியாகவும் ஜபிக்க மந்தரங்கள் 2 யூபத் திற்கு முன்பு ஸ்ப்யத்தால் தோண்டி நீருற்றிக்காய்ந்ததற்கும் ஈரமான இடத் திற்கு மத்தியில் ஹ்ருதயத்தைக்கோக்கும் சூலத்தைப்புதைக்கவும், பின் னல் ஜலத்தால் துடைக்கவும்.

## Vi-4-1· குதயாககதநம் (குதயாகத்தைச் சொல்லுதல்)

யக்ஞத்தாலேயே ப்ரஜாபதி ப்ரஜையை ஸ்ருஷ்டி செய்தார், அவை களை உபாங்கங்களால் தான் ஸ்ருஷ்டி செய்தார். (அநுயாஜத்திற்கு ஸமீபத் தில் செய்யப்படுதலால் உபயாஜமென்று பெயர்) உபயாஜம் செய்வதால் யஜமானன் ப்ரஜைகளையே ஸ்ருஷ்டிக்கிறான்.

பின்பாதியிலிருந்து துண்டு வெட்டுகிறார். பின்பாதியிலிருந்தே ப்ர ஜைகள் பிறக்கின்றன. (மூன்று பாகங்களில்) பெருத்ததை துண்டிக் கிறான பருமனான பாகத்திலிருந்தே ப்ரஜைகள் பிறக்கின்றன. ஒன்றோ டொன்று சேர்த்து விடாமல் துண்டிக்கிறான். ப்ராணங்கள் சேர்ந்து விடா மலிருப்பதற்கு. முன்பின் விரோதமில்லாமல் துண்டிக்கிறான். முன்பின்

விரோதமாகிவிட்டால் ப்ரஜைக்கு உதாவர்த்தம் என்றரோகம் பிடிக்கும். [உதாவர்த்தம் என்றது மலச்சிக்கல் என்ற வ்யாதி]

"ஸமுத்ரத்தைச்சேரு ஸ்வாஹா,' என்றார் இதால் தேஜஸ்ஸை ஸ்தாபிக்கிறார். அந்தரிக்ஷத்தைச் சேர் ஸ்வாஹா,' என்றார் இவனுக்கு அந்தரிக்ஷத்தாலேயே ப்ரஜைகளை உத்பாதனம் செய்கிறான். அந்தரிக்ஷத்திற்கு ஒத்தபடியே ப்ரஜைகள் பிறக்கின்றன. 'ஸவித்ருதேவனைச் சேரு, ஸ்வாஹா' என்றார். ஸவிதாவால் தூண்டப்பட்டே அவனுக்குப்ரஜைகளை உண்டாக்குகிறார். அஹோராத்ரங்களுக்குப் போய்ச்சேரு ஸ்வாஹா' என்றார் பகல் இரவுகளாலேயே இவனுக்கு ப்ரஜைகளை உண்டுபண்ணுகிறார். பகல் இரவுகளுக்குத்தகுந்த படியே ப்ரஜைகள் உண்டாகும். மித்ரன் வருணன் இவர்களைச்சேரு ஸ்வாஹா' என்றார். உண்டாகும் ப்ரஜைகளிடத்தில் ப்ராணன் அபானன்களை ஸ்தாபிக்கிறார். 'ஸோமத்தைச்சேர், ஸ்வாஹா,' என்றார் ப்ரஜைகளுக்கு ஸோமனே தேவதை. 'யக்ஞத்தைச்சேர் ஸ்வாஹா,' என்றார். ப்ரஜைகளை யாகத்துக்கு யோக்யமாகச்செய்கிறார். ச்சந்தஸ்களைச்சேர், ஸ்வாஹா.' என்றார். பசுக்களே, ச்சந்தஸ்கள், பசுக்களையே அடைகிறான். வானம் பூமிகளைச்சேர், ஸ்வாஹா' என்றார். உண்டானபசுக்களை த்யாவா—ப்ருதிவிகளால் இரண்டுபக்கமும் தரிக்கிறான். "ஆகாசத்திலுள்ள மேகத்தை அடை ஸ்வாஹா," என்றார் உண்டானப்ரஜைகளுக்கு மழையைக்கொடுக்கிறார். "வைச்வாமர—அக்னியைச்சேர் ஸ்வாஹா,' என்றார் பூமியில் பிறந்த ப்ரஜைகளை ஸ்தாபிக்கச்செய்கிறான். குதத்தை துண்டுசெய்கிற ப்ராணங்களையும் துண்டுசெய்துவிடுகிறான். "எனக்கு ஸந்தோஷமான மனதைக்கொடும்' என்றார். ப்ராணங்களை அந்தந்த இடங்களுக்கு வரவழைப்பார்.

பசுவை ஆலம்பனம்செய்த பிறகு அதன் ஹ்ருதயத்தை சோகம் அடையும். ஹ்ருதயசூலத்தைச்சுற்றிநிற்கும். பூமியில் ஹ்ருதயசூலத்தை வைத்தால்பூமிக்கு வலி ஏற்படும், நீரில்வைத்தால் நீருக்கு வலியைஉண்டாக்கிவிடும். நீரால் நனைந்த இடமும் காய்ந்தவிடமும் சேருமிடத்தில் வைக்கிறான். இதனால் இரண்டுக்கும் சாந்தியாம். எவனை த்வேஷிக்கிறானோ அவனை நினைக்கவேண்டும். அவனுக்கு சோகம் (வலி)ஏற்படும்.

---

## அநுவாகம் 12.

ஸோமாபிஷவோபயுக்த வஸதீவரீ ஸம்க்ரஹணம் அபாம் உபாதானம் (ஸோமலதையைப் பிழிவதற்குஉபயோகமான வஸதீவரீ என்ற தீர்த்தத்தைக் கொண்டுவருவது.

# அபாம்உபாதாநம்.

1 இந்தத்தீர்த்தம் தன்னால் ஸம்ஸ்காரத்தை அடைந்த ஸோ
மத்தினால் அவிஸ்ஸோடு கூடினதாக ஆகட்டும். இந்த்ர
தேவனும் அவிஸ்ஸோடு கூடினவனாக ஆகட்டும். அத்வர
மும் (யாகமும்) அவிஸ்ஸோடு கூடினதாக நாலுபக்கத்தி
லும் பரவட்டும் இந்தத்தீர்த்தத்தின் ப்ரகாசத்தால் ஸூர்ய
னும் அவிஸ்ஸோடு கூடினவனாக ஆகட்டும்.

2 (வஸதீவரீ தீர்த்தத்தைப் பார்த்து) அழிவற்ற சாலாமுகீ
யாக்நியின் ஆஸனத்தில் வைக்கிறேன் —

(ஸர்வப்ராணிகளின்) ஸுகத்தின் பொருட்டு ஸங்கிகளான
நீங்கள் எங்களை ஸுகத்தில் ஸ்தாபியும். நீங்கள் இந்த்ராக்
நிகளின் பாகங்கள விச்வேதேவர்களின் பாகங்கள் (ரக்ஷஸ்
களை விரட்டுவதற்காக) ஸாவதனமாக இரும்.

குறிப்பு.—

1 த்ருடமானகும்பத்தை எடுத்துக்கொண்டு, சாத்வாலம், உத்கரம்
இவைகளுக்கு நடுவில் வடக்காகப்போய் ஓடும்தீர்த்தத்திற்கு எதிரே நின்று
கொண்டு நிழலுக்கும் வெயிலுக்கும் சந்தியில் தீர்த்தத்தை எடுப்பார். 2ல்
சாலாமுகியம் என்ற ஆஹவநீயத்திற்குப் பின்பு அதைவைக்கவும்
யஜமானன் செய்யவேண்டிய ஜபமந்த்ரமும், வேதியின் பின் இரண்டு பக்
கங்களிலும் வைக்கவும், பிறகு ஆக்நீத்ர திஷ்ண்யத்திற்குப் பின்பு வைக்க
வும், அதை வேண்டிக்கொள்ளவும் மந்த்ரங்கள்.

ஆக்நீத்ர மண்டபத்தில் தேவர்கள் யாகசாலையைப்பாகித்துக்கொண்
டார்கள். அதன்பிறகு எது மிகுதியாக இருந்ததோ அதைக்குறித்து இது
நமக்கு (பொதுவாக) இங்கே இருக்கட்டும் (வஸ்துந:) என்றார்கள். அத
னால் வஸதீவரிக்கு இந்தப்பெயர் ஆயிற்று. மிகுதியான பாகத்தில் காலே
யில்வந்து பாகித்துக்கொள்ளமுடியவில்லை. அதை ஜலத்தில் போட்டுவைத்
தார்கள். இவைகளே வஸதீவரியாக ஆயின (இந்த) வஸதீவரீ தீர்த்தத்தை
எடுக்கிறார். வஸதீவரீ என்பது யக்ஞமே. ஆரம்பம் முதல் யக்ஞத்தையே
அடைந்து அதற்குச் சமீபத்திலேயே இருக்கிறான்.

இந்த ஜலத்தை எடுப்பதற்கு முந்தி ஸூர்யாஸ்தமனமாகிவிட்டால்
(முதல் நாளில்)யக்ஞம் ஆரம்பிக்காமலிருந்ததுபோலாம், (மறுநாள் ஆரம்பி
த்தால்) (யக்ஞம்) விச்சின்னமாகிவிடும் (அறுபட்டுப்போம்). தீவட்டிமுதலியவற்றின்
வெளிச்சத்தோடுகூடினதை எடுக்கவேண்டும். ஹிரண்யத்தைக் குடத்தில்
போட்டால் தேஜஸ்ஸோடு கூடினதாகவே எடுப்பார் அல்லது அநேக யாக
ங்களைச்செய்த ப்ராஹ்மணன் க்ருஹத்திலுள்ள குடஜலத்தையாவது எடுக்கலாம்.

எனெனில் அவர்வஸதீவரீயை எடுத்தவராவார். வஸதீவரீயையே எடுக்கிறார். வஸதீவரீ பசுக்களாம். பசுக்களையே ஆரம்பம் முதல் எடுத்து அதன் ஸமீபத்தில் இருப்பார்.

நீரோட்ட திசையைப் பார்த்துக்கொண்டு தீர்த்தத்தை எடுத்தால் இவனிடத்திலிருந்து பசுக்கள். சேர்த்துவிடும். நீரோட்டத்திற்கு எதிரே நின்று எடுப்பார். பசுக்களைத் தடுத்து இவனிடத்தில் பிடித்துக் கொடுக்கிறதாம்.

இந்த்ரன் வ்ருத்ரனைக்கொன்றான். அவன் நீரில் மரித்தான். அதில் பரிசுத்தமானதும், யாகத்திற்குத் தகுதியானதும், தேவதையோடுகூடினதுமான அது தடையில்லாமல் ஓடியது. அது வஹந்தீ (ப்ரவாஹமாக) ஆயிற்று. ப்ரவாஹஜலத்தை எடுக்கிறான். பரிசுத்தமானதும் யாகத்திற்குத்தகுதி ஆனதும் தேவதையோடு கூடினதுமானதயே எடுக்கிறான். சமீபத்திலுள்ள ப்ரவாஹ தீர்த்தத்தைத்தாண்டிச் செல்லக்கூடாது. சமீபத்திலுள்ள ப்ரவாஹதீர்த்தத்தை அவமானம் செய்ததாகும். தேங்கும் (ஓடாத) ஜலத்தை எடுக்கக்கூடாது. தேங்கும் நீர் வருணனால் எடுக்கப்பட்டதாம். தேங்கும் நீரையெடுத்தால் வருணனால் இவனது யக்ஞம் பிடிபட்டுப்போகும்.

பகலில் இரவு நீரில் ப்ரவேசிக்கிறது. ஆதலால் பகலில் நீர் தாம்ர வர்ணமாகக்காணப்படும், இரவானபோது பகல் நீரிற் பிரவேசிக்கிறது. அதனால் இரவில் நீர் காந்தியுள்ளதாகக் காணப்படுகிறது. சாயையும் வெயிலும் சேரும் இடத்தில் எடுக்கிறான். இவனுக்கு (எஜமானனுக்கு)ப் பகல், இரவுகளின் வர்ணத்தைக்கொடுக்கிறான்.

'இந்த தீர்த்தம் அவிஸ்ஸையுடையது', என்றார். அவிஸ்ஸைச்செய்து கொடுப்பதான நீரையே எடுக்கிறான். 'சூர்யன் அவிஸ்ஸோடுகூடியவன்'என்றார். காந்தியுடன் கூடினநீரையே எடுக்கிறான், அநுஷ்டுப் சந்தஸால் எடுக்கிறான். அநுஷ்டுப்புத்தான் வாக்கு; ஸர்வவாக்காலும் இதை எடுக்கிறான்.

நாலுபாகமுள்ள ருக்கால் எடுக்கிறார். மூன்று இடங்களில் (கார்கபத்யம் உத்தரவேதி, ஆகவநீயம்) வைக்கிறான். ஆகமொத்தம் ஏழாம். சக்வரீச் சந்தஸுக்கு ஏழுபாதங்கள். பசுக்கள் சக்வரீ, பசுககளையே அடைகிறான்.

இந்த பூலோகத்திற்கே கார்கபத்யாக்னியை ஆதானம் செய்கிறார்கள். மறுலோகத்திற்கு ஆகவநீயம். கார்கபத்யத்தில் வைக்கிறதால் இகலோகத்தில் பசுவுள்ளவனாக ஆவான். ஆகவநீயத்தில் வைப்பதால் மறுலோகத்தில் பசுவுள்ளவனாவான். இரண்டுகளிலும் வைக்கிறார். இரண்டுலகங்களிலும் பசுவுள்ளனவாகச்செய்கிறான். இராக்ஷஸர்களை விரட்டுவதற்கு நாலாபக்கமும் எடுத்துக்கொண்டுபோகிறான், "இந்த்ராக்நிகளின் பாகமாவாய்'

என்றூர். இது யஜுஸ்படியே. ஆக்நீத்ர திஷ்ண்யத்தில் வைக்கிறூர். ஆக்நீத்ரம் என்பது யக்ஞத்தில் அபஜயம் அடையாத பாகமாம். யக்ஞத்தில் அபஜயமடையாத பாகத்திலேயே வைக்கிறூன். ஒரு யாகம் செய்யப்படும்போது அங்கத்தை விசாரியாமல் செய்யப்படாவிட்டால் அந்தச் சித்ரத்தில் நுழைந்து கெடுத்துவிடுவார்கள். ப்ரவாஹஜலத்தை எடுக்கிறதால் ராக்ஷஸ்கள் நடமாடாதவண்ணம் அந்த அம்சம் செய்ததாகிவிடும். இந்த நீரை அவர்கள் வேறிடம்கொண்டுபோவதில்லை. மூன்றுவது ஸவனம் (ஸோமத்தைப்பிழிதல்) வரையில் யக்ஞம் முடிவதற்கு அவ்விடமே இறக்கிவிடுகிறூர்கள்.

## அநுவாகம். 13.

அபிஷோதவ்யஸ்ய ஸோமஸ்ய சகடாத்- உபாவரோஹ:
(பிழியவேண்டிய ஸோமத்தை வண்டியிலிருந்து கீழேஇறக்க)

1. (ஸோமனைப்பார்த்து) உன்னை ஹ்ருதயமுள்ள மனிதர்களுக்காகவும், மனதுபெற்ற பித்ருக்களுககும், தேவர்களுக்காகவும், ஸூர்யனுக்காகவும் இறக்குகிறேன். இந்த அத்வரத்தை முடிவுபெறச்செய். தேவலோகத்திலிருக்கும் தேவர்களிடத்தில் எங்கள் எங்கள் ஆஹ்வானங்களை(ஸ்தோத்திரங்களை)ஸ்தாபியும். — ஸோமனே, அபிஷவஸ்தானத்திற்கு வந்திறங்கும். பயப்படாதேயும். கம்பம் வேண்டாம், நான் உம்மை ஹிம்ஸிக்கப்போவதில்லை— இதனுல் நீர் தேவலோகப்ரஜைகளை அடைவீர், ப்ரஜைகளும் உம்மை அடையட்டும்.

2. ஆஜ்யாஹூதியால் மூட்டப்பட்ட அக்நி என் ஸ்தோத்திரத்தைக்கேட்கட்டும். வித்யையோடுகூடின தேவதாரூபமான அப்புக்காள் கேளுங்கள். (பிழியக்கொண்டு வந்த இந்த) க்கல்லுகளும் (க்ராவாக்களும்) தெரிந்துகொண்டு யக்ஞத்தைக் கேட்கட்டும். ஸூர்யனும் என் ஸ்தோத்திரத்தை(ஹவ்யத்தை)க்கேட்கட்டும்.

3. தெய்வத்தன்மையுள்ள தீர்த்தமே, தீர்த்தமத்தியில் (இருந்தாலும் அதை நாசம்செய்யாத) அக்நியே, நீங்கள் உமது அல்லைப(ஊர்மியை)த்தேவர்கள் நிமித்தம் தேவர்களிடத்தில் ஸ்தாபியுங்கள், ஸோமஹவிஸூக்கு அதுவேண்டியது.

இந்திரிய வ்ருத்தியைச் செய்வது, குடிப்பதால் அத்யந்தம் சந்தோஷத்தைக்கொடுப்பது. எந்த தேவர்களுக்குப் பாக மாக ஆகிறீர்களோ அந்த ஸோம-பாயிகளிடத்தில் காந்தி யுள்ள ஊர்மியை (ஸ்தாபியுங்கள்.)

4. (ஆஜ்யத்தைப்பார்த்து,) அப்பில் (நீரில்) ஹோமம் செய் தால் நீக்கவேண்டியதாவாய். அப்புக்களின் சத்ருவான உன்னை விலக்குகிறேன்.

5. (அப்புக்களைப் பார்த்து) ஸமுத்ரத்தைப்போல் குறையாம லிருப்பதற்காக எடுக்கிறேன்.

6. அக்நியே எந்த மனிதனை சண்டையில் இரட்சிக்கிறீரோ அந்நிமித்தமாக (வாஜேஷு) [அவிஸ்ஸைக் கிரகிக்க] எவனை அடைகிறீரோ அவன் உமது அநுக்ரஹத்தால் நித்யமான தனங்களை அடைவான்.

---

குறிப்பு:— 1-ல் வண்டியிலிருந்து ஸோமத்தை இறக்குவதற்கு மந்த்ரம். 2-ல் 'அபூதுஷா '*என்ற ப்ராதரநுவாகத்தின்முடிவை ஹோதா படித்த வுடன் அத்வர்யு செய்யவேண்டிய ஹோமத்திற்கு மந்த்ரம் 3-ல் தீர்த்தத்தில் தர்ப்பையைப்போட்டு ஹோமம்செய்ய 4-ல் தர்ப்பைகளால் ஜலத்தின் அழுக் கைப்போக்கிச் சுத்தமாக்கமு—ம். 5-ல் ஹோமம் செய்த தீர்த்தத்தை மைத்ரா வருணன் சமஸத்தால் (ஒருமரத்தட்டால்) எடுக்கமு—ம். 6-ல் க்ரதுகரண ஹோமம் செய்ய மந்த்ரங்கள்.

---

ப்ரும்மவாதிகள் சொல்லுகிறார்கள், எவன்ஸோமனை இறக்கிவைக் கும்போது ஸர்வதேவதைகளையும் இறக்கி வைக்கிறானோ. அவன்தான் அத் வர்யு ஹ்ருதயத்திற்கு உன்னை என்றார் மனுஷ்யர்களுக்கே செய்கிறான். 'உன்னை மனதிற்கு,' என்றார். பித்ருக்களுக்கு இதனால் செய்கிறான். 'வானத் திற்கு உன்னை, உன்னை சூர்யனுக்கு' என்றார். தேவர்களுக்கே இதனால் செய்கிறான். அவ்வளவு பேர்களல்லவா தேவதைகள். அவர்களுக்கே இந்த (ஸோமத்தை) இறக்குகிறார்.

வார்த்தைகள் பேசும் முன்னேயே காலை அனுவாகத்தை (ஸ்தோத் திரத்தை) ஆரம்பம் செய்கிறான். வாக் எவ்வளவு உண்டோ அவ்வளவையும் அடைகிறான்.

---

* [ப்ராதக்காலத்திற்கு முந்தியே ஹோதாவால் சொல்லவேண் டிய ருக்குகளுக்கு ப்ராதரனுவாகம் எனப்பெயர். உபாகரோதி என்றால் ஹோதாவை நோக்கி ப்ரைஷன். சொல்லுகிறான் என்றாகும்.]

'ஆபோ ரேவதீ: க்ஷயதா' (ருக்வேதம் மண்டலம் 10—30—12) என்ற ருக்கை முதலில் சொல்லவேண்டும். யக்ஞமே, அப்பு, (நீர்) யக்ஞத்துக்காகவே ருக்கைச் சொல்லுகிறான். ஸர்வச்சந்தஸ்களையும் படிக்கிறார். சந்தஸ்கள் பசுக்களே. பசுக்களையே அடைகிறான். தேஜஸ்ஸை விரும்புபவனுக்கு காயத்ரீச் சந்தஸ்ஸால் முடிக்கவேண்டும் இந்த்ரியத்தை வேண்டுபவனுக்கு த்ருஷ்டுப்பாலும், பசுவை வேண்டுபவனுக்கு ஜகதியாலும், ப்ரதிஷ்டையை வேண்டுபவனுக்கு அனுஷ்டுப்பாலும், யக்ஞத்தை வேண்டுபவனுக்கு பங்க்தியாலும், அன்னத்தை வேண்டுபவனுக்கு விராஜ் என்றச் சந்தஸ்ஸாலும் (முடிக்கவேண்டும்.)

"ஆஜ்யாகுதியால் மூட்டப்பட்ட அக்நி என் ஸ்தோத்திரத்தைக் கேட்கட்டும்.' என்றார். ஸவிதாவால் தூண்டப்பட்டே தேவதைகளுக்கு விஞ்ஞாபகம் செய்து அப்புவை (நீரை) நோக்கிப்போகிறார். 'ஹோதாவே, அப்புகொண்டு வரும்படிசொல்லும்' என்றார். இப்படி செய்யச் சொல்லப்பட்ட அபீஷ்டகார்யமே நன்றாகச் செய்யப்படுகிறது. மைத்ராவருணனுடைய சமஸ்ஸை வஹிக்கும் ருத்விக்குகளின் பரிசாரகனே, 'இதோ ஓடிவா.' மைத்ராவருணர்களே அப்புக்களைக் கொண்டு வருவோர்கள். ஆதலால் அவர்களோடேயே அப்புவுக்காகப் போகிறான். "தேவத்தன்மையுள்ள தீர்த்தமே, தீர்த்தமத்திலிருந்தும் அதைநாசம் செய்யாத அக்நியே," என்றார். ஆஹுதியிலேயே அப்புவை மீட்டுக்கொண்டு எடுக்கிறார். பிறகு அவிஸ்ஸாகச்செய்து அபிகாரம் செய்யப்பட்டதையே எடுக்கிறான். நீக்கவேண்டியவனாய், 'என்றார் அதன் அழுக்கையே எடுத்து விடுகிறான். சமுத்ரத்தின் குறைவில்லாமைக்காக' என்றார். ஆதலால் சாப்பிட்டாலும் குடித்தாலும் அப்பு குறைவதில்லை.

சாத்வாலம் என்பது யக்ஞத்தின் யோநியாம். வஸதீவரீ என்ற தீர்த்தமே யக்ஞமாம். ஹோதாவின் சமஸத்தையும், மைத்ராவருணன் சமஸத்தையும் சேர்த்துத் தொட்டுக்கொண்டு வஸதீவரீயைப் பெருக்குகிறார். யக்ஞம் யோநியோடு கூட இருப்பதற்காகத் தன் யோனியிலிருந்தே அதை உண்டாக்குகிறார்.

'அத்வர்யுவே அப்புவை (நீரை) அடைந்தாயா' என்றார் அது என்னிடம்வந்திருக்கிறது இதோ பாரும், என்று இப்படிப்பதில் சொன்னார்.

அக்நிஷ்டோமமாக ஆனால் ஹோமம் செய்கிறான். உக்த்யமானால் பரிதியில் துடைப்பார். அதிராத்ரமானால், ஒருயஜுஸ்ஸைச் சொல்லிக் கொண்டு அவிர்த்தானத்தை அடையவேண்டும். யக்ஞக்ரதுக்களுக்கு வித்யாஸத்தைக் குறிக்கவே இப்படிச் செய்யவேண்டும்.

---

# அநுவாகம் 14.

## காம்ய—யாஜ்யா—புரோநுவாக்யாபிதாநம்.

---

1. அக்நியே, நீர் கோரமான சரீரத்துடன் கூடியவராம் (ருத்ரனும்.) சத்ருக்களைத் தோற்கடிக்கும் அஸுரர். தேவ லோகத்திற்கு அவிஸ்ஸைக் கொடுப்பதால் உத்ஸவ உருக் கொண்டவர். பலத்துக்குப் பெயர்பெற்ற மருத் கணங்களோடு சேர்ந்து அவர்கள் ஸைன்யத்தை நியமனஞ்செய்யும். சுகத்தை அடைந்து வாயுவேகமான சிவப்புக்குதிரைகளோடு வருவீர். போஷக தேவதையான பூஷாவாக இருந்து, தானே (அவிஸ்ஸைக் கொடுத்து) பரிசர்யை செய்யும் (யஜமானனைக்) காப்பாற்றுகின்றீர். [ரிக்வே மண் 2—சூக் 1 ரிக் 6 பார்க்க.]

2. (ருத்விக் யஜமானர்களே,) உங்கள் ரக்ஷைக்காகச் சத்ருஉங்களைக் கொல்லும் முன்பே அக்நியை வசப்படுத்திக் கொள்ளுங்கள். அவர் யாகத்தின் ராஜா, (சத்ருக்களிடத்தில்) க்ரூரர், பலத்தைப் (பக்தர்களுக்கு) அளிப்பவர், மேல்லோகம் பூலோகத்தில் அவச்யம் கர்மபலத்தைக் கொடுப்பவர், ஹிரண்யத்தைப்போன்ற உருவத்தைக் கொண்டவர். [ரிக்வே 4—3—1 பார்க்க]

3. இந்த அக்நி மாதரீவான (வேதியின் ஸமீபத்திலுள்ள நல்ல கந்தத்தோடு கூடின, ஆஹவநீய ஸ்தானத்தில்) வீற்றிருந்தார். (இவர்) தேவர்களை அழைப்பவர். மனுஷ்ய ஹோதாவைக்காட்டிலும் விசேஷமாக யக்ஞம் செய்பவர். நித்ய யௌவனத்தைப் பெற்றவர், மேதாவீ, கார்கபத்யாதி ஸ்தானங்களிலிருப்பவர், ஸத்யத்தை உடையவர், மனுஷ்யர்களை போஷிப்பவர். மனுஷ்யன் மத்தியில் உதரத்தில் ஜடராக்நி உருவாய் மூண்டவர். [ரிக்வே 5—1—6 பார்க்க]

4 இந்த அக்நி நம்மால் தேவர்களுக்கு அளிக்கப்பட்ட புரோடாசாஹுதியை இனிமையாகச் செய்தார், ஆதலால் யக்

ஞத்திற்கு நாவைப்போன்று நிற்கும் கூடமான அக்நியை அடைந்தோம். (புரோடாசம் நெய் இவைகளால் நல்ல) கந்தத்தோடு கூடிய இந்த அக்நி நமது ஆயுளைக் காப்பாற்றி இவ்விடம் வரட்டும். நாம் தேவர்களுக்குச் செய்யும் ஹோமத்தை சாஸ்த்ர விதிப்படி செய்யட்டும். [ரிக்வே 10—55—3 பார்க்க]

5. இந்த அக்நி (வானத்தில் நிற்கும் மேகம், பயிர் வாடுமென்ற பீதியைப்போக்கக்கர்ஜிப்பதுபோல்) நம்வீட்டிற்குத்தீவைத்தவனை நக்கிச்சாப்பிட்டுவிட்டுச் செய் கொடிகளை நன்றாகவெளிப்படுத்திக் கர்ஜித்தார். ஏனெனில் பிறந்தவுடன் காந்தியுடன் இப்பொழுதே நாநாவிதமாய் வெளிப்படுத்துவார். மேல் லோகம் கீழ்லோகம் எல்லாம் தன் கிரணங்களால் நாலுபக்கமும் ப்ரகாசிக்கிறார். [ரிக்வே 10—45—4 பார்க்க]

6. அத்யந்தம் விஸ்தாரத்தைப் பெற்றவனே, உம்மிடத்தில் இரவும் பகலும் யக்ஞத்திற்குத் தகுந்த ஹவிஸ்ஸுகள் வந்து சேருகின்றன, சுட்டுப்பாழான ஸர்வ புவநங்களும் சுத்தமாக்கும் ('பாவகே') உமது அநுக்ரகத்தால் மறுபடி சௌபாக்யத்தை அடைந்தன. [ரிக்வே 6—5—2 பார்க்க]

7. எல்லோரைக்காட்டிலும் அங்கஸாரம் பெற்ற அக்நியே, நல்வேதிகளைப் பெற்றஎல்லா ப்ரஜைகளும் நாநாவிதமான காமிதார்த்த ஸித்தியைக் கொடுக்கும் உம்மிடத்தில் யத்நத்தைச் செய்கிறார்கள். [ரிக்வே 8—43—18 பார்க்க]

8. உமது ரக்ஷணையைக் கொண்டு அந்த அபீஷ்டபலத்தை நன்றாய் அடைவோமாக. தனமுடையோனே, நல்லபுத்ர பௌத்ரர்களோடு கூடின தனத்தை அடைவோமாக. அந்நத்தை இச்சிக்கும் நாங்கள் அந்நத்தை எல்லாவிடத்திலிருந்தும் அடைவோமாக மரணமற்றவனே உமது ப்ரஸாதத்தால் அழிவற்ற யசஸ்ஸை அடைவோமாக. [ரிக்வே 6—5—7 பார்க்க]

9 விசேஷமாக வியோகத்தைச் செய்கிறவனே, ருத்விக்குகளால் போற்றப்படுபவனே, அஹஸ்ஸிலில் வாஸம் செய்பவ

னே. ச்ரேஷ்டமானதும் காந்திபெற்றதும் அனேகரால் விரும்பப் பெற்றதுமான வஸுவைக் கொண்டுவாரும். [ரிக்வே 2—7—1 பார்க்க]

10 சுத்தம் செய்பவனே, ஆஹவநீய, கார்கபத்யம் என்ற பல பேர்களையும் பலவித குணங்களையும் பெற்றவனே (புருதம்) விஸ்தாரமான புரோடாசம் முதலிய ஹவிஸ்ஸுகளைப் பக்ஷித்துக்கொண்டு எந்த அக்நி யஜமாந க்ருஹத்துக்கு ஒவ்வொரு நாளும் போகிறாரோ அந்த அக்நி, காந்தியைப் பெற்றவர். பலத்தை விசேஷமாகச் செய்பவர். தேவயஜனங்களில் விளங்குபவர். ஜரையற்ற தேவர்களால் ஸ்துதிசெய்து சூழப்பட்டவர். வைரியைத் தொலைப்பவர். [ரிக்வே 4—6-2பார்க்க]

11 ஸர்வச்லாக்யமான இந்த அக்நி நாலுபக்கங்களிலும் உனக்கு ஆயுஸ்ஸைக் கொடுக்கட்டும். அபம்ருத்யுவால் பிடிக்கப்பட்டாலும் உமது அநுக்ரகத்தால் திரும்பிவரட்டும். உனது வ்யாதியை நாசம் செய்கிறேன். [ரிக்வே 10—45—1 பார்க்க]

12 அக்நியே, ஆயுளை வ்ருத்திசெய்யும், புரோடாசாதிகளை ஸேவிப்பவரும், க்ருதத்திற்குப் பதிலளிப்பவரும் க்ருதத்தைத் தனக்குக் காரணமாகக் கொண்டவரும் ஆன நீர்,—இனிமையானதும்—நிர்மலமானதுமான கோவின் க்ருதத்தைக் குடித்து பிதா புத்ரனைப்போல் யஜமானனை நாலுதிக்கிலும் இரட்சியும். [ரிக்வே 2—7—4 பார்க்க]

13 அனேக யஜமானர்களைப் பெற்றவனே, எல்லாவற்றையும் அறிந்தவனே, ஒவ்வொருநாளும் யஜமானன் வீட்டை நோக்கிச்செல்லும் உமக்கு நல்லதுதியை இழைக்கிறேன். [ரிக்வே 10—45—8 பார்க்க]

14 மேல் உலகத்தில் முதலில் சூரியனுருவாகப் பிறந்தார், நமது லோகத்தில் எல்லாவற்றையும் அறிந்த ஜாதவேதஸ்ஸென்ற இரண்டாவது ஜன்மத்தைப் பெற்றார். நீரில் (வடவை என்ற அக்நிரூபமாக்) மூன்றும் ஜன்மத்தைப்பெற்றார்.

எப்போதும் இந்த மூன்று ஜன்மங்களிலும் யஜமானனிடத்தில் அநுக்ரகபுத்தியையுடையவர். இவரைப் புரோடாசாதிகளால் வ்ருத்திசெய்து புத்தியைத் தன்மயமாக்கி மரணம் வரையிலும் பரிசர்யை செய்கிறான். [ரிக்வே-1-71-8 பார்க்க]

15 பரிசுத்தம் செய்யும் அக்நியே, நீர் காந்தியுள்ளவர், வந்தனம் செய்யத்தகுந்தவர். க்ருதத்தால் ஹோமம் செய்யப்பட்டு விசேஷமாக விளங்குகிறீர். [ரிக்வே 3—19—3 பார்க்க.]

16 அழகான ஸுவர்ணம்போன்ற அக்நி, பிறனால் தடைசெய்யமுடியாத ஜீவனத்தை அடைய விரும்பிப் பெரிய தேஜஸோடு விளங்குகிறார். அந்த அக்நி அந்நத்தால் மரணத்தை ஒழித்தார். ஏனெனில் இவரையே தேவலோகவாஸியான கணங்கள் நல்ல ரேதஸ்ஸைப்பெற்று உண்டாக்கினார்கள். [ரிக்வே 5—23—1 பார்க்க.]

17 எந்தத் தேஜஸ், அபீஷ்டஸித்திக்காக யஜமானனைக்காக்கும் (அக்நியை) வ்யாபித்து நின்றதோ எந்த சுத்த ரேதஸ் மாதாபிதாக்களால் விடப்பட்டதோ, அந்த தேஜஸாலும் ரேதஸ்ஸாலும் மேல்லோகத்திலுள்ள அக்நி ஸமீபத்தகாலத்தில், பலத்தைப்பெற்றவனும், தோஷமற்றவனும், யுவாவானவனும், தன்வசத்திலுள்ள புத்தியுள்ளவனுமான புருஷனை உத்பாதநம் செய்து, இதைத்தடைப்படுத்தும் பாபத்தையும் நாசம்செய்வார். [ரிக்வே 5—23—2 பார்க்க.]

18 அந்த (யஜமானன்) மிகவும் தேஜஸ்பெற்ற (உமது) மனதால் ரட்சிக்கப்படுகிறான். அக்நியே நல்ல புத்ரபௌத்ரர்களையுடையவனாய் உபகாரம் செய்ய ப்ரியப்படும் மனிதச்ரேஷ்டனை யஜமானனுக்குத் தனத்தைக்கொடும். உமது அநுக்கிரஹத்தால் ப்ரபுவாகி,நாங்கள் விசேஷ சொத்துள்ளவர்களாக (யாகாநுஷ்டாநத்தால்) உமக்கு விசேஷமாக ஸ்துதி சஸ்த்ரங்களைச்சொல்லிக்கொண்டாடுவோம் [ரிக்வே 8—45—11 பார்க்க.]

19 அக்நியே எங்கள் யசஸைக்கெடுக்கும் வைரியை உடனே எங்கள் வசப்படுத்தும், எங்கள் அந்நத்தின் நிமித்தம் உம

து ஸங்கிராமத்திரத்தில் எங்கள் எதிரிகளாகிய எல்லா மனுஷ்யர்களும் தோல்வியடைவார்கள். [ரிக்வே 6—4—4 பார்க்க.]

20 பலவானே, அக்நியே, சத்ருஸேனையை அடக்கவல்ல உமது தனத்தைக்கொண்டுசேரும். ஏனெனில் நீர் எப்பொழுதும் உள்ளவர், ஆச்சரியமான சரித்திரமுடையவர் ஸ்தோக்க ளுள்ள அந்நத்தைக்கொடுப்பவர் நீரே.[ரிக்வே9—66—19 பார்க்க.]

21 அக்நிக்கு ஸ்தோத்திரங்களால் பணிவிடை செய்வோம். வ்ருஷபம், கன்றீனுதை 'வசை' என்று சொல்லும் பசு இவைகளை அவிஸ்ஸாகக் கொள்ளுபவனும், ஸோமத்துடன் கூடின ப்ருஷ்டஸ்தோத்திரங்களைப் பெறுபவனும் அந்நத்தைப் பங்கிட்டு வகுப்பவனும் இந்த அக்நியே. [ரிக்வே 9—66—21 பார்க்க]

22 புத்ரனைப்போல் இஷ்டத்தைச் செய்வோனே, நீர்தான் வாக்கபிமாநிதேவன். பிறந்ததாலேயே அந்நத்தையும் க்ருகத்தையும் செய்தீர். போஜநம் செய்த அன்னத்தை ஜீரணம் செய்யும். ஜாடராக்நிரூபமாக இருக்கிறீர். பல ரஸத்தைக் கொடுக்கும் நீர் ரஸத்தைக்கொடும். அரசன்போல் ஜெயம் பெறும். (ஹிம்ஸாதி) தோஷமில்லாமலிருக்கும் (யஜமாநநிடத்தில்) அநுக்கிரகம் செய்ய உள்ளே வாஸம் செய்யும். [ரிக்வே5—26—1 பார்க்க]

23 அக்நியே, எங்கள் ஆயுளை (வளர்வதற்கேற்ப)ச் சுத்திசெய்கிறாய். (க்ஷீராதி) அன்னரஸத்தையும் அன்னத்தையும் எங்களுக்குச் சேரும். எங்கள் உபத்ரவத்தைத் தூரத்தில் கொண்டுபோய் நாசப்படுத்தும். [ரிக்வே 1-12-10 பார்க்க.]

24 அக்நியே, நல்லவேலையைச் செய்பவரே, எமது வர்ச்சஸையும் நல்ல ஸாமர்த்தியத்தையும் வ்ருத்திசெய்யும். என்னிடத்தில் புஷ்டியையும் தனத்தையும் ஸ்தாபியும். [ரிக்வே 8-44-21 பார்க்க.]

25 அக்நியே, சுத்தம் செய்பவனே, விளக்கிவைக்கும் தேவனே, காந்தியும் அழகும் வாய்ந்த வாக்கால் தேவர்களைக்கொண்டு சேர்த்துப் பூஜியும். [ரிக்வே 8—44—21பார்க்க]

26 பரிசுத்தம் செய்வோனே, காந்தியுள்ளோனே, எங்களுக்காகத் தேவர்களை இவ்விடம் சேர்ப்பியும். யக்ஞத்தையும் ஹவிஸ்ஸையும் தேவர்களிடம் சேர்ப்பியும்.

27 அக்நி (தஹித்தல், பாகம்செய்தல், ப்ரகாசித்தல் என்ற) வ்ரதங்களைச் சுத்தமாக அனுஷ்டிப்பவன். விப்ரனென்று சுத்தமுள்ளவன், கவியென்று சுத்தமுள்ளவன். ஆஹுதியால் விசேஷமாக விளங்குபவன்.

28 அக்நியே சுத்தமான உனது கிரணங்கள் ப்ரகாசித்துக்கொண்டு மேல்போகின்றன. உம்மைப் பூஜைசெய்பவர்கள் பிரகாசிக்கும் தேவதைகளை யடைகிறார்கள்.

(3-வது பிரபாடகம் முற்றிற்று.)

# இதனோடு முதற்காண்டத்தின்

# முதற்பாக முடிந்தது.

இந்த 175 பக்கங்களையும் ஒரு புத்தகமாகப் பையிண்டுசெய்து கொள்ளவும். இம்மூன்று பிரபாடகங்களுஞ் சேர்ந்து பயின்டு புத்தகமாக இரண்டேகால் ரூபாய்க்கு விலைக்கு கிடைக்கும்.

